S. Ramanuja

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீமத் வரவர முநயே நம:
ஸ்ரீமத் வாநாசல முநயே நம:

# ஸ்ரீ வரமங்கைமுனி வைபவம்

[ஸ்ரீ வானமாமலை
முதல் ஸ்வாமியின் சரித்திரம்]

ஸ்ரீ வானமாமலை மடம் 27-வது பட்டம்
ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார்யரான
சின்ன ராமாநுஜ ஸ்வாமியின்
நியமனத்தால் வெளியிடப்பட்டது

மதராஸ்
ஜய ஞூ மாசி மீ

 [விலை ரூ 1



27-வது பட்டம் ஸ்ரீ சின்ன ராமாநுஜ ஸ்வாமி

ஸ்ரீமத்வாநாசல மஹாமுநயே நம:

ஸ்ரீவரமங்கை முனி வைபவம்

# முகவுரை

இந்த க்ரந்தம், ககநகிரிமுநி சரிதம் என்னும் ஸம்ஸ்க்ருத க்ரந்தத்தையும், மணவாள மாமுனிகள் விஷயமான யதீந்த்ர ப்ரவண ப்ரபாவம் என்னும் க்ரந்தத்தையும் தழுவி எழுதப்பட்டிருப்பதை நாம் இதைப் படிக்கும்போதே அறியலாம். இதை இயற்றியவர், தாம் கூறும் வரமங்கை முநிவரின் சரிதங்கள் எல்லாவற்றிற்கும் ககநகிரி முநி சரித ச்லோகங்களை மேற்கோளாகக் காட்டுவதோடு பெரும்பாலும் யதீந்த்ர ப்ரவண ப்ரபாவத்தின் நடையையும், சில இடங்களில் அதன் பங்க்திகளையும் கையாண்டு, அதிலுள்ள வரலாறுகளைத் தழுவியும் எழுதியிருக்கிறார்.

ககநகிரிமுநி சரிதத்தை அருளியவர் முதலாவது (ஒன்றான) வானமாமலை ராமானுஜ ஜீயர் ஸ்வாமியின் ஞாந புத்ரனென்று ப்ரஸித்தராய், அவர் அஷ்டதிக் கஜங்களுள் ஒருவரான ராமானுஜன் பிள்ளான் என்பவரின் பௌத்ரராவார். இவர் வானமாமலைப் பெருமாளின் அம்சமாய் அவதரித்து, "பகவத் விஷயத்தில் நிகரற்ற பாண்டித்யம் வாய்ந்தவர்" என்று சிறந்த பண்டிதர்களாலும் கொண்டாடப் பட்டவராய், ஸுந்தரார்யர் என்ற திருநாமத்தையுடையராய் ஆத்தான் என்று அழைக்கப்பெற்றவர். இவர் தமது காலத்தில் வானமாமலை ஆஸ்தானத்தில் எழுந்தருளியிருந்த ராமானுஜ ஜீயரும், ஸ்வப்நத்தில் வானமாமலைப் பெருமாளும் நியமிக்க, ககநகிரிமுநி சரிதத்தை ஸம்ஸ்கிருத ச்லோக ரூபமாய் அருளிச்செய்தார். இவர், தமது பிதா, பிதாமஹன் முதலிய பெரியோர்கள் மூலமாகவும் யதீந்த்ர ப்ரவணப்ரபாவம் மூலமாகவும் ககநகிரி முநிவரின் சரிதங்களை நன்குணர்ந்து அதை விஸ்தாரமாய் அருளிச் செய்தார். இந்த ககநகிரிமுநி சரிதம் வானமாமலை மடத்திய புஸ்தகசாலையில் இப்பொழுதும் ஸுரக்ஷிதமாய் இருக்கிறது. இதை மூல

ப்ரமாணமாகக் கொண்டே இந்த ஸ்ரீவரமங்கை முநி வைபவம் எழுதப்பட்டிருக்கிறது. இந்த ஸ்ரீவரமங்கைமுநி வைபவமும் மடத்துப் புஸ்தக சாலையில் ப்ராசீனமாய் சிதில மாய் இரண்டு ப்ரதிகளாக இருந்தது. அவ்விரண்டையும் சரி வர ஒத்திட்டுப் பார்த்து, எழுதி முடித்து, தற்பொழுது எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீமத் பரமஹம்ஸ பரிவ்ராஜகாசார் யோபய வேதாந்தாசார்யரான 27-வது பட்டம் சின்ன ராமானுஜ ஜீயர் ஸ்வாமியின் அநுக்ரஹத்தினாலும் நிய மனத்தாலும் இந்த க்ரந்தம் வெளியிடப்பட்டுள்ளது. இதில் கூறப்பட்டுள்ள விஷயங்களில் சில யதீந்த்ரப்ரவண ப்ரபா வத்தில் சுருக்கமாக அல்லது ஸூசகமாக அல்லது பரக்கக் கூறப்பட்டதே என்பதை நன்கு உற்று நோக்குமவர்கள் அறியக்கூடும். இதைப் பரிசோதித்து அச்சிடுவித்தபோது அநவதாநத்தால் பிழைகள் நேர்ந்திருந்தால், இவற்றை அடுத்த பதிப்பில் நீக்கிவிடுவோம்.

இந்நூலைத்தவிர தொட்டையங்கார் அப்பை என்னும் மஹநீயர் இந்த வரமங்கை முநி விஷயமாய் அருளிச் செய் திருக்கும் மங்களாசாஸநம், ப்ரபத்தி என்னும் ஸ்தோத்ரங் கள் தமிழ் உரையுடன் அச்சிடப்படுகின்றன. முதலாவது ஸ்வாமிக்குப் பின் அந்த வானமாமலை ஆஸ்தாநத்தில் எழுந் தருளியிருந்து அதை அலங்கரித்த ஸ்வாமிகளின் வைபவங் களை எல்லாம் நன்கு தெளிவுபடுத்தும் "ககநகிரிமுநி குரு பரம்பரா ப்ரபாவம்" என்னும் க்ரந்தத்தையும் அச்சிடும்படி ஸ்வாமி நியமனம் ஆகியிருக்கிறது. இவைகள் இதுகாறும் வெளிவராதவைகளாதலால், மடத்து ஸம்ப்ரதாயத்தைச் சேர்ந்தவர்களும் மற்றும் ஆஸ்திகர்களும், இவைகளை ஆத ரித்து, வரமங்கை முநிவரரின் சரிதத்தை நன்குணர்ந்து, அவ ரது கடாக்ஷத்துக் கிலக்காகுமாறு வேண்டிக்கொள்ளு கிறோம்.

---



ஸ்ரீமத் வரவரமுநயேநம:

ஸ்ரீமத்வாநாசலமுநயேநம:

# ஸ்ரீ வரமங்கைமுனி வைபவம்

[1]ஸ்ரீசைலேச தயாபாத்ரம், தீபக்த்யாதி குணர்ணவம் |
யதீந்த்ரப்ரவணம் வந்தே, ரம்யஜாமாதரம் முநிம் ||
[2]ரம்யஜாமாத்ருயோகீந்த்ர - பாதரேகாமயம் ஸதா |
ததாயத்தாத்மஸத்தாதிம் ராமாநுஜமுநிம் பஜே ||

ச்ரிய:பதியாய் ஸ்ரீவைகுண்டநிகேதநனாய் ஸ்ரீமதநந்த முகநித்யஸூரிபரிஷந்நிஷேவ்யமாணனாய், அவாப்தஸமஸ்த காமனாய் எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரன் [3]"வைகுண்

---

1 श्रीशैलेशदयापात्रं धीभक्त्यादिगुणार्णवम् ।
यतीन्द्रप्रवणं वन्दे रम्यजामातरम्मुनिम् ॥
2 रम्यजामातृयोगीन्द्र-पादरेखामयं सदा ।
तदायत्तात्मसत्तादिं रामानुजमुनिं भजे ॥
3 वैकुण्ठे तु परे लोके श्रिया सार्द्धं जगत्पतिः ।
आस्ते विष्णुरचिन्त्यात्मा भक्तै र्भागवतैस्सह ॥

டேது பரே லோகே ச்ரியாஸார்த்தம் ஜகத்பதி:| ஆஸ்தே விஷ்ணு ரசிந்த்யாத்மா பக்தைர் பாகவதை: ஸஹ ||'' என்கிறபடியே பெரிய பிராட்டியார் முதலான திவ்யமஹிஷிகளோடும் நித்யமுக்தர்களோடும் கூட நித்யவிபூதியிலே நிரதிசயாநந்தத்தைஅநுபவியாநிற்கச் செய்தேயும், இவர்களோபாதி ஸம்ஸாரிகளும் நம்மை அநுபவித்து அநுபவ ஜநித ப்ரீதி காரித அசேஷாவஸ்தோசித அசேஷசேஷதைகரதிரூப நித்ய நிரவத்ய நிரதிசயாநந்தரூப மத்கைங்கர்யமாகிற பரம புருஷார்த்தத்தைப் பெற்று வாழுகைக்கு ப்ராப்தி உண்டாயிருக்க, இவர்கள் இழந்திருப்பதே என்று மிகவும் வ்யாகுலாந்த:கரணனாய் அங்குற்றை அநுபவங்கள் ஒன்றும் உண்டதுருக்காட்டாதே தனியரைப்போலே [1]"ஸ ஏகாகீ நரமேத'' என்கிறபடியே போர நொந்து இவர்கள் கரணகளேபர சூன்யராய் இறகொடிந்த பக்ஷிகளைப் போலே இருக்கிறபடியைக் கண்டு [2]"கரணகளேபரை: கடயிதும் தயமானமநா'' வாய் பரமதயாளுவாய்க்கொண்டு தன்னை அனுபவிக்கைக்கு உறுப்பாக அகிலாத்மாக்களுக்கும் கரணகளேபர ப்ரதாநம் பண்ணியருள, இவர்களும் அவன் நினைவின்படி செய்யாதே ஸமித்தைஅறுக்கக்கொடுத்த கத்தியைக் கொண்டு பசுவின் வாலை அறுப்பாரைப் போலேயும், களையெடுக்கக் கொடுத்த கோலைக் கொண்டு கண்ணைக் கிளரிக்கொள்வாரைப்போலேயும், கரையேறக் கொடுத்த தெப்பத்தைக் கொண்டு நீர்வாக்காலே ஒழுகி ஸமுத்ரத்தில் செல்லுமாப்போலேயும், தன் விஷயத்தில் கைங்கர்யங்களைப் பண்ணி உஜ்ஜீவிக்கக் கொடுத்த கரணகளேபரங்களைக் கொண்டு ''ஆக்கையின் வழியுழன்று'' சப்தாதிவிஷய ப்ராவண்யத்துக்கு உறுப்பாக்கி கர்மப்ரவாஹத்தாலே பிறவி என்னும் கடலிலே புகுந்து துக்கப்படுகிறபடியைக்

---

[1] स एकाकी न रमेत ।

[2] करणकलेबरैर्घटयितुं दयमानमनाः ।

கண்டு, நல்வழிகண்டு நடக்கைக்கு உடலாக [1]"சாஸநாச் சாஸ்த்ரம்" என்கிறபடியே க்ருபையாலே சாஸ்த்ரப்ரதாநம் பண்ணின விடத்திலும் அதன்படி செய்யாதே, [2]"ஈச்வரோஹமஹம் போகீ ஸித்தோஹம் பலவான் ஸுகீ | ஆட்யோ பிஜநவாநஸ்மி கோந்யோஸ்தி ஸத்ருசோமயா ||" என்றும் [3]"யோந்யதாஸந்த மாத்மாநம் அந்யதா ப்ரதிபத்யதே | கிம்தேந நக்ருதம் பாபம் சோரேணாத்மாபஹாரிணா ||" என்றும் சொல்லுகிறபடியே, அபதே ப்ரவ்ருத்தராய் இருக்கிறபடியைக் கண்டு ஓலைப்புறத்துச் செல்லாத ராஜ்யத்தை எடுத்துவிட்டுக் குறும்பறுக்கும் ராஜாக்களைப்போலே, நாமே போய் இவர்களை வாரிக் கைப்பிடியாகப் பிடித்துக்கொண்டு வரவேணுமென்று ராமக்ருஷ்ணாத்யவதாரமாய் வந்தவதரித்து "படாதனபட்டு மனிசர்க்காய்" திருத்தப் பார்த்த விடத்திலும் "அஹம்" என்றெதிரிட்டு அதமமான கதிகளிலே விழுகிறபடியைக் கண்டு, விஸஜாதீயரான நமக்கு இது ஸாத்யமன்று என்று பார்த்து, மிருகம் பிடிப்பார் தீவகத்தையிட்டுப் பிடிக்குமாப்போலே மநுஷ்ய ஸஜாதீயரான ஆழ்வார்களை இடுவித்து ஜகத்தைத் திருத்தவேண்டுமென்று பார்த்தருளி ஸ்ரீவத்ஸ கௌஸ்துப வைஜயந்தீ வனமாலைகளையும் ஸ்ரீ பூமிநீளைகளையும் ஸ்ரீபஞ்சாயுதாழ்வார்களையும் அநந்த கருடவிஷ்வக்ஸேந ப்ரப்ருதிகளையும் பார்த்து, "நீங்கள் போய் நாநா வர்ணங்களிலும் அவதரித்து முன்பு நாம் சேதநோஜ்ஜீவநார்த்தம் சிஷ்யாசார்ய க்ரமத்தை வெளியிடுகைக்காக நரநாராயணாதிரூபேண நின்று வெளியிட்ட ஸகல

---

[1] शासनाच्छास्त्रम् ।

[2] ईश्वरोहमहं भोगी सिद्धोहं बलवान्सुखी ।
आढ्योऽभिजनवानस्मि कोन्योस्ति सदृशो मया ॥

[3] योन्यथासन्तमात्मान मन्यथा प्रतिपद्यते ।
किन्तेन न कृतं पापं चोरेणात्मापहारिणा ॥

வேத சாஸ்த்ரங்களுக்கும் ஜநநியாயிருந்துள்ள மந்த்ர, மந்த்ரார்த்தங்களையும் பலமுகமாக வெளியிட்டு ப்ரகாசிப்பித்து, சிஷ்யாசார்ய க்ரமங்களையும் விசதீகரித்து, ஸகல சேதநர்களையும் உஜ்ஜீவிப்பியுங்கோள்" என்று நியமித்தருள, அவர்களும் ஓரோ கால விசேஷங்களிலே ஓரோர் அம்சங்களாயும் ஆசார்யசிஷ்யர்களாயும் ஓரோர் அவதாரங்களாய் அவதரித்து ஜகத்தைத் திருத்தி வாழ்வித்தருளின விஷயங்களை எல்லாம் எல்லாரும் அறிந்து உஜ்ஜீவிக்கும்படி காலங்களுக்கொத்தபடி குருபரம்பரை, யதீந்த்ரப்ரவண ப்ரபாவம் என்னும் இரண்டு ப்ரபந்தங்களை ஒன்றுக்கொன்று சேஷமாம்படி முன்புள்ள மஹாநுபாவர்கள் அருளிச்செய்து வாழ்வித்தருளினார்கள்.

அநந்தரம் இப்படித் தாமே சிஷ்யனுமாய் ஆசார்யனுமாய் நின்று சிஷ்யாசார்ய க்ரமங்களையெல்லாம் வெளியிட்டருளி ஜகத்தை வாழ்வித்தவடைவிலே மணவாளமாமுனிகள் ஆசார்யராயும் வானமாமலை ராமானுஜ ஜீயர் சிஷ்யராயும் அவதரித்தருளின க்ரமங்களை ப்ரதிபாதிக்கிற யதீந்த்ர ப்ரவண ப்ரபாவத்திலே ஆசார்ய வைபவத்தை விஸ்தாரமாகவும் சிஷ்யரான வானமாமலை ஜீயர் வைபவங்களிலே முக்யமான சில விஷயங்களை மட்டும் சொல்லி ஸங்க்ரஹித்தும் இருப்பதாலே, அந்த வானமாமலை ராமானுஜ ஜீயருடைய வைபவங்களையெல்லாம் அவ்வாசார்ய வைபவத்தோடு மிச்ரமாய் விஸ்தரித்து, யதீந்த்ர ப்ரவணப்ரபாவத்தையும், ககநகிரிமுனி சரிதத்தையும், மற்றும் பூர்வீகோக்திகளையும் ப்ரமாணமாகக் கொண்டு ஆசார்ய க்ருபையாலே தெரிந்தவரையில் ப்ரதிபாதிக்கப்படுகிறது இப்ரபந்தத்தாலே.

[1]"வரமங்கா மஹாதேவீ ககநாசலயோகிந:|
பராநுபாவபோதாய ஸுப்ரபாதம் தநோத்விஹ ||

---

[1] वरमङ्गा महादेवी गगनाचलयोगिनः ।
परानुभावबोधाय सुप्रभातं तनोत्विह ॥

ச்ரிய: பதியாய், பரமகாருணிகனாய், திருவரங்கத்தர வணையில் "உறங்குவான்போல் யோகுசெய்து" என்கிற படியே ஜகத்ரக்ஷண சிந்தாயுக்தனாய்க் கண்வளர்ந்தருளுகிற பெரிய பெருமாளுடைய நியோகத்தாலே திருவநந்தாழ்வான் அழகிய மணவாளப் பெருமாள் நாயனாராக அவதரித்தருளி ஸகல கலாவல்லபராய் வாழ்ந்தருளுகிற காலத்திலே, திருவநந்தாழ்வானும் பெருமாள் நியோகத்தின்படியே ஜகத்தைத் திருத்தவேண்டி இவ்வவதாரத்துக்கு உதவும்படி ஒரு சிஷ்யாவதாரத்துக்கு விரகு ஏதென்று பார்க்குமளவிலே [1]"அஸ்த்யத்ர வரமங்காபூர் தக்ஷிணாசா விபூஷணம்| யத்ராநுஷ்டித ஸர்வேஜ்யா வஸந்தி ஜ்யாம்ருதாந்தஸ:|| ஸ்ரீரங்கராஜநாமாஸீத்தேஷு தத்ரபவாந் ஸுதீ:| ஸ்ரீசைலேசார்ய சரண-நளிநாளிகுலாதிப:|| இந்திராயா: ப்ரஸாதேந ஸம்பதஸ் ஸர்வதார்ச்ரய:| ஜ்ஞானவைராக்ய ஸம்பந்நோ லேபே புத்ர த்ரயம் ததா|| ஆஸ்திகம் தைஷ்டிகம் தத்ர மத்யமம் தநயம் புதா:| பரதந்த்ரம் விது: பித்ரோ: ஸ்ரீ ஸௌம்யவரதாபிதம்|| என்கிற ககநகிரிமுனி சரிதத்தின்படியே, "தெருள்கொள் நான்மறை வல்லவர் பலர் வாழ் சிரீவரமங்கலநகர்"

---

[1] अस्त्यत्र वरमङ्गापूर्दक्षिणाशा विभूषणम् ।
यत्रानुष्ठितसर्वेज्या वसन्ति ज्यामृतान्धसः ॥
श्रीरङ्गराजनामासीत्तेषु तत्रभवान्सुधीः ।
श्रीशैलेशार्यचरणनलिनालिकुलाधिपः ॥
इन्दिरायाः प्रसादेन संपदस्सर्वदाश्रयः ।
ज्ञानवैराग्यसंपन्नो लेभे पुत्रत्रयं तदा ॥
आस्तिकं नैष्ठिकं तत्र मध्यमं तनयं बुधाः ।
परतन्त्रं विदुः पित्रोश्श्रीसौम्यवरदाभिधम् ॥

என்றும், "தேறு ஞானத்தர் வேத வேள்வியருச் சிரீவரமங்கல நகர்" என்றும், "செய்தவேள்வியர் வையத்தேவரருச் சிரீவரமங்கல நகர்" என்றும், "செங்தொழிலவர் வேத வேள்வி யருச் சிரீவரமங்கல நகர்" என்றும், "தெள்ளியார் திருநான்மறைகள் வல்லார் மலிதண் சிரீவரமங்கை" என்றும் சொல்லுகையில் பர்யாப்தி பிறவாமையாலே ஒருகால் போலே ஐங்கால் சொல்லும்படியான குணபூர்த்தியையுடையவர்களென்றும், "செய்தவேள்வியர்" என்று ஸ்ரீக்ருஷ்ணாச்ரிதராகையாலே ஸ்வரூபஸத்தை பெற்று க்ருதக்ருத்யர்களென்றும் ஆழ்வார் மங்களாசாஸநவிஷய பூத ஸ்ரீவைஷ்ணவ பூர்ணமாய் தென்திசையில் திசை விளக்காய் ப்ரகாசியா நின்றுள்ள சிரீவரமங்கல நகரிலே அபிஜந வித்யா வ்ருத்தங்களாலே உயர்ந்தவர்களாய் ஏழாட்காலும் புறந்தொழாது குடிகுடி வழிவந்தாட் செய்யுமவர்களான அச்செய்த வேள்வியர் குலத்திலே, எல்லாரும் பூஜ்யரென்று கொண்டாடும்படியான ஞானபூர்த்தியுடையராய் திருவாய்மொழிப் பிள்ளை திருவடிகளில் ஸம்பந்தமுடையராய் லக்ஷ்மீ கடாக்ஷத்திற்குப் பூர்ணபாத்ரராய் ஞானபக்தி வைராக்யாதி குணகண பரிபூர்ணராய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீரங்காசார்யருக்குத் திருக்குமாரராய், [1]"ரக்தாக்ஷ்யாஹ்வயவத்ஸரே ஸமஜநி ஸ்ரீவாநசைலே புரே கந்யாமாஸி லஸத் புநர்வஸுதிநே ரம்யோபயந்த்ரம்சஜ:| ஸ்ரீமத்காரிகுமாரதிவ்ய வசஸா விச்ராந்த வம்சோதிதச் ஸ்ரீரங்கார்யவரஸ்ய ரம்ய வரத: க்லப்தேஜ்யவம்சயஸ் ஸுத:" என்கிறபடியே,

---

[1] रक्ताक्ष्याह्वयवत्सरे समजनि श्रीवानशैले पुरे
कन्यामासि लसत्पुनर्वसुदिने रम्योपयन्त्रंशजः ।
श्रीमत्कारिकुमारदिव्यवचसा विश्रान्तवंशोदित
श्रीरङ्गार्यवरस्य रम्यवरदः क्लृप्तेज्यवंश्य स्सुतः ॥

ரக்தாக்ஷி நாம ஸம்வத்ஸரத்தில் கந்யா மாஸத்தில் புனர்வஸு நக்ஷத்திரத்தில்[1] "சிஷ்யாசார்யதநுத்வயீம் நிரபஜத் ப்ராயேண லக்ஷ்மீபதிர் ஹ்யேகோபூத் நரஸம்ஞக ஸ்தத பரோ நாராயணாக்ய: புரா| அத்யத்வேகதர: க்ருபாம்ருத நிதிஸ் ஸௌம்யோபயந்தா முநிஸ் தச்சிஷ்யாக்ரஸரோ பரோ விஜயதே ராமானுஜாக்யோ முநி:" என்கிறபடியே அழகிய மணவாளப் பெருமாள் நாயனாரம்சமாய் தச்சிஷ்யராய் அவதரித்தருளினார். இவ்வவதாரந்தான் நாராயணாம்சமான நராவதாரம்போலேயும், சடகோபாம்சமாய் மதுரகவி அவதாரம் போலேயும், ராமானுஜாம்சமாய் முதலியாண்டான் அவதாரம் போலேயும், அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் அம்சமாய் அவதரித்த அவதாரமாகும். ஸ்ரீரங்காசார்யருக்கு அவதரித்தருளின மூன்று குமாரர்களில் இரண்டாவது குமாரராய் அவதரித்தவர் இவர். ஸ்ரீரங்காசார்யரும் இவருடைய திருமேனி அழகைக் கண்டு அழகிய வரதரென்று இவருக்குத் திருநாமம் சாத்தியருளினார். இவ்வழகிய வரதரை ஜ்ஞாநிகள் கடாக்ஷித்து இவர் ஓர் அம்சாவதாரமென்றும், மஹா ஆஸ்திகரென்றும், குரு சுச்ரூஷையை ஸ்வரூபமாகவுடையவரென்றும் நினைத்து ஆநந்தித்தார்கள். இப்படி அவதரித்தருளின அழகிய வரதரிடத்திலே ஸ்ரீரங்காசார்யரும் "ஆயர்புத்திரனல்ல னருந்தெய்வம்" என்றும், "என்னையுமெங்கள் குடிமுழுதாட்கொண்ட மன்னன்" என்றும் சொல்லுகிறபடியே விசேஷப்ரதிபத்தி பண்ணிப் போந்திருந்து தத்தத் காலங்களிலே

---

[1] शिष्याचार्यतनुद्वयीं निरभजत्प्रायेण लक्ष्मीपति-
र्ह्येकोभून्नरसंज्ञकस्तदपरो नारायणाख्यः पुरा ।
अद्यत्वेकतरः कृपामृतनिधि स्सौम्योपयन्ता मुनि-
स्तच्छिष्याग्रसरोपरो विजयते रामानुजाख्यो मुनिः ॥

[1]"ப்ராப்தாந் ப்ராதமிகே வர்ணே
கல்பஜ்ஞா: கல்பயந்தி யாந் |
காலே காலே ச ஸம்ஸ்காராந்
தஸ்ய சக்ரே க்ரமேண ஸ:||" என்கிறபடியே

சௌளோபநயநாதிகளையும் சாஸ்த்ர ப்ரகாரத்தாலே செய்வித்து, வேத வேதாங்கங்களையும் யதாக்ரமமாக அதிகரிப்பித்தருளினர். அழகியவரதரும் ஏகஸந்தக்ராஹியாகையாலே, ஸக்ருத்ச்ரவண மாத்ரத்திலே ஸாங்க - அத்யயநம் பண்ணி எழுந்தருளியிருக்குங் காலத்திலே ஸ்ரீரங்காசாரியரும் இவருக்கு[2] "ஸம்ஸ்காரா: பஞ்சகர்தவ்யா:" என்கிறபடியே பஞ்ச ஸம்ஸ்காரங்களையும் பண்ணிவைக்கத் திருவுள்ளமாய், [3]"ஸர்வஸம்ஸ்கார ஸம்பந்நை: தநயை: ஸஹித: பிதா | ஸ்வகுரோர்: வந்தநாயாகாத் ஏகதா குருகாபுரீம்||" என்கிறபடியே தம்முடைய புத்ரர்களான அழகிய வரதர் முதலானரை அழைத்துக்கொண்டு ஸ்வாசார்யன் எழுந்தருளி யிருக்கும் திருப்பதியான [4]"அஸ்தி பாண்ட்யேஷு தேசேஷு காசித் ஸ்ரீநகரீதிஹி | தாம்ரபர்ணீநதீதீரே ஸாக்ஷாத் த்ரஷ்டோ ஹ்யதோக்ஷஜ:||" என்று சொல்லுகிறபடியே "வண்டலம்புஞ் சோலை வழுதிவளநா"டான ஆழ்வார் திருநகரி ஏற எழுந்தருளி,

---

1 प्राप्तान्प्राथमिके वर्णे कल्पज्ञाः कल्पयन्ति यान् ।
कालेकाले च संस्कारांस्तस्य चक्रे क्रमेण सः ॥

2 संस्काराः पञ्च कर्तव्याः ।

3 सर्वसंस्कारसंपन्नै स्तनयै स्सहितः पिता ।
स्वगुरोर्वन्दनायागादेकदा कुरुकापुरीम् ॥

4 अस्तिपाण्ड्येषु देशेषु काचिच्छ्रीनगरीतिहि ।
ताम्रपर्णीनदीतीरे साक्षात्द्रष्टोह्यधोक्षजः॥

[1]"கங்கா ச யமுனா சைவ ததா கோதா ஸரஸ்வதீ | நர்மதா ஸிந்து காவேரீ தாம்ரபர்ணீ ஸரித்வரா‖ [2]" ரமணீயே ப்ரஸந்நாம்பு சங்கதீர்த்தே நிமஜ்ய தே |" என்று கங்காதி ஸகல நதிகளிலும் உத்க்ருஷ்டதமமாகச் சொல்லப்பட்ட திருத்தாம்ரபர்ணி நதியிலே "பொருநற் சங்கணிதுறை"யிலே நீராடி [3]" ஸம்யக்ப்ரஸந்ந மநஸோ பபூவு: கலிதச்ரமா :" என்கிறபடியே மஹாபாவநமான தாம்ரபர்ணி தீர்த்தத்தில் நீராடியமாத்ரத்தில் பயணகதியிலே வந்த ச்ரமமெல்லாம் தீர்ந்து, ப்ரஸந்ந மநஸ்கர்களாய்க் கொண்டு, ப்ரபந்நஜன கூடஸ்தரான நம்மாழ்வாரைத் திருவடி தொழுவதில் ந்யஸ்த மநஸ்கர்களாய் ஆழ்வாரை ஸேவித்து, தத்ஸேவாம்ருத பானத்தாலே நித்ய த்ருப்தர்களாய்க் கொண்டு, ஸ்வாசார்யரான் திருவாய்மொழிப் பிள்ளை திருமாளிகை ஏற எழுந்தருளி, "தொண்டர்க் கமுதுண்ணச் சொன்மாலை"களான திருவாய்மொழியின் அர்த்தங்களை ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு "பக்தாம்ருதம்" என்னும்படி சப்தரஸம், அர்த்தரஸம், பாவரஸம்—இவைகளுடன் பெண்ணும் பேதையும் அறியும்படி அருளிச்செய்துகொண்டு எழுந்தருளியிருக்கிற ஸ்வாமியை தண்டம் ஸமர்ப்பித்து, தத்ஸேவாம்ருத பான பரவசர்களாய் இருக்கிற இவர்களை திருவாய்மொழிப்பிள்ளையும் கடாக்ஷித்தருளி குசல ஸம்பாஷணங்களைப் பண்ணி க்ருபாபரவசராய் அத்யாதரம் பண்ணி உட்காரும்படி நியமித்தருள, அவர்களும் எழுந்தருளி யிருந்தார்கள், அநந்தரம் பிள்ளையிடத்தில் மஹாபாவநமான ஸ்ரீபாததீர்த்தம் ப்ரார்த்தித்து ஸ்வீகரித்து ப்ரஸாதப்பட்டு எழுந்தருளியிருந்தார்கள்.

---

[1] गङ्गा च यमुना चैव तथा गोदावरी नदी ।
नर्मदा सिन्धु कावेरी ताम्रपर्णी सरिद्वरा ॥

[2] रमणीये प्रसन्नांबुशङ्खतीर्थे निमज्य ते ॥

[3] सम्यक् प्रसन्नमनसो बभूवुर्गलितश्रमाः ॥

[1]" தத: ப்ரபாதே தே ஸ்நாத்வா ப்ரணேமு: ஸந்நிதௌ குரோ:| தாதஸ் தேஷாம் ஸ்வமாசார்ய மூசே வாசம் விசக்ஷண:|| பகவந்! பவதோ தாஸா: தயாபாத்ரம் பவந்து தே| இதி புத்ராந் நிவேத்யாஸ்மை ரங்கராட் நிர்பரோபவத் ||" என்கிறபடியே, ஸ்ரீரங்காசார்யரும் மறுநாள் காலையில் எழுந்திருந்து நீராடி நித்யகர்மாநுஷ்டானங்களையும் முடித்துக்கொண்டு புத்ரர்களுடன் பிள்ளை ஸந்நிதி ஏற எழுந்தருளி தண்டம் ஸமர்ப்பித்து, தமக்கு ஆசார்யரான திருவாய்மொழிப் பிள்ளை திருவடிகளிலே தம்முடைய குமாரர்கள் அழகியவரதர் முதலானோர்களைக் காட்டிக் கொடுத்து, "ஸ்வாமிந்! தேவரீர் தாஸ ஜனங்கள்; தேவரீர் க்ருபைக்கு பாத்ரபூதர்களாக்கிக் கொள்ளவேணும்" என்று விண்ணப்பம் பண்ணிக்கொண்டு க்ருதக்ருத்யராய் நிர்ப்பராய் இருந்தார்,

அந்த சமயத்திலே [2]" ததாநீம் ரம்யஜாமாதா ஸர்வ சாஸ்த்ரார்த்தவித்தம:| தச்சாத்ராக்ரேஸர: தஸ்ய வவந்தே சரணாம்புஜே|| ஸ்ரீசைலேசகுருர் த்ருஷ்ட்வா நிப்ருதம் ப்ரணதம் புர:| அஸாவாசார்யரூபஸ்ஸ(பேண) சிஷ்யஸ்

---

[1] ततः प्रभाते ते स्नात्वा प्रणेमु स्सन्निधौ गुरोः ।
तातस्तेषां स्वमाचार्य मूचे वाचं विचक्षणः ॥
भगवन्! भवतो दासा दयापात्रं भवन्तु ते ।
इति पुत्रान्निवेद्यास्मै रङ्गराट् निर्भरोऽभवत् ॥

[2] तदानीं रम्यजामाता सर्वशास्त्रार्थवित्तमः ।
तच्छात्राग्रेसरस्तस्य ववन्दे चरणाम्बुजे ॥
श्रीशैलेशगुरुर्दृष्ट्वा निभृतं प्रणतं पुरः ।
असावाचार्य रूपस्स(पेण) शिष्यस्सौम्य वरप्रदः ॥

ஸௌம்யவரப்ரத:॥ உபாவாசார்ய சிஷ்யத்வ ப்ரகாசநபராவிதி| ஆலோட்ய ஸ்வகதம் ஸம்யக் இதமாஹ வசோம்ருதம்॥" என்கிறபடியே ஸர்வ சாஸ்த்ரங்களும் கைபுகுந்தவர்களில் ச்ரேஷ்டதமராய் பிள்ளை திருவடிகளை ஆச்ரயித்து, குருகுல வாஸம் பண்ணிவருமவர்களில் தலைவராய் இருக்கிற அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் வந்து பிள்ளை திருவடிகளிலே தண்டம் ஸமர்ப்பித்து நிற்க, பிள்ளையும் இவரைக் கடாக்ஷித்து, ஸர்வஜ்ஞராகையாலே அழகியவரதர் இவருடைய சிஷ்யாவதாரம் என்று திருவுள்ளத்திலே அறிந்து, "ஓ! நாயனாரே! மத்ஸமாச்ரயண உத்ஸுகர்களாய் வந்திருக்கிற இந்த அழகியவரதன் முதலானோர்களை [1]ஸமீக்ஷஸ்வதயார்த்ரயா என்கிறபடியே க்ருபைபண்ணி பஞ்சஸம்ஸ்காராதிகளைப் பண்ணிவையும்" என்று நியமித்தருள, [2]"இதி ஸ்வாசார்ய ஸந்தேசம் நிசம்ய கருணாநிதி:| நிசாம்ய பரதந்த்ரஸ்தாந் வசோ நோவாச கிம்சந॥ ராகாநிசாகராகார: க்ஷமாவாத்ஸல்ய தீநிதி:| ஸ, பாவிபாவுகம் மேநே ஸ்ரீஸௌம்யவரதம் ததா॥ பாலார்க்கஸத்ருசம் பாலம் ஸ்ரீமந்தம் தம் படும் வடும்| ஸமாஹூயாகரோத் ஸ்வஸ்ய ப்ரஸாதப்ரதமாஸ்பதம்॥" என்கிற ககநகிரி முனி சரிதத்தின்படியே கருணா

---

उभावाचार्यशिष्यत्वप्रकाशनपराविति ।
आलोड्य स्वगतं सम्यगिदमाह वचोमृतम् ॥

[1] समीक्षस्व दयार्द्रया

[2] इति स्वाचार्यसन्देशं निशम्य करुणानिधिः ।
निशाम्य परतन्त्रस्तान्वचो नोवाच किञ्चन ॥
राकानिशाकराकारः क्षमावात्सल्यधीनिधिः ।
स भाविभावुकं मेने श्रीसौम्यवरदं तदा ॥
बालार्कसदृशं बालं श्रीमन्तं तं पटुं वटुम् ।
समाहूयाकरोत्स्वस्य प्रसादप्रथमास्पदम् ॥

நிதியான நாயனாரும் இப்படி ஆசார்யன் நியமனத்தைக் கேட்டு ஆசார்ய பரதந்த்ரராய் ஸம்மதப்பட்டு ஒன்றும் அருளிச் செய்யாதிருந்தார். அநந்தரம் பூர்ணசந்திரன் போன்ற திருமேனியையுடையராயும் மஹாக்ஷமாவானாயும் வாத்ஸல்ய நிதியாயும் ஞாநபூர்த்தியையுடையராயுமிருக்கிற நாயனார் அழகியவரதரைக் கடாக்ஷித்துத் தம்முடைய தீர்க்கதர்சித்வத்தாலே, "இவர் பாவியான பஹுக்ஷேமங்களுக்கு ஆஸ்பதமாயிருப்பவர்" என்று திருவுள்ளம்பற்றி அதுக்கு ஒத்ததான லக்ஷணங்களையுங் கண்டு [1]"ஸ்ரீஸௌம்ய ஜாமாத்ருமுநீச்வரஸ்ய ப்ரஸாதஸம்பத்ப்ரதமாஸ்பதாய" என்கிறபடியே இவரை ப்ரதமத்தில் கடாக்ஷிக்கத் திருவுள்ளமாய், [2]"த்வதீக்ஷணஸுதா ஸிந்துவீசிவிக்ஷேப சீகரை:| காருண்யமாருதாநீதை: சீதளைரபிஷிஞ்ச மாம்" என்று ப்ரார்த்தித்து நிற்கிற அழகியவரதரை அழைத்துக் கிட்ட வைத்துக்கொண்டு குளிரக் கடாக்ஷித்து "ஆம்முதல்வன் இவன்" என்று திருவுள்ளமாய் [3]"சக்ராதிதாரணம் பும்ஸாம் பரஸம்பந்தவேதநம்| பதிவ்ரதாநிமித்தம் ஹி வலயாதிவிபூஷணம்" என்றும் [4]"தாப: புண்ட்ரஸ் ததா நாம மந்த்ரோ யாக: ச பஞ்சம:| அமீ பரமஸம்ஸ்காரா: பாரமைகாந்த்யஹேதவ:" என்றும் சொல்லுகிறபடியே இவரை ப்ரதமகடாக்ஷவிஷயராக்கி பஞ்சஸம்ஸ்

---

[1] श्रीसौम्यजामातृमुनीश्वरस्य प्रसादसंपत्प्रथमास्पदाय ।

[2] त्वदीक्षणसुधासिन्धु-वीचिविक्षेपशीकरैः ।
कारुण्यमारुतानीतै श्शीतलैरभिषिञ्च माम् ॥

[3] चक्रादिधारणं पुंसां परसंबन्धवेदनम् ।
पतिव्रतानिमित्तं हि वलयादिविभूषणम् ॥

[4] तापः पुण्ड्रस्तथा नाम मन्त्रो यागश्च पञ्चमः ।
अमी परमसंस्काराः पारमैकान्त्यहेतवः ॥

காரங்களையும் ப்ரஸாதித்து அநந்தரம் மற்றவர்களுக்கும் பஞ்சஸம்ஸ்காரம் ப்ரஸாதித்தருளினர். அநந்தரம் அழகிய வரதர் முதலானர்களும் அத்யந்தஹ்ருஷ்டர்களாய் தண்டவத் ப்ரணாமம் பண்ணிநிற்க நாயனரும் பரம பாவநமான தம்முடைய ஸ்ரீபாததீர்த்தம் முதலான ப்ரஸாதங்களையும் ப்ரஸாதித்து க்ருதார்த்தர்களாக்கியருளினர். அநந்தரம் நாயனரும், [1]" தத: ஸுந்தரஜாமாதா மந்திராத் ஸுந்தராத் குரோ:| சடஜித்பாதஸேவாயை சிஷ்யை: சிஷ்டை: ஸஹாப்யகாத்" என்கிறபடியே ஆழ்வார் மங்களாசாஸநத்துக்காக அத்யந்தம் சிஷ்டர்களான அழகியவரதர் முதலான சிஷ்யர்களையும் கூட்டிக்கொண்டு ஸ்வாசார்யரான பிள்ளை திருமாளிகையின் நின்றும் புறப்பட்டருளி [2]" ஸ்ரீராமாநுஜ யோகீந்த்ரம் தயாஸாந்த்ரத்ருகஞ்சலம்| ஆச்ரிதாபீஷ்டதம் நித்யம் ஸுமுகம் தே வவந்திரே||" என்கிறபடியே முதலில் எம்பெருமானரை "ஸ்ரீமாதவாங்க்ரி-ஜலஜத்வய" என்று தொடங்கி "ராமாநுஜம் யதிபதிம் ப்ரணமாமி மூர்த்நா" என்று மங்களாசாஸநம் பண்ணியருள, நாயனரும் க்ருபாதிசயத்தாலே அழகியவரதரை எம்பெருமானர் திருவடிகளிலே காட்டிக்கொடுத்தருள, அவரும் எம்பெருமானரை ஸேவித்து [3]" நித்யம் யதீந்த்ர தவ திவ்ய

[1] ततस्सुन्दरजामाता मन्दिरात्सुन्दराद्गुरोः ।
शठजित्पादसेवायै शिष्यैश्शिष्टैस्सहाभ्यगात् ॥

[2] श्रीरामानुजयोगीन्द्रं दयासान्द्रदृगञ्चलम् ।
आश्रिताभीष्टदं नित्यं सुमुखं ते ववन्दिरे ॥

[3] नित्यं यतीन्द्र तवदिव्यवपुस्स्मृतौ मे
सक्तं मनो भवतु वाग्गुणकीर्तनेसौ ।
कृत्यं च दास्यकरणे तु करद्वयस्य
वृत्त्यन्तरेऽस्तु विमुखं करणत्रयं च ॥

வபுஸஸ்ம்ருதௌ மே ஸக்தம் மநோ பவது வாக்குணகீர்த்தநேஸௌ| க்ருத்யம் ச தாஸ்யகரணேது கரத்வயஸ்ய வ்ருத்யந்தரேஸ்து விமுகம் கரணத்ரயம்ச'' என்றபடியே கரணத்ரயத்தையும் தேவரீர் திருவடிகளிலேயே விநியோகித்து க்ருதக்ருத்யராய் எழுந்தருளியிருக்கிற நாயனார் திருவடிகளிலே [1]"வரவரமுநிமேவ சிந்தயந்தீ மதிரியமேதி நிரத்யயம் ப்ரஸாதம்'' என்றும், [2]"அபகதமதமாநைரந்திமோபாயநிஷ்டை: அதிகதபரமார்த்தை ரர்த்தகாமாநபேக்ஷை: | நிகிலஜநஸுஹ்ருத்பி: நிர்ஜிதக்ரோதலோபை: வரவரமுநிப்ருத்யை ரஸ்து மே நித்யயோக:||'' என்றும் சொல்லுகிறபடியே சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்களை யநுஸந்தித்து, "மிக்கவேதத்தின் உட்பொருளான'' சரமபர்வநிஷ்டையிலே நிற்கும்படி ஆச்ரிதாபீஷ்டதரான தேவரீர் அடியேனை க்ருபைசெய்தருளவேணுமென்று ப்ரார்த்தித்து மங்களாசாஸநம் பண்ணி, [3]"தஸ்ய தீர்த்தப்ரஸாதம் ச பாவநம் போக்ய முத்தமம்'' என்கிறபடியே அதிபாவநமாயும் போக்யமாயு மிருக்கிற தீர்த்தப்ரஸாதங்களையும் ஸந்நிதியில் அடியார்கள் ப்ரஸாதிக்க நாயனார் முதலாக அடைவிலே பெற்றுக்கொண்டு [4]"ராமாநுஜஸ்ய சரணௌ சரணம் ப்ரபத்யே'' என்று அவர் திருவடி நிலைகளை ஸாதிக்க சிரஸா

---

[1] वरवरमुनिमेव चिन्तयन्ती मतिरियमेति निरत्ययं प्रसादम् ।

[2] अपगतमदमानैरन्तिमोपायनिष्ठै-
रधिगतपरमार्थैरर्थकामानपेक्षैः ।
निखिलजनसुहृद्भिर्निर्जितक्रोधलोभै-
र्वरवरमुनिभृत्यैरस्तु मे नित्ययोगः ॥

[3] तस्य तीर्थप्रसादं च पावनं भोग्यमुत्तमम् ।

[4] रामानुजस्य चरणौ शरणं प्रपद्ये ।

வஹித்து க்ருதக்ருத்யர்களாய் ப்ரதக்ஷிணமாக வெளியே எழுந்தருளி [1]“தேவராஜதயாபாத்ரம் ஸ்ரீகாஞ்சீபூர்ண முத்தமம்| ராமாநுஜமுநேர் மாந்யம் வந்தேஹம் ஸஜ்ஜநாச்ரயம்||” என்று திருக்கச்சி நம்பியையும் தண்டம் ஸமர்ப்பித்து, வடகிழக்கு மூலையிலே பெரிய திருவடியையும் ஸேவித்து, கோபுர வாசலில் உள்ளேபுக்கு இனவாயர் தலைவனையும் தண்டம் ஸமர்ப்பித்து [2]“சுதர்சந மஹாஜ்வால” என்று ஆச்ரித பாபஹரனான திருவாழி ஆழ்வானையும் சரணம் புக்கு, ஸுவர்ணமயமான த்வஜஸ்தம்பத்தில் பெரிய திருவடியையும் தண்டம் ஸமர்ப்பித்து உள்ளே சென்று திருவேங்கடமுடையானையும் ஸேவித்துச் சென்று பெருமாள் திருமுன்பே திருக்கண்ணாடிபோலே எழுந்தருளியிருக்கிற சதுர்புஜரான தார்க்ஷ்யரையும் திருவடித்தொழுது சென்று சக்ரவர்த்தித்திருமகனையும் தண்டம்ஸமர்ப்பித்து [3]“நவநீதகரம் த்ருஷ்ட்வா நநந்துர் நந்தநந்தனம்” என்று நவநீத ஹஸ்தனான கண்ணனையும் ஸேவித்து உள்ளே எழுந்தருளி [4]“ஆதிநாதம் ஸநாதம் தே லக்ஷ்மீபூப்யாம் ப்ரபேதிரே” என்கிறபடியே “திரிதந்தாகிலும் தேவபிரானுடைக் கரிய கோலத் திருவுருக் காண்பன் நான்” என்று ஆழ்வார் உகந்தருளின பொலிந்து நின்ற பிரானையும், “ஒன்று தேவும்”

---

[1] देवराजदयापात्रं श्रीकाञ्चीपूर्णमुत्तमम् ।
रामानुजमुनेर्मान्यं वन्देहं सज्जनाश्रयम् ॥

[2] सुदर्शनमहाज्वाले

[3] नवनीतकरं दृष्ट्वा ननन्दुर्नन्दनन्दनम् ।

[4] आदिनाथं सनाथं ते लक्ष्मीभूभ्यां प्रपेदिरे ।

திருவாய்மொழி அநுஸந்தானத்துடன் [1]"மங்களாநி ப்ரயுஞ்ஜாநா மந்தம் மந்தம் விநிர்யயு:" என்கிறபடியே மங்களாசாஸநம் பண்ணியருளி வெளிப்புறப்பட்டு ஞானப்பிரானையும் மங்களாசாஸநம் செய்தருளி [2]"அபஜத் குருகாதேவீம் குருகாநாதவல்லபாம்| பூர்ணாகஸ்ஸு க்ஷமாஜுஷ்டாம் ஸ்வப்ரியாய ப்ரியம்வதாம்" என்கிறபடியே பூர்ணபராதிகளிடத்தில் விலை செல்லும்படியான க்ஷமாகுணயுக்தையாய் [3]"நகச்சித் நாபராத்யதி" என்னுமவளான தனிக்கோவில் குருகா தேவியையும் திருவடிதொழுது அங்குநின்றும் புறப்பட்டு தசாவதாரங்களையும் தண்டனிட்டு ஆதிநாயகியையும் ஸேவித்துச் சென்று திருப்புளியாழ்வாரையும் ஸேவித்து ஆள்வந்தாருக்குப் பிதாமஹராய் சிதிலமான அருளிச்செயல்களையும் யோகபலத்தாலே வெளியிட்டு உபகரித்தருளின நாதமுனிகளையும் ஸேவித்து பரமஹம்ஸ ச்ரேஷ்டரான ஆழ்வாருடைய ஸுவர்ணமயமான த்வஜஸ்தம்பத்தையும் ஸேவித்து, உள்ளே புகுந்து [4]"ஹைமமண்டப மத்யேந்த: சதுஸ்தம்பப்ரபாந்விதே| பாலபாஸ்கர ஸங்காசே ரத்நஸிம்ஹாஸநே வரே || கல்யாணசலகூடஸ்தகல்யாண ஹரிஸந்நிபம்| அந்தஸ்தம: ப்ரசமன ஞானமுத்ராதரம் கரே||" என்கிறபடியே ஸுவர்ணமயமான நான்கு ஸ்தம்பங்களாலே

---

1 मङ्गलानि प्रयुञ्जाना मन्दं मन्दं विनिर्ययुः ।

2 अभजत्कुरुकादेवीं कुरुकानाथवल्लभाम् ।
पूर्णागस्सु क्षमाजुष्टां स्वप्रियाय प्रियं वदाम् ॥

3 नकश्चिन्नापराध्यति ।

4 हैममण्टपमद्ध्येन्त श्चतुस्स्तम्भसमन्विते ।
बालभास्करसङ्काशे रत्नसिंहासने वरे ॥
कल्याणाचलकूटस्थकल्याणहरिसन्निभम् ।
अन्तस्तमःप्रशमनज्ञानमुद्राधरं करे ॥

சூழப்பட்ட மண்டப மத்யத்திலே உதயமான சூர்யன்போலே ப்ரகாசமானமாயிருந்துள்ள ரத்நமயமான ஸிம்ஹாஸநத்திலே ஸுவர்ணமயமான மேருச்ருங்கத்தில் ஸுவர்ணமயமான ஸிம்ஹம் ஒன்றிருக்குமாப்போலேயும் ஸேவிக்குமவர்களுடைய நெஞ்சிருளைப் போக்க ஸமர்த்தமான ஜ்ஞானமுத்ரையையுடையராயும் எழுந்தருளியிருந்து, அத்யந்தம் ப்ரணதர்களாய் அஞ்சலி ஹஸ்தர்களான பொய்கைமுனி முதலானோர்களால் ஸேவ்யமாநராய், இவர் திருவடிகளி லாச்ரயித்து அத்யந்த பக்தியுக்தராய் "தேவுமற்றறியா" மதுரகவிகள் இன்பமான பாசுரங்களால் கானம் பண்ண அவற்றை திருச்செவி சாத்தி யெழுந்தருளி யிருப்பவராய், உபயவேதாந்த ப்ரவீணர்களாய் மதமோஹமாத்ஸர்யாதிகளை தூரக் கடத்தினவர்களாய் அருளிச்செயல் அநுஸந்தாந பரர்களாய் ஸத்ஸம்ப்ரதாயம் கைபுகுந்தவர்களாய் ஸதாசார ப்ரவர்த்தகர்களாய் முமுக்ஷுக்களாய் ஆழ்வார் திருவடிகளிலே அத்யந்தம் ப்ரவணர்களாய் இருக்கிற மஹாநுபாவர்களான பாகவதோத்தமர்களாலே சூழ்ந்து ஸேவிக்கப்பட்டவராய், பரம பக்தியாலே பரவசர்களாய்த் தம்மை ஸேவிப்பவர்களை க்ருபா கடாக்ஷத்தினாலே ஸம்மாநிப்பவராய், ஸர்வப்ராப்யராய், ப்ரபந்நஜநகூடஸ்தராய், அப்போ தலர்ந்த செந்தாமரைப்பூப் போன்ற திருமுக மண்டலத்தை உடையராய், [1]"வைகுண்டே து பரே லோகே" என்று எழுந்தருளியிருக்கிற ஸர்வேச்வரன் இவரைத் தம்முடைய சேதநோஜ்ஜீவன ஸாம்ராஜ்யத்தில் முடி சூட்டிவைத்த சிங்ஹம்போலே ஸூர்யப்ரகாசமான ரத்னமய திருவபிஷேகத்தை யுடையராய், ஜ்ஞானசக்திபலாதிகளான ஷட்சக்தி யுக்தராய், "நாட்கமழ் மகிழ்மாலை மார்பின"ராய், ஸர்வாபீஷ்டப்ரதராய் எழுந்தருளியிருக்கிற ஆழ்வார் திருவடிகளைச் சென்றுகிட்டி.

---

1 वैकुण्ठे तु परे लोके

[1]"மாதாபிதாயுவதய:" என்று தொடங்கி "ப்ரணமாமி மூர்த்நா" என்று அநுஸந்தித்து, கண்ணிநுண் சிறுத்தாம்பையும் அநுஸந்தித்து, "அன்னையாய் அத்தனாய்" என்கிற பாட்டின் படியே ஸர்வவித பந்துக்களும் தமக்கு ஆழ்வார் என்று தோற்றும்படி நாயனாரும் அதிப்ரேமத்தோடே அநுஸந்தித்துக்கொண்டு நிற்க, அழகிய வரதரும் இப்படி மங்களாசாஸநம் பண்ணி நிற்கும் நாயனாருடைய திருமுக மண்டலத்தின் ஒளியிலும் திருமேனி காந்தி ஸௌகுமார்யாதிகளிலும் ஈடுபட்டு, "என்னமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே" என்ற வடுக நம்பியைப்போலே வைத்த கண் வாங்காதே ஸேவித்து இதுவே தமக்கு ஸகலவித புருஷார்த்தம் என எண்ணி பரமாநந்த பரிதராய் நிற்க, [2]"தத: ஸ்ரீ சடகோபார்ய ஸந்நிதிஸ்தா: ததர்ச்சகா:| விசேஷதர்சநாத் ப்ரீதா பஹுமாநம் ப்ரசக்ரிரே|| அத ஸ்ரீகேஸராங்கஸ்ய நியோகாத் பரிசாரகா:| சேஷாம் பபந்திரே மூர்த்நி ரம்யஜாமாதுராதராத்||" என்கிறபடியே ஆழ்வார் ஸந்நிதியிலுள்ள அர்ச்சகர்களும் இப்படி விலக்ஷணர்களான அந்தேவாஸிகளையும் ஸ்வாமி நாயனாரையும் ஸேவித்து விசேஷமாக பஹுமாநித்து ப்ரீதிபண்ணி நிற்கிற காலத்திலே, ஆழ்வார் நியோகத்தாலே ஸந்நிதியில் அடியார்கள் நாயனாருக்கும் அழகிய வரதர் முதலானோருக்கும் அடைவிலே பரிவட்டம் திருமாலை தீர்த்தம் சந்தனம் ப்ரஸாதம் ஸாதித்து மதுரகவிகளையும் ப்ரஸாதித்தார்கள். இப்படி ஆழ்வார்

---

[1] माता पिता युवतयः . . प्रणमामि मूर्ध्ना ।

[2] तत श्श्रीशठकोपार्य-सन्निधिस्था स्तदर्चकाः ।
विशेषदर्शना त्प्रीता बहुमानं प्रचक्रिरे ॥
अथ श्रीकेसराङ्गस्य नियोगा त्परिचारकाः ।
शेषां बबन्धिरे मूर्ध्नि रम्यजामातुरादरात् ॥

ஸகல வரிசைகளையும் ப்ரஸாதிக்கப் பெற்றுக்கொண்டு வெளியே எழுந்தருளி ஆழ்வார் ஸேவாதிசயத்தையே நெஞ்சில் தேக்கிக்கொண்டு ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி விலக்ஷணமான ஸந்நிதி அழகையெல்லாம் ஸேவித்துக்கொண்டு எழுந்தருளுகையில் [1]"ஸ்ரீ ஸௌம்யவரதார்யோயம் ஸ்வாசார்ய சரணாப்ஜயோ: |ந்யஸ்தத்ருஷ்டிரபூத் ஹ்ருஷ்ட: சுத்தாந்த: கரணஸ் ததா||" என்கிறபடியே அழகிய வரதரும் தம்முடைய ஆசார்யரான நாயனார் திருவடிகளிலே ந்யஸ்த த்ருஷ்டியாய்க் கொண்டு அத்யந்த ஹர்ஷயுக்தராய் ப்ரஸந்நமான திருவுள்ளத்தை யுடையராய் நாயனாரைப் பின்சென்று திருவாய்மொழிப் பிள்ளை திருமாளிகையேற எழுந்தருளி பிள்ளை திருவடிகளிலே தண்டம் ஸமர்ப்பித்துப் பிள்ளை நியமனத்தாலே எழுந்தருளி யிருந்தார்கள். [2]"யாகாநு யாகயோ: பச்சாத் மந்த்ரார்த்தேஷு விபச்சித:| த்ரமிடோப நிஷத்பாஷ்யை : சேஷகாலம் ப்ரசிக்ஷிபு :||" என்கிறபடியே திருவாய்மொழிப் பிள்ளையும் திருவாராதனம் செய்தருளி ததீயாராதநாநந்தரம் திருமந்த்ரார்த்த பகவத் விஷய காலக்ஷேபங்களாலே சேஷமான காலத்தைக் கழித்துக்கொண்டு [3]"பரதோஹர்முகே ப்ராப்தம் பித்ருப்ராத்ருஸமந்விதம்| வரதார்ய முவாசேதம் த்ரமிடோபநிஷத்குரு :|| வரமங்கா புரம் கத்வா பித்ரோர் வசநமாசர |தத்ர வாநாசலஹரே :

---

1 श्रीसौम्यवरदार्योयं स्वाचार्यचरणाब्जयोः ।
न्यस्तदृष्टिरभूद्धृष्टश्शुद्धान्तःकरणस्तदा ॥

2 यागानुयागयोः पश्चान्मन्त्रार्थेषु विपश्चितः ।
द्रमिडोपनिषद्भाष्यैश्शेषकालं प्रचिक्षिपुः ॥

3 परतोहर्मुखे प्राप्तं पितृभ्रातृसमन्वितम् ।
वरदार्य मुवाचेदं द्रमिडोपनिषद्गुरुः ॥

वरमङ्गापुरं गत्वा पित्रोर्वचनमाचर ।
तत्र वानाचलहरेः कैङ्कर्यनिरतो भव ॥

கைங்கர்யநிரதோ பவ ||'' என்கிறபடியே மறுநாள் காலையில் திருவாய்மொழிப் பிள்ளையும் பிதாப்ராதாக்களுடன் எழுந்தருளிய அழகிய வரதரைப் பார்த்து "நீர் வானமாமலைக்குப் போய் பிதாமாதாக்களுக்கு அனுகூலராய்க்கொண்டு வானமாமலைப் பெருமாள் கைங்கர்யத்திலே நிரதராயிரும்'' என்று நியமித்தருள [1]'ச்ருத்வைவம் பரமாசார்யஸந்தேசம் ஹிதமாத்மந:| விசார்ய ஸ்வகதம் தீமாந் நோத்தரம் ப்ரத்யபத்யத||'' என்கிறபடியே ஹிதமான பரமாசார்ய நியமனத்தைக் கேட்டுத் தம்முடைய ஆசார்யனைப் பிரிந்திருக்கத் திருவுள்ளமில்லாமையாலே ப்ரத்யுத்தரமில்லாதே மௌனமாகவிருக்க, [2]"தத: ஸ்ரீஸௌம்யஜாமாதா ததா ஜ்ஞாத்வா ததாசயம்| வஸத்வேஷோத்ர கதிசித் திநாநீத்யப்ரவீத் குரும்'' என்கிறபடியே அப்போது அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் பாவஞ்ஞராகையாலே இவருடைய நினைவையறிந்து, "இவர் சில காலம் இங்கே இருக்கட்டும், மற்றவர்களுக்கு நியமனம் ஸாதித்தருளவேணும்'' என்று ஸ்வாசார்யரான பிள்ளையிடம் விண்ணப்பம் செய்யப் பிள்ளையும் அப்படியே நியமித்தருள, ஸ்ரீரங்காசார்யரும் மற்றை இரண்டு குமாரர்களையும் அழைத்துக்கொண்டு வானமாமலை ஏற எழுந்தருளினார். [3]"தத: ஸ்ரீ ஸௌம்யவரதோ வடுரேவ வஸந் படு:| சகாராசார்ய ஸந்திஷ்டாம் சுச்ரூஷாம் பூஷ்ணு

---

1 श्रुत्वैवं परमाचार्यसन्देशं हित मात्मनः।
विचार्य स्वगतं धीमा न्नोत्तरं प्रत्यपद्यत ॥

2 ततश्श्रीसौम्यजामाता तदा ज्ञात्वा तदाशयम्।
वसत्वेषोऽत्र कतिचि द्दिनानीत्य ब्रवीद्गुरुम् ॥

3 ततश्श्रीसौम्यवरदो वटुरेव वसन्पटुः।
चकारपचार्यसन्दिष्टां शुश्रूषां भूष्णुरञ्जसा ॥

ரஞ்ஜஸா'' என்கிறபடியே அழகிய வரதரும் பாலராய் ப்ரம்ஹசர்யத்தோடே எழுந்தருளியிருந்து, [1]''குருரேவ பரம் ப்ரம்ஹ குருரேவ பராகதி:| குருரேவ பரா வித்யா குருரேவ பரம் தநம் || குருரேவ பர: காம: குருரேவ பராயணம் | யஸ் மாத் ஸதுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குரு:||'' என்றும், ''பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகி வந்து'' என்றும், ''தேனார்கமலத் திருமாமகள்கொழுநன் தானே குருவாகி'' என்றும் சொல்லுகிறபடியே ஈச்வரன் தானாகச் சொல்லப்பட்ட ஆசார்யன் சிஷ்யனுக்கு [2] ''தஸ்ய துக்தாப்தி வைகுண்ட த்வாரகாஸ் ஸர்வ ஏவ ஸ:'' என்றும், திருநாடு திருப்பாற் கடல் முதலான நூற்றெட்டுத் திருப்பதிகளும் ''அன்னையாயத்தனாய்'' என்னும்படியான ஸர்வவிதோத் தாரக பந்துவும் ''மாடும் மனையும் கிளையும் மறைமுனிவர் தேடு முயர்வீடும் செந்நெறியும் பீடுடைய வெட்டெழுத்தும்'' தந்த ஆசார்யனே எல்லாம் என்று அத்யவஸித்து ஸ்வாசார்யரான நாயனார் நியமித்த கைங்கர்யங்களைச் செய்துகொண்டிருக்கும் காலத்திலே [3]''ஸக்ருத் ச்ரவணத: ஸோபூத் ஸர்வ சாஸ்த்ரேஷு பண்டித:| ரஹஸ்யானி ப்ர பந்தாம்ச்ச சுச்ராவ குருஸந்நிதௌ|| த்ரமிடோபநிஷத்

---

[1] गुरुरेव परं ब्रह्म गुरुरेव परा गतिः ।
गुरुरेव परा विद्या गुरुरेव परं धनम् ॥
गुरुरेव परः कामो गुरुरेव परायणम् ।
यस्मात्सदुपदेष्टासौ तस्माद्गुरुतरो गुरुः ॥

[2] तस्य दुग्धाब्धिवैकुण्ठद्वारका स्सर्वएव सः ।

[3] सकृच्छ्रवणतस्सोऽभू त्सर्वशास्त्रेषु पण्डितः ।
रहस्यानि प्रबन्धांश्च शुश्राव गुरुसन्निधौ ॥
द्रमिडोपनिषद्भाष्यव्याख्याना नीतराण्यपि ।
श्रीसौम्यजामातृगुरो स्सन्निधावन्वभूत्तदा ॥

பாஷ்ய - வ்யாக்யாநாநீதராண்யபி| ஸ்ரீ ஸௌம்யஜாமாத்ருகுரோஸ் ஸந்நிதாதா வந்வபூத் ஸதா|| ஏவம் ஸ முமுதே ச்ராந்தா ஹங்கார மமதோஜ்ஜித:| சாந்தோ தாந்தஸ்ததை காந்தீ நாதவான் குருணா பவத்||" என்கிறபடியே நாயனாரும் அழகியவரதருக்குத் தர்க்க மீமாம்ஸாதிகளான ஸகல சாஸ்த்ரங்களையும் அப்யஸிப்பிக்க அவரும் எல்லாவற்றையும் ஒருக்கால் கேட்டமாத்ரத்திலேயே தரித்துக்கொண்டு போருகிற அதிசயத்தைக் கண்டு உகந்து இவருக்குத் திருப்பல்லாண்டு முதலான திவ்ய ப்ரபந்தங்களையு மோதுவித்து அநந்தரம் [1]"ப்ரணவாத்யம் நமோமத்யம் நாராயணபதாந்திமம்| மந்த்ர மஷ்டாக்ஷரம் வித்யாத் ஸர்வஸித்திகரம் ஸதா|| முமுக்ஷூணாம் ஸதா ஜப்யம் புக்திமுக்திபலப்ரதம்| வைஷ்ணவாநாம் ஸதா ஜப்யம் பக்திஞாநப்ரவர்த்தனம்||" என்கிறபடியே எட்டுத் திருவக்ஷரமாய் பதத்ரயாத்மகமாய் ஞானபக்தி வைராக்யாதி ஜநகமாகையாலே முமுக்ஷுக்களான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு "நாத்தழும்பெழ" ஸதா அநுஸந்தேயமான "நலந்தரும் சொல்" என்கிறபடியேயுள்ள திருமந்த்ரார்த்தத்தை ஸப்ரகார ஸவிசேஷார்த்தமாக ப்ரஸாதித்தருளி பின்பு, [2]"அஹோ த்வயஸ்ய மாஹாத்ம்யம் அஹோவீர்யம் அஹோபலம்| மந்த்ரரத்னம்

---

एवं स मुमुदे श्रान्ताहङ्कारममतोज्झितः।
शान्तोदान्त स्तथैकान्ती नाथवान् गुरुणाऽभवत्॥

[1] प्रणवाद्यं नमोमध्यं नारायणपदान्तिमम्।
मन्त्रमष्टाक्षरं विद्यात्सर्वसिद्धिकरं सदा॥
मुमुक्षूणां सदा जप्यं भुक्तिमुक्तिफलप्रदम्।
वैष्णवानां सदा जप्यं भक्तिज्ञानप्रवर्द्धनम्॥

[2] अहो द्वयस्य माहात्म्यं अहोवीर्यं अहोबलम्।
मन्त्ररत्नं शुभकरं वेदसारं सनातनम्॥

சுபகரம் வேதஸாரம் ஸநாதநம்| ஸ்ரீகரம் லோகவச்யம்ச ஸத்யஸ் ஸம்ஸாரதாரகம்'' என்கிறபடியே பாபஹரமுமாய், புண்யவிவர்த்தகமுமாய், ஸம்ஸார பந்தத்தையு மறுக்குமதாய், மிகவும் ச்லாகிக்கப்பட்ட வேதஸாரமுமாய், மாங்கள்யகர மந்த்ரரத்னமாகிற த்வயார்த்தத்தை ஸவிசேஷார்த்தமாக ப்ரஸாதித்தருளி, இன்னமும் [1]''ஸர்வகுஹ்யதமம் பூய: ச்ருணு மே பரமம்வச:| இஷ்டோஸிமே த்ருட இதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம்||'' என்கிற கீதாசார்யனுடைய வாக்ய ஸாரதமமான சரம ச்லோகத்தாலே ப்ரதிபாதிக்கப்படுகிற இதரோபாய பரித்யாக பூர்வக ஸித்தோபாய வைலக்ஷண்யத்தையும் அருளிச்செய்து அநந்தரம் த்ராவிட வேத ததங்கோபாங்கங்களான ஸமஸ்த திவ்யப்ரபந்த வ்யாக்யானங்களையும் மற்றுமுண்டான ஸமஸ்த ரஹஸ்யார்த்தங்களையும் ப்ரஸாதித்து வாழ்வித்தருளினார்.

அநந்தரம் அழகிய வரதரும் இப்படி ஸ்வாசார்ய முகத்தாலேயே ஸகல சாஸ்த்ரங்களையும் லபித்து அத்யந்தம் ஹ்ருஷ்டராய், அஹங்காரமமகாரவர்ஜிதராய், சமதமாதி குணகண பரிபூர்ணராய் பாரமைகாந்த்ய பராகாஷ்டையிலே வர்த்திக்குமவராய் சேஷித்வ சரண்யத்வ ப்ராப்யத்வங்கள் மூன்றையும் ஸ்வாசார்யரான நாயனார் திருவடிகளிலேயே ''உன்பதயுகமாம் ஏர்கொண்ட வீட்டை யெளிதினில் எய்துவன்'' என்கிறபடியே அத்யவஸித்து தேவுமற்றறியாது ஆசார்யபதைக நிஷ்டராய் [2]''அஹம் ஸர்வம் கரிஷ்யாமி'' என்றிருக்குமவரைப்போலே ஒழிவில் காலத்தில் படியே ஆசார்யர் திருவடிகளிலே ''சிந்தையாலும் சொல்

---

श्रीकरं लोकवश्यं च सद्य स्संसारतारकम् ।

[1] सर्वगुह्यतमं भूयश्शृणु मे परमं वचः ।
इष्टोसि मे दृढइति ततो वक्ष्यामि ते हितम् ॥

[2] अहं सर्वं करिष्यामि

லாலும் செய்கையினாலும்'' ஸர்வவித கைங்கர்யங்களையும் செய்துகொண்டு ஒருக்காலும் பிரியாதே தத்கைங்கர்யை கரஸராய் எழுந்தருளியிருந்தார்.

அநந்தரம் [1]'' கதாசி தேந முத்வீக்ஷ்ய ஸந்திதேச குருஸ் ஸ்வயம்| தேவநாத தித்ருக்ஷாஸ்தி யதி சேத் கச்ச ஸத்வரம்||'' என்கிறபடியே நாயனாரும் தாம் யதிவர புநரவதாரமாகை யாலே பாவிகார்யங்களைத் திருவுள்ளத்தில் கொண்டு ஒருக் கால் அழகிய வரதரை யழைத்துக் குளிரக் கடாக்ஷித்து, தெய்வநாயகனை மங்களாசாஸநம் பண்ணத் திருவுள்ள மானால் போய் மங்களாசாஸநம் பண்ணி வரலாமென்று நிய மித்தருள அழகியவரதரும் இதைக் கேட்டு ஸ்வாமி திருவடி களைப் பிரிந்திருக்கத் தரியாதவராய் பீதியுடன் இதென்ன இப்படி நியமிப்பது என்று சிந்தித்து ஸம்ஸார ஸம்பாவனை யுள்ள இவ்வாச்ரமமே இதற்குக் காரணமென்று தேறி அடி யேன் மஹாபாக்யமென்று, ஹ்ருஷ்டராய்ப் புறப்பட்டு ஆசார்யருடைய கல்யாணகுணங்களை நெஞ்சில் தேக்கிக் கொண்டு இதையே [2]'' பாதேயம் புண்டரீகாக்ஷநாமஸங் கீர்த்தநாம்ருதம்'' என்கிறபடியே பாதேயமாக அனுஸந்தித் துக்கொண்டு '' பகர்க்கதிர் மணிமாடநீடு சிரீவரமங்கலநகர்'' ஏற வெழுந்தருளி சேற்றுத் தாமரையிலே நீராடி யதோசித மான அநுஷ்டானங்களை முடித்துக் கொண்டு எம்பெரு மான் ஸந்நிதியேற வெழுந்தருளி [3]''தோதாத்ரிநாதம் லக்ஷ்மீ சம் தேவநாத மவந்தத'' என்கிறபடியே வானமாமலைப் பெருமாளையும் தெய்வநாயகனையும் ''நோற்ற நோன்பிலேன்'' என்று தொடங்கி ''சிரீவரமங்கலநகர் வீற்றிருந்த வெந்

---

[1] कदाचिदेनमुद्वीक्ष्य सन्दिदेश गुरुस्स्वयम् ।
देवनाथदिदृक्षास्ति यदिचेद्गच्छ सत्वरम् ॥

[2] पाथेयं पुण्डरीकाक्षनामसङ्कीर्तनामृतम् ।

[3] तोदाद्रिनाथं लक्ष्मीशं देवनाथ मवन्दत ।

தாய்'' என்று அநுஸந்தித்து மங்களாசாஸநம் செய்தருளிப் பின்பு [1]'' தத்ர பந்தூந் பரித்யஜ்ய தேஹபந்தநிபந்தநாந்| அபஜத் பகவத்பக்தாந் நாத்ர பந்தூந் ஹிதைஷிண:॥ தத: ஸ்ரீவாநசைலேசகைங்கர்யமகிலம் ஸதா| குர்வந்நாஸ்தே வீதகர்வோ வைராக்யம் பரமாச்ரித:॥'' என்கிறபடியே சரீர ஸம்பந்தங்களையெல்லாம் வேர்(றுத்து) களைந்து ததீயர்களையே ஆத்மபந்துக்களாக நிச்சயித்து மஹா வைராக்ய சாலியாய் எழுந்தருளியிருந்து தெய்வநாயகன் ஸந்நிதியில் நிகில கைங்கர்யங்களையும் பண்ணிக்கொண்டு போராநின்ற காலத்திலே, '' தாயேதந்தையென்றும் தாரமே கிளைமக்களென்றும் நோயே பட்டொழிந்தேன்'' என்கிறபடியே ஆசார்யாநுவர்த்தனத்துக்கு விரோதியான ஸம்ஸாரத்தில் பீதராய் அதற்கு ஸம்பாதனையுள்ள இவ்வாச்ரமமும் வேண்டாவென்று [2]'' ஸபாண்டித்யம் விநிர்வித்ய பாலவத் முநிபாவயுக்'' என்கிறபடியே துரீயாச்ரம லக்ஷண பூர்த்தியுடையராய்க் கொண்டு [3]'' தேவநாதப்ரஸாதேந ஸம்ப்ரார்த்ய ப்ரணதஸ் தத:| துரீயமாச்ரமம் பேஜே பரித்யஜ்யாந்தராளிகௌ॥'' என்றவாறு தெய்வநாயகன் முன்பே சென்று அடியேனுக்கு பயாவஹமான இவ்வாச்ரமம் வேண்டா; அடியேனுக்கு'' அடியார் தம்மடியாராய்'' நின்று செய்யும் கைங்

---

[1] तत्र बन्धून्परित्यज्य देहबन्धनिबन्धनान् ।
अभजद्भगवद्भक्तान् नात्र बन्धून् हितैषिणः ॥
तत श्रीवानशैलेशकैङ्कर्यमखिलं सदा ।
कुर्वन्नास्ते वीतगर्वो वैराग्यं परमाश्रितः ॥

[2] स पाण्डित्यं विनिर्विद्य बालवन्मुनिभावयुक् ।

[3] देवनाथप्रसादेन संप्रार्थ्य प्रणतस्ततः ।
तुरीयमाश्रमं भेजे परित्यज्यान्तरालिकौ ॥

கர்யமேவேண்டுகையாலே அதுக்கேகாந்தமான [1]"தண்டம் வை வைஷ்ணவம் லிங்கம் விப்ராணும் முக்தி ஸாதநம்| நிர்வாணம் ஸர்வதர்மாணும் இதி வேதாநுசாஸநம்||" என்றிப்படிச் சொல்லப்பட்ட தண்டகாஷாயாதிகளை தேவரீர் அடியேனுக்கு ப்ரஸாதித்தருளவேணுமென்று அழகியவரதரும் தெய்வநாயகப் பெருமாளை ஆசார்யத்வேந அங்கீகரித்து விண்ணப்பஞ் செய்து ஸவிநயராய் நிற்க, தெய்வநாயகனும் திருவுள்ளமுவந்து [2]"த்ரிதண்டமுபவீதம்ச வாஸ: கௌபீநவேஷ்டநம்| சிக்யம் கவச மித்யேதத் பிப்ருயாத் யாவதாயுஷம்" என்று சொல்லுகிறபடியே த்ரிதண்டகாஷாயங்களையும் நீர் உள்ளதனையும் தரிக்கக்கடவீர் என்று அர்ச்சகமுகேந நியமித்து ப்ரஸாதித்து [3]"தத: ஸ்ரீவாநசைசேல: ச்ரியா ஸார்த்தம் ஜகத்பதி:| ஸம்மந்த்ரய கரவாவாவாம் இத்யேவம் தர்சநாதிபம்|| ஸ்வார்ச்சகம் கஞ்சிதாவிச்ய சேஷாம் பத்வாஸ்ய மூர்த்தநி| ஸ்ரீமத்வாந மஹாசைல ராமாநுஜ மஹாமுநே| இத்யா மந்த்ரயா கரோந் நாம முநேரஸ்ய மஹாத்மந:| ப்ரஸாத்ய மஹதீம் மாலாம் சடகோபம் சிரஸ்யதாத்| தத்

---

[1] दण्डं वै वैष्णवं लिङ्गं विप्राणां मुक्तिसाधनम् ।
निर्वाणं सर्वधर्माणामिति वेदानुशासनम् ॥

[2] त्रिदण्ड मुपवीतं च वासः कौपीनवेष्टनम् ।
शिक्यं कवच मित्येत द्बिभृयाद्यावदायुषम् ॥

[3] तत श्श्रीवानशैलेश श्श्रियासार्धं जगत्पतिः ।
सम्मन्त्र्य करवावावा मित्येवं दर्शनाधिपम् ॥
स्वार्चकं कञ्चिदाविश्य शेषां बद्ध्वाऽस्य मूर्धनि ।
श्रीमन्वानमहाशैलरामानुज महामुने ॥
इत्यामन्त्र्या करोन्नाम मुने रस्य महात्मनः ।
प्रसाद्य महतीं मालां शठकोपं शिरस्यधात् ॥

வாஸ்யா பயஹஸ்தம்ச தாம்பூலம் சந்தனம் ததா | ஸ்வதாம்நி ஸர்வநிர்வாஹம் குருஷ்வேத் யங்வசாத் ததா||" என்கிற படியே ஸார்வபௌமனுன ராஜா ப்ரிய புத்ரனை அபிஷேகம் பண்ணிவைக்க தம்மஹிஷியோடு ஆலோசிக்குமாப்போலே இங்கும் தெய்வநாயகன் ஜகந்மாதாவான தேவியாருடன் இவரை தர்சன நிர்வாஹ ஸாம்ராஜ்யத்தில் அபிஷிக்தராக்கு வோமென்று ஆலோசித்துக்கொண்டு தாம் ஓர் அர்ச்சகரை ஆவேசித்து தங்முகேந இவருடைய திருமுடிகளிலே திருப் பரியட்டத்தைக் கட்டி "வானமாமலை ராமானுஜ ஜீயர்" என்று திருநாமம் சாத்தி அழைத்தருளி திருமாலை அபய ஹஸ்தங்களையும் சடகோபனையும் ஸாதித்து, அடைக்காய் சாத்துப்படி முதலான வரிசைகளையும் ப்ரஸாதித்து "நம்மி ராமானுசனைப்போலே நம்முடைய ஸந்நிதியின் ஸர்வ நிர்வா ஹத்தையும் வஹித்துக்கொண்டு நம்மிராமானுச தர்ச னத்தை வளர்த்து வாரும்" என்று நியமித்தருளி, ஸூபா பூப த்ருத க்ஷீர சர்க்கரா வ்யஞ்ஜநாந்விதமான மாதூகரத்தை யும் ஸ்வர்ண பாத்ரத்துடன் ப்ரஸாதித்து ஸந்நிதி ஸமீபத் தில் ஒரு விடுதியை மடமாகக் கட்டும்படி நியமித்து:[1] "ஏவம் பூர்ணகடாக்ஷம் ஸ்வமகரோத் தேவநாயக:| ஸர்வம் பரிகரம் வீக்ஷ்ய ஸ்வஸ்யாந்திகசரம் தத:|| உவாச மதுரம் வாக்யம் தத் வப்ரபாவ ப்ரகாசகம்| நயத்வம் மட மத்யைநம் மச்சிந்ஹை: ஸகலைஸ் ஸமம்|| முநிம் பஜத்வ மாசார்யம் ப்ரிய மத்யர்த்த

---

दत्वा स्वाभयहस्तं च ताम्बूलं चन्दनं तथा ।
स्वधाम्नि सर्वनिर्वाहं कुरुष्वेत्य न्वशात्तदा ॥

[1] एवं पूर्णकटाक्षं स्वमकरोद्देवनायकः ।
सर्वं परिकरं वीक्ष्य स्वस्यान्तिकचरं ततः ॥
उवाच मधुरं वाक्यं तत्प्रभावप्रकाशकम् ।
नयध्वं मठमद्यैनं मच्चिह्नैः स्सकलैः स्समम् ॥

மேவ மே| இத்யாஜ்ஞாப்ய ததாவ்யக்ர: ப்ரஸந்நோ தேவ நாயக:‖ முநிம் தமநுஜக்ராஹ ஸர்வவித் ஸர்வசக்திக:‖'' என்கிறபடியே ஜீயரை விசேஷ கடாக்ஷம் செய்தருளி தம் மடியார்கள் அர்ச்சக பரிசாரகர்களான அனைத்துக் கொத்து பரிஜனங்களையும் அழைத்தருளி வானமாமலை ராமானுஜ ஜீயரை ஸகல விருதுகளுடன் மடத்திலே விட்டு வாருங்கோ ளென்று நியமித்துப் பின்னும் நமக்கு அத்யந்த ப்ரியதம ரான வானமாமலை ராமானுஜ ஜீயரை ஆசார்யராக பஜித்து உஜ்ஜீவியுங்கோளென்று திவ்யாஜ்ஞையிட்டருளினார். அப்படியே அனைவரும் தேவநாயகன் நியமித்தபடி சத்ரசா மரங்கள் ஸகலவாத்யங்கள் முதலான விருதுகளுடன் ராமா னுஜ ஜீயரை மடத்தில் எழுந்தருளப் பண்ணி ''ராமானுச முனி கனகமௌலி கலந்தூழி வாழியே'' என்று வாழ்த்தி மங்களாசாஸநம் செய்தருளி ஜீயராலே ஸம்மாநிக்கப்பட்டவர் களாய் யதாகத மெழுந்தருளினார்கள்.

அநந்தரம் வானமாமலைப் பெருமாளும் [1]''இத்யவ் யாஜ கடாக்ஷைஸ்தை: ஸம்மாந்யா நந்யநாயக:| தேந ஸம் பூர்ணகாமோபூத் ஸ்ரீமாந் வ்யோமாத்ரிநாயக:‖'' என்கிற படியே இவரை நிர்வ்யாஜமாகக் கடாக்ஷித்தருளி ''ஆத்மா கர்மத்தோடேபோம், ஈச்வரன் கண்ணநீரோடேபோம்'' என்றிராதே சேதந விஷயத்திலே தாம்திரிந்து பட்டனவெல் லாம் தீர ஸுகமே ஆஸநத்தில் வீற்றிருந்தார். [2]''தத: கூர் மாஸநாஸீநம் ராமாநுஜமிவாபரம்.| ப்ரணம்ய ஸர்வே

---

मुनिं भजध्व माचार्यं प्रियमत्यर्थमेव मे ।
इत्याज्ञाप्य तदाव्यग्रः प्रसन्नो देवनायकः ॥
मुनिं तमनुजग्राह सर्ववित्सर्वशक्तिकः ।

[1] इत्यव्याज्यकटाक्षैस्तै स्सम्मान्या नन्यनायकः ।
तेन संपूर्णकामोभूच्छ्रीमान् व्योमाद्रिनायकः ॥

[2] ततः कूर्मासनासीनं रामानुजमिवापरम् ।

ஸ்த்ரீ பாலா : நநந்து : புரவாஸிந :॥'' என்கிறபடியே உடைய வர் அபராவதாரமென்னும்படி கூர்மாஸனத்தில் எழுந்தருளி யிருக்கிற ஜீயரை நகரத்திலுள்ள ஸ்த்ரீபாலவ்ருத்தர்கள் எல்லாரும் ஸேவித்து நமக்கெல்லாம் கதியாக இப்படி விலக்ஷணமான ஒரு வஸ்துவை தெய்வநாயகன் தந்தருளினுர் என்று ஆநந்த நிர்ப்பரராயிருந்தார்கள்.

அநந்தரம் [1]'' வ்யோமசைலமுநே: ச்ருத்வா ப்ரபாவம் கேரளாதிப:| தத்பாதபத்ம ஸேவார்த்தீ ஸ்வயமாகாந் மஹீபதி:॥'' என்கிறபடியே கேரள தேசத்து ராஜாவும் மஹாப்ரபாவ சாலியான ஜீயருடைய வ்ருத்தாந்தத்தைக் கேட்டு அவர் திருவடிகளிலே ஸேவிக்க வேணுமென்று ப்ரேமத்தோடே " ராஜபாவாவஹேசுந:'' என்றும், ''புக்திமுக்தி ப்ரதே'' என்றும் சொல்லப்பட்ட மாஹாத்ம்யத்தையுடைய சேற்றுத் தாமரையிலே ஸ்நாநாநுஷ்டானங்களைப் பண்ணிக் கொண்டு சுத்தாந்த: கரணனுய் தேவநாதன் ஸந்நிதியேறச் சென்று அநேக உபஹாரங்களையும் ஸமர்ப்பித்து விசித்ரங்களான அநேக ரத்னங்களாலே பூர்ணங்களான அநேக ஆபரணங்களையும் பட்டுத் திருப்பரிவட்டங்களையும் ஸமர்ப்பித்து அக்காரவடிசில் முதலாக நாநாவிதமான தளிகைகளையும் ஸமர்ப்பித்து அதிஸந்துஷ்டனுனன். அநந்தரம் [2]'' ததோவாநமஹாசைல முநீந்த்ரம் ஸாந்த்ரபக்திமான் | ஸேவிதும் தந்மடத்வார மகமத் ப்ராஞ்ஜலிர்ந்ருப:॥'' என்கிறபடியே ராஜாவும் ஜீயரை தண்டம் ஸமர்ப்பிக்கைக்காக அத்யந்தம் விநீதநாய் அஞ்ஜலிஹஸ்தனுய் ஜீயர் மடத்து வாச

---

प्रणम्य सर्वे स्त्रीबाला ननन्दुः पुरवासिनः ॥

[1] व्योमशैलमुनेश्श्रुत्वा प्रभावं केरलाधिपः ।
तत्पादपद्मसेवार्थी स्वयमागान्महीपतिः ॥

[2] ततो वानमहाशैलमुनीन्द्रं सान्द्रभक्तिमान् ।
सेवितुं तन्मठद्वारमगमत्प्राञ्जलिर्नृपः ॥

யிலே சென்று அங்கே அப்ரதித்வந்தர் என்னும்படி மஹா தேஜஸ்வியாய், ஸ்தாநோசிதமான லக்ஷணங்களையுடைய ராய், ப்ரகாசமாநமான த்வாதசோர்த்த்வபுண்டரங்களாலே தேதீப்யமானராய், யஜ்ஞோபவீத துளஸீ நளிநாக்ஷமாலை களாலும் திருப்பவித்ர மாலைகளாலும் அலங்க்ருத திவ்ய காத்ரராய், தாமரைப் பூப்போன்ற திருமுகத்தையும் தாமரையிதழ்போன்ற திருக்கண்களையுமுடையராய் சிரஸ் ஸின் பச்சாத்பாகத்திற்கு அலங்காரமான சிகையையுமுடை யராய் அத்யந்தம் தயாளுவாய் கூர்மாஸநத்திலே எழுந் தருளியிருந்து சுற்றிலும் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீவைஷ்ண வர்களுக்கு பகவத்விஷயார்த்தங்களை ப்ரஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கிற ஸ்வாமி ஜீயரை [1]"தம் த்ருஷ்ட்வா விஸ் மிதோ தூராத் ப்ரணநாம நராதிப:" என்று தூரத்திலேயே கண்டு ஸாஷ்டாங்கமாக் தண்டம் ஸமர்ப்பித்து இப்படி மஹா தேஜஸ்வியாய் மஹாநுபாவராய் எழுந்தருளியிருக்கிற ஸ்வா மியை "இற்றைக்கு ஸேவிக்கப்பெற்றோமே" என்று ஆநந்த பரவசனாய் நின்றபடியே ஸ்வாமி மடத்தில் நித்யததீயார தநார்த்தமாக ஸாரக்ஷேத்ரங்களான க்ராமங்களை மான்யங் களாக ஸமர்ப்பித்து பின்னும் தநதான்யங்களையும் விசேஷ மாக ஸமர்ப்பித்து [2]"ஸ்ரீபாததீர்த்தம் பாபக்நம் சேஷமந்ந மயாசத|க்ருதார்த்தோஹம் பவாமீதி முநிமாஹாவநீச்வர:|" என்கிறபடியே பின்னும் ராஜாவான தான் க்ருதார்த்தனு கைக்காக ப்ரஸாத சேஷமும் ஸ்ரீபாததீர்த்தமும் க்ருபை செய்தருளவேணும்" என்று ப்ரார்த்திக்க, ஸ்வாமியும் 'விலக்ஷண ஸம்பந்தமில்லாதவன்' என்று சிந்தித்திருக்க அப்பொழுது ஸந்நிதியிலுள்ளாரெல்லாரும் க்ருபை செய்

---

1 तं दृष्ट्वा विस्मितो दूरात् प्रणनाम नराधिपः ।

2 श्रीपादतीर्थं पापघ्नं शेषमन्नं मयाचत ।
कृतार्थोऽहं भवामीति मुनिमाहावनीश्वरः ॥

தருள வேணுமென்று அநுவர்த்தித்து ப்ரார்த்திக்க, ஸ்வாமியும் ராஜாவின் இஷ்டப்படி தீர்த்தம் ப்ரஸாதம் ப்ரஸாதிக்க ராஜாவும் அவைகளைப் பெற்று சந்தோஷபரனாய் 1"லௌகிகம் வைதிகம் சைவ மர்யாதாதிசயம் ச யத்| ஸ்ரீவாநசைலநாதஸ்ய க்ராமகோசாதிகம் ச யத்|| ஸர்வம் தத் தத்வசம் க்ருத்வா ந்யவர்த்தத ததோ ந்ருப:|" என்கிறபடியே ராஜாவும் தெய்வநாயகப் பெருமாள் ஸந்நிதி க்ராமங்கள் கோசங்கள் வைதிகலௌகிக ஸமஸ்தமர்யாதாதிசயங்கள் அனைத்தையும் ஜீயரதீநமாக்கிவைத்து ஸ்வநகரமே போய்ச்சேர்ந்தான்.

அநந்தரம் ஜீயரும் உடையவருக்கு ஸந்நிதி கட்டி ப்ரதிஷ்டிப்பித்து ஜீர்ணமான வானமாமலை விமானத்தையும் ஸ்தூபிபர்யந்தம் திருப்பணி செய்து வெளி அர்த்த மண்டபத்தையும் கட்டியருளி 2" அகாரயத் பராமர்சம் ஸ்ரீரங்கே யதிராஜவத்" என்கிறபடியே கோயிலில் ஸமஸ்த ஸ்ரீகார்யங்களையும் உடையவர் பராமர்சித்தாப்போலே ஸந்நிதி ஸ்ரீகார்யங்களைப் பராமர்சித்துக்கொண்டு மடத்திலே ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு நித்யததீயாராதனம் நடத்திக்கொண்டும் எழுந்தருளியிருக்கிற காலத்திலே, ஸ்வாசார்யர் ஸந்நிதியில் நித்ய கைங்கர்யார்த்தமாக எழுந்தருளவேணுமென்கிற த்வராதிசயத்தாலே 3"ஸுகமாஸ்வேதி யொகீந்த்ரஸ் ஸ்வமடே கஞ்சித் ஆதிசத்" என்கிறபடியே ஒரு ஸ்ரீவைஷ்ணவரை மடத்திலேயிருந்து நித்யததீயாராதனங்களையும் ஸந்நிதி ஸ்ரீகார்யங்களையும் வஹித்துப் பார்க்கும்படி நியமித்தருளி, தாம் ஸ்வாசார்

---

1 लौकिकं वैदिकञ्चैव मर्यादातिशयं च यत् ।
श्रीवानशैलनाथस्य ग्रामकोशादिकं च यत् ॥
सर्वं तत् तद्वशं कृत्वा न्यवर्तत नृप स्ततः ।

2 अकारयत् परामर्शं श्रीरङ्गे यतिराजवत् ।

3 सुखमास्वेति योगीन्द्रस्स्वमठे कश्चिदादिशत् ।

யர் எழுந்தருளியிருக்குமிடமான திருநகரியேற எழுந்தருள த்வரித்துக் கொண்டிருக்கும காலத்திலே,

[1]“ அத வாநாத்ரியோகீந்த்ரஸ் ஸௌம்யஜாமாத்ருயோகிணா| ஆஹூத: கார்யமுத்திச்ய ப்ரதஸ்தே குருகாம் புரீம்||” என்கிறபடியே ஆழ்வார் திருநகரியிலிருந்து ஸ்வாசார்யரான அழகிய மணவாளப்பெருமாள் நாயனாரும் கார்யார்த்தமாக ஜீயரை அழைத்து வரும்படி ஒரு ஸ்ரீவைஷ்ணவரை வரவிட ஜீயரும் உடனே புறப்பட்டு “ மாடமாளிகை சூழ்ந்தழகாய திருக்குருகூர்” ஏற எழுந்தருளி மஹாப்ரபாவசாலியாய் எழுந்தருளியிருக்கிற ஸ்வாசார்யரான நாயனாரை ஸாஷ்டாங்கமாக தண்டம் ஸமர்ப்பித்து ஸ்வாமி திருமேனியைத் திருவடிமுதல் திருமுடியளவாக ஸேவித்து ஆநந்த பரவசராய் இழந்த நாளிழவெல்லாம் தீரும்படி அநுபவித்துக்கொண்டிருக்க, நாயனாரும் இவரைக் குளிரக் கடாக்ஷித்து வாரி அணைத்துக் கொண்டு தேசாந்தரகதனான புத்ரனைக் கண்ட மாதாபிதாக்களைப்போலே அதிஹ்ருஷ்டராய் “ நம் பொன்னடியானீரோ பொன்னடிக்கால் ஜீயரே” என்று திருநாமம்சாற்றி அழைத்தருளி தெய்வநாயகன் திருச்செல்வமெல்லாம் அபிவ்ருத்தமாக நடந்துவருகிறதா?” என்று ப்ரச்னம் பண்ணியருளி” [2]“கடாக்ஷயந் ஜகாதே மம் முநிமாத்ம மஹாயதிம்”, [3]“ அஹமாச்ரமம் ஆஸாத்ய துரீயம் ப்ரதமம் தத:| துப்யம் தாதுமநா ஆஸம் அக்ரகந்தாஸி மே பவாந்||” என்கிறபடியே தம்முடைய ஸமஸ்த ஸம்பத்தான

---

1 अथ वानाद्रियोगीन्द्रस्सौम्यजामातृयोगिना ।
आहूतः कार्यमुद्दिश्य प्रतस्थे कुरुकां पुरीम् ॥

2 कटाक्षयन् जगादेमं मुनि मात्ममहायतिम् ।

3 अहमाश्रममासाद्य तुरीयं प्रथमं ततः ।
तुभ्यं दातुमना आसं अग्रगन्तासि मे भवान् ॥

பொன்னடிக்கால் ஜீயரைத் திரும்பவும் கடாக்ஷித்து "ஜீயரே! நாம் ஸந்யஸித்து அநந்தரம் உமக்கு ஸந்யாஸம் தருவோமென்றிருந்தோம்; நீர் முந்தினீர்; [1]மந்யே ப்ராப்தம் மஹத் பாக்யம் இதி ப்ரீதோ(அ) பவத் குரு:|| என்று அதுவே நமக்கு ப்ராப்தமான மஹாபாக்யம்" என்று ரொம்பவும் ப்ரீதரானார்.

அநந்தரம் ஜீயரும் ஸ்வாசார்யரான நாயனார் திருவடிகளில் ப்ரார்த்தித்து மஹாபாவநமாய் போக்யமாயுள்ள ஸ்ரீபாததீர்த்தம் பெற்று ஸ்வீகரித்து தம்முடன் கூடவந்த ஸ்ரீவைஷ்ணவர்களுக்கும் ப்ரஸாதித்தருளினார். அநந்தரம் (பின்னும்) நாயனாரும் திருவாராதநார்த்தமாக வேண்டும் த்ரவ்யங்களை ஸங்க்ரஹித்துக் கொண்டு யாகபூமியிலெழுந்தருளியிருந்து எம்பெருமான் யாகத்தை நடத்தியருளி பிறகு [2]"யோகீந்த்ரேண ஸமம் பச்சாத நுயாகம் விதாய ஸ:| அந்தேதிபாவநம் தேந ப்ரஸாதம் ப்ரார்த்திதோ ததௌ||" என்கிறபடியே ஜீயரையுங் கூட்டிக்கொண்டு அநுயாகத்துக்கெழுந்தருளி நாயனாரமுதுசெய்தருளி கடைசியில் ஜீயர் நாயனாருடைய தளிகை ப்ரஸாதம் ப்ரார்த்திக்க அவரும் க்ருபையாலே ப்ரஸாதிக்க ஜீயரும் ஸ்வீகரித்து க்ருதார்த்தரானார். பின்பு அநுசரர்களையும் புஜிப்பித்தவநந்தரம் நாயனாரும் காலக்ஷேபார்த்திகளான ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு திருவாய்மொழி காலக்ஷேபம் ஸாதிக்கும் ஆரம்பத்திலே [3]"ததா ககநசைலேசத்ரவிடோபநிஷத்கிராம்| வ்யாக்யாநாவஸரம்

---

[1] मन्ये प्राप्तं महद्भाग्यमिति प्रीतोऽभवद्गुरुः ।

[2] योगीन्द्रेणसमं पश्चादनुयागं विधाय सः ।
अन्तेऽतिपावनं तेन प्रसादं प्रार्थितो ददौ ॥

[3] तदा गगनशैलेश-द्रविडोपनिषद्गिराम् ।
व्याख्यानावसरं ज्ञात्वा मुनि रेष तुतोषह ॥

ஜ்ஞாத்வா முநிரேஷ துதோஷ ஹ॥'' என்கிறபடியே அற்றைக்கு காலக்ஷேப ஆரம்பகட்டம் நோற்ற நோன்பு திருவாய்மொழியாக நேரிட்டு நடவாநிற்க வானமாமலை ராமானுஜ ஜீயரு மத்தைக் கேட்டு அத்யந்தம் ஆநந்த பரவசராய் ஸ்தப்தராயிருக்க நாயனாரும் இவருடைய உகப்பைக் கண்டு, அங்கிருந்த காலக்ஷேபபரர்களுக்கு ஜீயருடைய ஜ்ஞாநபக்தி வைராக்யாதி குணாதிசயங்களை அருளிச்செய்து ஜீயருடன் கூடவே திருவாய்மொழி காலக்ஷேபம் முழுவதை நடத்தியும் சாத்தியுமருளினார்.

அநந்தரம் நாயனாரும் [1]''சுபேந மநஸா த்யாயந்'' என்கிறபடியே அப்போதொரு சிந்தைசெய்து ''நமக்கெல்லாம் நற்சீவனான நம்பெருமாளை ஸேவித்துக்கொண்டு அத்தலைக்கு அதிசயாவஹமான மங்களாசாஸநம் பண்ணிக்கொண்டு யாவத்தேஹம் அங்கே யிருக்கையன்றோ நமக்கு ப்ராப்தம்'' என்று அறுதியிட்டு ஆழ்வார் திருமுன்பே சென்று விடைபெற்றுக்கொண்டு எழுந்தருளி, [2]''தத: ஸ்ரீமஞ்ஜுஜாமாதா ரங்கராஜதித்ருக்ஷயா। ப்ரஸ்தாநமகரோத்தேந ஸஹ வாநாத்ரியோகிநா॥'' என்கிறபடியே வானமாமலை ராமானுஜ ஜீயரை அழைத்துக்கொண்டு புறப்பட்டருளி ''எம்பெருமான் திருவரங்கம் எங்கே'' யென்று நாடிக்கொண்டு எழுந்தருளுகிற வளவிலே, [3]''மத்யே ஸ்ரீதந்விநகரே கோதாம் வேதாந்ததீபிகாம்। ந்யக்ரோதபத்ரசயனஹரேரதிமநோஹராம்॥'' என்கிறபடியே ''வில்லிபுத்தூருறைவான்மன்

---

1 शुभेन मनसा ध्यायन्

2 तत श्श्रीमञ्जुजामाता रङ्गराजदिदृक्षया ।
प्रस्थान मकरोत्तेन सह वानाद्रियोगिना ॥

3 मध्ये श्रीधन्विनगरे गोदां वेदान्तदीपिकाम् ।
न्यग्रोधपत्रशयनहरे रतिमनोहराम् ॥

பொன்னடி காண்பதோராசையினால்'' வில்லிபுத்தூரேற எழுந்தருளி [1]''யந்மௌலிமாலிகா மேவ ஸ்வீகரோதி ஸ்வயம்ப்ரபு:'' என்கிறபடியே எழுந்தருளியிருக்கிற வடபெருங் கோயிலுடையானையும் பெரியாழ்வாரையும் மங்களாசாஸநம் செய்தருளி அநந்தரம் ''அன்னவயல் புதுவை யாண்டாளையும்,'' ''நீளாதுங்கஸ்தநகிரிதட'' என்றுதொடங்கி ''நம இதமிதம் பூய ஏவாஸ்துபூய:'' என்று ஸேவித்து [2]ப்ரணம்ய தத்குணைர்பத்த: 'தஸ்தௌ தத்ர த்ரயஹாந்யஸௌ'' என்கிறபடியே த்ரிதிநம் அங்கே வஸித்து அங்குநின்றும் ஸ்வாமி நாயனார் வானமாமலை ஜீயரையுங் கூட்டிக்கொண்டு புறப்பட்டு [3]''ஸ்ரீசைலமபஜத் ஸ்ரீமாந் மந்திரம் ஸுந்தரஸ்ய ஸ:'' என்கிறபடியே தென்னன் திருமாலிருஞ்சோலை ஏறவெழுந்தருளி, ''[4]நூபுராஹ்வநதீமூலே ப்ரதமே நிர்ஜ்ஜரே ததா | ஸ்நாத்வா'' என்கிறபடி நூபுரகங்கையிலே நீராடி உசிதமான அநுஷ்டாநங்களையும் செய்தருளி ''திருமாலிருஞ்சோலை நின்ற சுந்தரன்'' கழல்வணங்க எழுந்தருளுகையில் அலங்கார ஸ்தலத்திலுள்ளார்கள் சிஷ்யரான வானமாமலை ஜீயருடன் எழுந்தருளுகிற நாயனாரை தண்டம் ஸமர்ப்பித்து அலங்க்ருதர்களாய் முன்னே செல்ல ஸ்வாமியும் பின்னே எழுந்தருளி ''[5]லாளிதோ கோபுரத்வாரே சடகோபாகமேந ஸ:|'' என்கிறபடியே ''கொடியணிநெடுமதிள் கோபுர'' வாசலிலே ஸந்நிதி பரிகரங்களும் அர்ச்சகர் முதலானோரும் முறை முறை எதிர்கொண்டு ஸ்ரீ சடகோபன் எழுந்

---

[1] यन्मौलि मालिकामेव स्वीकरोति स्वयं प्रभुः ।

[2] प्रणम्य तद्गुणैर्बद्धस्तस्थौ तत्र त्र्यहान्यसौ ।

[3] श्रीशैलमभजच्छ्रीमान् मन्दिरं सुन्दरस्य सः ।

[4] नूपुराह्वनदीमूले प्रथमे निर्झरे तदा । स्नात्वा

[5] लालितो गोपुरद्वारे शठकोपागमेन सः ।

தருளப்பண்ணு நிற்க நாயனாரும் தண்டன் ஸமர்ப்பித்து ஸ்ரீ சடகோபனை சிரஸா வஹித்து உள்ளே எழுந்தருளி [1]"ததர்ச ஸுந்தரம் த்ரஷ்ட்ருத்ருஷ்டி-சித்தாபஹாரிணம்" என்கிறபடியே "திருமாலிருஞ்சோலை நின்றான் கனைகழல் கனைக்கண்டு "செஞ்சொற் கவிகாள்" திருவாய்மொழியை அநுஸந்தித்து மங்களாசாஸநம்செய்தருளி தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் முதலான வரிசைகளையும் ஸாதிக்கப் பெற்றுக்கொண்டு [2]"ஈசஸ்யாச்சர்ய ஸௌந்தர்யா துவாஸ த்ரிதிநாந்ய ஸௌ" என்று பெருமாளுடைய ஸௌந்தர்யத்திலே ஈடுபட்டு மூன்று தினங்கள் அங்கே வஸித்து, அங்கு நின்றும் புறப்பட்டு ப்ரயாணகதியிலே சில காலங்கள் கழித்து "செழுந்தடம்புனல் சூழ்திருவரங்க" மேறச்சென்று "கங்கையில் புனிதமாய காவிரி"யில் நீராடி யதோசிதமான அநுஷ்டானங்களையும் செய்தருளி, [3]"க்ருதக்ருத்ய: ப்ரஸந்நாத்மா ஸ்ரீரங்கம் புரமாவிசத்" என்றும் [4]"ஸசிஷ்யஸ் ஸஹஸா கச்சத் ரங்கராஜம் ஸிஷேவிஷு:" என்றும் சொல்லுகிறபடியே ஸ்வாமி நாயனாரும் ஸ்வசிஷ்யரான வானமாமலை ராமாநுஜஜீயருடன்கூட திருவரங்கந் திருப்பதியினுள்ளே புக்கு திருச்சோலைகளையும் திருவீதிகளையும் ஸேவித்துக்கொண்டு நான்முகன் கோபுரவாசலினுள்ளே புகுந்து [5]"தேவீகோதாயதிபதிசடத்வேஷிணௌ" என்று தொடங்கி அடைவிலே மங்களாசாஸநம் செய்தருளி ஸ்ரீரங்க

---

1 ददर्श सुन्दरं द्रष्टृदृष्टिचित्तापहारिणम् ।

2 ईशस्याश्चर्यसौन्दर्या दुवास त्रिदिनान्यसौ ।

3 कृतकृत्यः प्रसन्नात्मा श्रीरङ्गं पुरमाविशत् ।

4 सशिष्य स्सहसा गच्छ द्रङ्गराजं सिषेविषुः ।

5 देवीगोदायतिपतिशठद्वेषिणौ

நாய்ச்சியார் ஸந்நிதி ஏற எழுந்தருளி '' [1]''ஏகம் ந்யஞ்ச்ய பதாம்போஜம் ஆஸீநாம் கமலாஸநே'' என்கிறபடியே எழுந்தருளியிருக்கிற ஸ்ரீரங்கநாய்ச்சியாரைத் திருவடி தொழுது மங்களாசாஸநம் செய்து [2]''தத, ச்சத்ராபிதே த்வாரே ப்ரணம்ய பரிபாலகௌ| ஸ்ரீரங்கராஜமத்ராக்ஷீத் ரம்யஜாமாதரம் ப்ரபும்'' என்கிறபடியே த்வாரபாலகர்களை தண்டம் ஸமர்ப்பித்து உள்ளே புகுந்து திருமணத்தூணருகே சென்று ''மாயோனை மணத்தூணேபற்றி நின்று வாயார வாழ்த்தி'' அமலனுதிபிரானில்படியே பாதாதி கேசாந்தமாக அனுபவித்துப் பல்லாண்டு பாடி நின்று [3]''சந்த்ரகுங்கும ஸம்பிந்நசந்தநோரஸமத்புதம்| ஸஹாந் தேவாஸிநா ரம்யஜாமாதா க்ஷேமமைக்ஷத||'' என்கிறபடியே நாயனுரை நாமே தேடிக்கொள்ளுவோமென்றிருக்கும் தேவரீர் நியோகத்தாலே ஆசார்யனும் சிஷ்யனுமாய் விடை கொண்டிருக்கு மடியோங்களுக்கு ஸ்வரூபாநுரூபமான உதர்க்க க்ஷேமத்திற்கும் தேவரீரே கடவரென்று ப்ரார்த்தித்து நிற்க, பெருமாளும் தேசாந்தரகதனை புத்ரனைக் கண்ட மாதா பிதாக்களைப் போலே தந்தையும் தாயுமான நாம் இவரைக் கண்டு ப்ரஸந்நவதநேக்ஷணராய் கருணம்ருதவ்ருஷ்டிகளாலே குளிரக் கடாக்ஷித்தருளி நமக்காவாரை நாமே தேடிக்கொள்வோம் என்று அருளிச்செய்து தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் ஸ்ரீ சடகோபன் ப்ரஸாதம்

---

[1] एकं न्यञ्च्य पदांभोज मासीनां कमलासने ।

[2] तत श्छत्राभिधे द्वारे प्रणम्य परिपालकौ ।
श्रीरङ्गराज मद्राक्षी द्रम्यजामातरं प्रभुम् ॥

[3] चन्द्रकुङ्कुमसंभिन्न चन्दनोरस मद्भुतम् ।
सहान्तेवासिना रम्यजामाता क्षेम मैक्षत ॥

இவைகளை ப்ரஸாதிக்கப் பெற்றுக்கொண்டு [1]"ஸம்பச்யந் நததர்ப்பாஸௌ அபாஸர்ப்பத் சனைர் பஹி:" என்கிற படியே சேர்த்தி அழகையெல்லாம் ஸேவித்து மனமடங்காதே புறப்பட்டு மெள்ள எழுந்தருளி ப்ரதக்ஷிணமாக எழுந்தருளுகையில் "[2]கடாக்ஷயந் முநிவரம் சாயாபூதம் மஹாமதிம்|" என்கிறபடியே நாயனாரும் தமக்குச் சாயை போலே ப்ருதக்ஸ்திதியில்லாதவரான வானமாமலை ராமானுஜ ஜீயரைக் கடாக்ஷித்துக்கொண்டு எழுந்தருளுகையில் [3]"ஸந்நிதௌ ப்ராப்த மகிலம் ப்ரஸாதம் ப்ரீதமாநஸ:| ப்ரியாய ப்ரததௌ வாநசைல லக்ஷ்மணயோகிநே||" என்கிறபடியே ஸந்நிதியிலே பெருமாள் ப்ரஸாதித்த ப்ரஸாதங்களை எல்லாம் தான் ப்ரஸாதப்பட்டுப் பின்பு தமக்கு அந்தரங்கசிஷ்யரான வானமாமலை ஜீயருக்கு ப்ரஸாதித்து க்ருபை செய்தருளி யாவரும் அதை ப்ரஸாதப்பட்டு [4]"தம்ப்ரதக்ஷிண மாயாந்தம் ககநாத்ரிமுநீச்வர:| அந்வகாத் தத்பதாம் போஜபோக்யதாஸக்தமாநஸ:||" என்கிறபடியே ப்ரதக்ஷிணமாக வெழுந்தருளுகிற நாயனாருடைய திருமேனி அழகையெல்லாம் ஸேவித்துக்கொண்டு அவர் திருவடி ஸேவையே பரமபோக்யமென்று அபிஸந்திபண்ணி பாதரேகாமயராய்ப் பின்பு உள்ளே எழுந்தருளி [6]"தத: ஸ பவ

---

[1] संपश्य न्नततर्पासा वपासर्प च्छनै र्बहिः।

[2] कटाक्षयन् मुनिवरं छायाभूतम्महामतिम्।

[3] सन्निधौ प्राप्त मखिलं प्रसादं प्रीतमानसः।
प्रियाय प्रददौ वानशैललक्ष्मणयोगिनः॥

[4] तं प्रदक्षिण मायान्तं गगनाद्रिमुनीश्वरः।
अन्वगा त्तत्पदांभोजभोग्यतासक्तमानसः॥

[5] ततस्स भवनं गत्वा

நம் கத்வா ” என்கிறபடியே நாயனாரும் கோயிலண்ணன் திருமாளிகையேற வெழுந்தருளி வானமாமலை ஜீயராலே ஸேவிக்கப்பட்டவராய் ஆஸநத்திலே எழுந்தருளியிருந்தார். அநந்தரம் அங்கே பெரிய பெருமாளும் [1]“ஸ்ரீமாந் ஸ்ரீரங்க ராஜச் சுபகுணஜலதே: ஸௌம்யஜாமாத்ருஸூரே: ஸ்ரீமத் பாதோர்த்தவரேகாம் ககநகிரிமுநிம் லோகஜீவாதுபூதம் | ஸம்ப்ரேக்ஷ்யாதாம்ரநீலாமலதளதரவிந்தாயதாக்ஷஸ் ததாநீம் க்ஷேமம் மேநே கரஸ்தம் ஸகலதநுப்ருதாம் தர்சனம் சாபிவ்ருத்தம் ”, [2]“ அயம்முநீந்த்ரோநுதிநம் ஸமேதிதஸ்வபாவஸித்தைச் ச சுபாந்விதைர் குணை:| உவாஸ மாஸாந் கதிசித் மஹாகுரோ ரதீநதா மாப்ய ரமாபதிம் பஜந்||” என்று சொல்லுகிறபடியே அத்யந்தம் கல்யாணகுணங்களுக்கெல்லாம் ஸ்தாநபூதரான அழகிய மணவாளப் பெருமாள்நாயனாருக்கு பாதரேகாமயரான வானமாமலை ஜீயரை லோகத்திலே தர்சன விஷயத்துக்கு ஜீவாதுவாகும்படி தம்முடைய செந்தாமரைக் கண்களாலே கடாக்ஷித்தபிறகு தர்சநம் அபிவ்ருத்தமாயிற்று, ஸகலசேதநர்களுக்கும் ஸ்வரூப ப்ராப்தி கைபுகுந்தது என்று திருவுள்ளத்திலே ஓடி கர்மபத்தராய் அலையும் சேதனகோடிகளைக் கண்டு கண்ணும் கண்ணீரு

---

[1] श्रीमान् श्रीरङ्गराज श्शुभगुणजलधे स्सौम्यजामातृसूरे
श्श्रीमत्पादोर्ध्वरेखां गगनगिरिमुनिं लोकजीवातुभूतम् ।
संप्रेक्ष्या ताम्रनीलामलदलदरविन्दायताक्ष स्तदानीं
क्षेमं मेने करस्थं सकलतनुभृतां दर्शनं चाभिवृद्धम् ॥

[2] अयम्मुनीन्द्रो नुदिनं समेधित-
स्वभावसिद्धैश्च शुभान्वितै गुणैः ।
उवास मासान् कतिचिन् महागुरो-
रधीनता माप्य रमापतिं भजन् ॥

மாய் அது மாறுகைக்கு ஓடித்திரிந்த நோவெல்லாம் தீரப் படுத்த பைந் நாகணையராய் சயனித்து நிர்ப்பரரானார். வான மாமலை ஜீயரும் தம்முடைய ஆசார்யரான நாயனாரை ஸ்வ ரூபாதிகுணங்கள் அபிவ்ருத்தமாம்படி அநுவர்த்தித்துப் போந்து நம்பெருமாளை மங்களாசாஸநம் பண்ணிப்போந் திருக்கும் காலத்திலே.

1" ததோ வாநாத்ரி யோகீந்த்ர: ஸ்ரீவேங்கடகிரிம் ப்ரதி| ப்ரதிஷ்டாஸு: ஸமாப்ருச்ச்ய தஸ்தௌ குருஸமீபத:||" என்கிறபடியே ஜீயரும் திருவேங்கட முடையானை மங்களா சாஸநம் பண்ணத் திருவுள்ளமாய் ஆசார்யரான நாயனார் திருவடிகளிலே தண்டன் ஸமர்ப்பித்து ப்ரார்த்தித்து நிற்க, 2"இதி தஸ்ய வச: ச்ருத்வா தமுவாச ததோத்தரம்| அநுவ்ர ஜாம் யஹமபி த்வாம் யாந்தம் பக்திஸாரவத்||" என்கிற படியே ஸ்வாமி நாயனாரும் "கணிகண்ணன் போகின்றான் காமருபூங்கச்சி மணிவண்ணா நீ கிடக்க வேண்டா—துணி வுடைய செந்நாப் புலவனும் போகின்றேன்—நீயுநின் பைந் நாகப்பாய் சுருட்டிக்கொள்" என்று கணிகண்ணனைப் பின் சென்ற திருமழிசைப் பிரானைப்போலே நாமும் உம்மைப் பின்சென்று வருகிறோம் என்றருளிச் செய்து ஜீயருடன் கூட நம்பெருமாள் ஸந்நிதிக்கு எழுந்தருளி மங்களாசாஸநம் செய்தருளி வடதிருவேங்கடம் முதலான வடதிசையிலுள்ள திருப்பதிகளை மங்களாசாஸநம் பண்ண வேணுமென்று விண்ணப்பம் செய்து விடைபெற்றுக் கொண்டு புறப்பட் டருளி "முப்போதும் வானவரேத்தும் முனிவர்கள் வெள்

---

1 ततो वानाद्रियोगीन्द्र श्श्रीवेङ्कटगिरिं प्रति।
प्रतिष्ठासु स्समापृच्छ्य तस्थौ गुरुसमीपतः॥

2 इति तस्य वचश्श्रुत्वा तमुवाच तदोत्तरम्।
अनुव्रजाम्यहमपि त्वां यान्तं भक्तिसारवत्॥

ளறை''யிலே சென்று பங்கயச் செல்வியார் புருஷகாரமாக செந்தாமரைக் கண்ணரையும் மங்களாசாஸனம் பண்ணி யருளி அங்கு நின்றும் புறப்பட்டு ஸ்ரீமுஷ்ணத்தில் ச்வேதவ ராஹரையும் ஸேவித்துப் புறப்பட்டு "திருக்கோவலூர தனுள் கண்டேன் நானே'' என்கிறபடியே திருக்கோவலூர் மங்களாசாஸநம் செய்தருளிப் புறப்பட்டு ''வண்பூங்கடிகையில்''தக்கானையும் மங்களாசாஸநம் செய்தருளி கடிகைத் தடங்குன்றின் மீதிருந்த அக்காரக்கனியையும் மங்களாசாஸநம் செய்தருளி "பரன்சென்று சேர் திருவேங்கட மாமலை'' யிலே திருவேங்கடமுடையானைத் திருவடிதொழுகையிலே திருவுள்ளமாய்ப் பெருங்கூட்டத்துடன் போவான் வழி கொண்டு அதித்வரையுடன் செல்லா நிற்க அங்கே திருமலையிலே திருவேங்கடமுடையானும் [1]"சிஷ்யாசார்யதநுத்வயம் நிரபஜத் ப்ராயேண லக்ஷ்மீபதிர் ஹ்யேகோ பூத் நரஸம்ஜ்ஞக: ததபரோ நாராயணாக்ய: புரா| அத்யத்வேகதர: க்ருபாம்ருதநிதி: ஸௌம்யோபயந்தாமுநி: தச்சிஷ்யாக்ரஸரோபரோவிஜயதெ நாராயணாக்யோமுநி:॥'' என்கிறபடியே "தமக்கு வாஸஸ்தாநமாயிருந்துள்ள திருவநந்தாழ்வான் அவதாரம் நாயனாரென்றும் அவரோடு அபிந்நமான ஓரவதாரம் வானமாமலை ஜீயரென்றும்'' இப்படி சிஷ்யாசார்யாவதார ரஹஸ்யத்தை ப்ரகாசிப்பிக்கைக்காக அங்கு ப்ரதாநபூதரான பெரிய கேள்வி ஜீயருக்கு ஸ்வப்நம் காட்டியருளினார்.

எப்படியென்னில் "ஆழ்வார் தீர்த்தத்திற்குத் தெற்கிலுள்ள திருத்தோப்பின் அருகே இவர் வடக்கு முகமாய் நிற்

---

1 शिष्याचार्यतनुद्वयं निरभजत्प्रायेण लक्ष्मीपति-
र्ह्येकोभून्नरसंज्ञक स्तदपरो नारायणाख्यः पुरा ।
अद्यत्वेकतरः कृपामृतनिधि स्सौम्योपयन्ता मुनि-
स्तच्छिष्याग्रसरोऽपरो विजयते रामानुजाख्यो मुनिः ॥

கிறதாகவும், "[1]தஸ்மிந் திநே வெங்கடசைல தேசே சேஷாக்ருதி: ஸௌம்யவர: ஸசிஷ்ய:| ஸ்வப்நே ததா வெங்கடசைலமாத்ரகாத்ரோ பவத் வெங்கடயோகிநோஸௌ ||" என்கிறபடியே திருமலையாழ்வாரின் மேலக்கோடி தொடங்கி கீழக்கோடிமட்டும் அதிஸ்தூலமுமாய் தீர்க்கமுமாய் இருக்கிற திருமேனியையுடையராய் மேற்கே திருமுடியும் கிழக்கே திருவடிகளுமாய் தெற்கு திக்கைக் கடாக்ஷித்துக் கொண்டு பெரிய பெருமாளைப்போலே ஒரு ஸ்ரீவைஷ்ணவர் கண் வளர்ந்தருளுவதாகவும் ஒரு ஜீயர் திருவடிப் பார்ச்வத்தில் நிற்கிறதாகவும், இவர் யார் என்று போவார் வருவாரைக் கேட்க "இவர் முப்பத்தாறுயிரப் பெருக்கராகிய கோயில் அழகிய மணவாளப்பெருமாள் நாயனார், இவர் அவர் சிஷ்யர் பொன்னடிக்கால் ஜீயர்" என்றும் சொல்லியதாக (ஸ்வப்நம்) கண்டு கண்விழித்து ஒரு ஸ்வப்ந வைபவமிருக்கும்படி யென்னென்று ப்ரீதியுடனே எழுந்திருந்து காலையில் திருப்புரட்டாசி இரண்டாந் திருநாள் காலைப் புறப்பாட்டுக்கு எழுந்தருளி இயல்தொடங்குகிறவிடத்திலே பெரிய கேள்வி ஜீயர் இச்செய்தியை ஸ்வாமிகளுக்கறிவிக்க அதைத் தோழப்பையங்கார் கேட்டருளி [2]"ஸ்வப்நே ப்ருஹத்யதீந்த்ரஸ்ய ஸ்ரீசைலஸஹிதோமஹாந்| தேஹீ சயாநஸ் ஸந்த்ருஷ்டோ ஸௌம்யஜாமாத்ருதேசிக:|| ததர்ச பச்சாத் தஸ்யைவ பாதமூலே யதீச்வரம் | ப்ராஞ்ஜலிம் ப்ரணதம் ப்ரஹ்வம் ஸ்வர்ணாதிபதஸம்ஜ்ஞகம்" என்று ச்லோகமாக அருளிச் செய்

---

[1] तस्मिन् दिने वेङ्कटशैलदेशे शेषाकृति स्सौम्यवर स्सशिष्यः।
स्वप्ने तदा वेङ्कटशैलमात्रगात्रोऽभवद्वेङ्कटयोगिनोऽसौ ॥

[2] स्वप्ने बृहद्यतीन्द्रस्य श्रीशैलसहितो महान्।
देही शयान स्सन्दृष्टो सौम्यजामातृदेशिकः ॥
ददर्श पश्चात्तस्यैव पादमूले यतीश्वरः।
प्राञ्जलिं प्रणतं प्रह्वं स्वर्णादिपदसंज्ञकम् ॥

தார். இத்தையெல்லாம் கேட்டு பெரிய கேள்வி ஜீயர் உகந்தார். அப்போது தேசாந்தரத்திலிருந்து எழுந்தருளிய பெரியோர்களில் சிலர் இப்படி ஸேவைஸாதித்தது கோயில் நாயனூர் என்ன, வேறு சிலர் அவர் திருநாளைக்கு எழுந்தருளுகிறார் என்ன, மற்றும் சிலர் நாயனார் தம்முடைய சிஷ்யரான வானமாமலை ஜீயரைத் "தமக்கு ப்ராண ஸுஹ்ருத்" என்றும் "பொன்னடிக்கால் ஜீயர்" என்றும் அருளிச்செய்வர் என்ன, ஆனால் இந்த விசை (இத்தடவை) திருநாளைக்கு மஹாதிசயம் உண்டாய்த்தென்று அனைவரும் போர உகந்து எதிர்பார்த்துக்கொண்டு எழுந்தருளியிருக்க நாயனாரும் பயணகதிகளிலே எழுந்தருளி [1]"தத: ஸ்ரீவெங்கடகிரிம் த்ருஷார்த்தாவிவ ஜக்மது:| கோவிந்தராஜம் பேஜாதே பஜத்சித்தாபஹாரிணம்||" என்கிறபடியே "வேங்கடத்துறைவார்க்கு நம" என்று ஸேவிக்கத் தாபத்தோடே த்வரையாக எழுந்தருளி திருமலையை தண்டனிட்டு அடிவாரத்திலே கோவிந்தராஜரையும் திருவடிதொழுது [2]"அதாருருஹதுர் ஹைமம் சேஷாகாரம் கிரீச்வரம் | ஸ்வாமிபுஷ்கரிணீம் கத்வா ஸ்நாத: ஸ்வாநுசரைஸ் ஸஹ||" என்கிறபடியே திருமலையேறி எழுந்தருளி சிஷ்யரான வானமாமலை ஜீயருடன் கூட ஸ்வாமிபுஷ்கரிணியில் நீராடி திருமண்காப்பு சாற்றிக்கொண்டு க்ரமேண மங்களசாஸநம் பண்ணிக் கொண்டு உள்ளே எழுந்தருளி [3]"தத்ர வந்தாருபி: ப்ருந்தம் ப்ருந்தம்

---

[1] तत श्श्रीवेङ्कटगिरिं तृषार्ताविव जग्मतुः।
गोविन्दराजं भेजाते भजच्चित्तापहारिणम्॥

[2] अथारुरुहतु र्हैमं शेषाकारं गिरीश्वरम्।
स्वामिपुष्करिणीं गत्वा स्नात स्स्वानुचरै स्सह॥

[3] तत्र वन्दारुभि र्बृन्दं बृन्दं वन्दित मीश्वरम्।
रमया रममाणं स्ववक्षस्थलविभूषया॥

வந்தித மீச்வரம் | ரமயா ரமமாணம் ஸ்வவக்ஷஸ்தல விபூஷயா||" என்கிறபடியே எழுந்தருளியிருக்கிற திருவேங்கடமுடையானை மங்களாசாஸநம் செய்தருளி [1]"தத: ப்ரணம்ய சிரஸா நரநாராயணோபமௌ | மங்களாநி ப்ரயுஞ்ஜாநௌ பர்வதா தவதேரது:||" என்கிறபடியே நரநாராயணவதாரம்போலே சிஷ்யாசார்களான இவர்கள் திருவேங்கடமுடையானுக்கு [2]"ஸ்ரீவேங்கடநிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்" என்று மங்களாசாஸநம் பண்ணி திருமலையில் நின்றும் இறங்கியருளி [3]"தத: ஸ்ரீரம்யஜாமாதா வாநாத்ரி முநிபுங்கவ:|" உபௌ ச காஞ்சீநகரம் ஸத்வரம் ஸமகச்சதாம்||" என்கிறபடியே நாயனாரும் பாதச்சாயையாய்ப் பின் தொடர்ந்து எழுந்தருளுகிற வானமாமலை ஜீயருடன் புறப்பட்டருளி பயணகதிகளிலே "உலகமேத்துமாழியான் அத்தியூர்" ஏற எழுந்தருளி, சுற்றியுள்ள திவ்யதேசங்களெல்லாம் அடைவிலே மங்களாசாஸநம் செய்தருளி, தேவப்பெருமாளை ஸேவிக்கப் புறப்பட்டு, ஸந்நிதி ஏற எழுந்தருளி, க்ரமேண மங்களாசாஸநம் செய்தருளி உள்ளே புக்கு, [4]"கதாபுந:- சங்க-ரதாங்க - கல்பக-த்வஜாரவிந்

---

[1] ततः प्रणम्य शिरसा नरनारायणोपमौ ।
मङ्गलानि प्रयुञ्जानौ पर्वताद वतेरतुः ॥

[2] श्रीवेङ्कटनिवासाय श्रीनिवासाय मङ्गलम् ।

[3] तत श्श्रीरम्यजामाता वानाद्रिमुनिपुङ्गवः ।
उभौ च काञ्चीनगरं सत्वरं समगच्छताम् ॥

[4] कदा पुनश्शङ्खरथाङ्गकल्पक-
ध्वजारविन्दाङ्कुशवज्रलाञ्छनम् ।
त्रिविक्रम ! त्वच्चरणांबुजद्वयं
मदीयमूर्धान मलङ्करिष्यति ॥

தாங்குச-வஜ்ர-லாஞ்சநம்| த்ரிவிக்ரம! த்வத்-சரணாம்புஜத் வயம் மதீய மூர்த்தாநம் அலங்கரிஷ்யதி||'' என்று தண்டம் ஸமர்ப்பித்து மங்களாசாஸநம் செய்தருளி நிற்க, தேவப் பெருமாளும் மிகவும் க்ருபை பண்ணியருளி சிஷ்யாசார்யர் களைக் குளிரக் கடாக்ஷித்துத் தீர்த்தம், திருமாலை, திருப்பரி வட்டம், சடகோபன், ப்ரஸாதங்களும் ப்ரஸாதித்து விடை கொடுத்தருள, வெளியே புறப்பட்டு க்ரமேண [1]''யதீந்தர ஜநநீம் ப்ராப்ய புரீம் புருஷபுங்கவ:| அந்த: கிமபி ஸம்பச்யந் அத்ராக்ஷீல் லமக்ஷ்மணம் முநிம்||'' என்கிறபடியே நாயனாரும் ஸசிஷ்யராய் ஸ்ரீபெரும்பூதூர் ஏற எழுந்தருளி, ஊரை ஸேவித்து, ஊரருகே நின்று, ''இதுவோ பெரும்பூதூர் இங்கே பிறந்தோ எதிராசர் எம்மிடரைத் தீர்த்தார்'' என்று தொடங்கிப் பலவாக அநுஸந்தித்துக் கொண்டு உள்ளே புக்கு, ''ஆண்டுகள் நாள்திங்களாய்'' என்று தொடங்கி ''இராமாநுசனைப்-பொருந்தினமே'' என்றநு ஸந்தித்து விஸ்மிதஹ்ருதயராய் ஸ்ரீபாஷ்யத்துக்கு அநுமதி கொண்டு, திரும்பவும் பெருமாள்கோவிலேற எழுந்தருளி, கடாம்பி நாயனார் பக்கல் ஸசிஷ்யராய் ஸ்ரீபாஷ்யம் ச்ரவித் தருளி நிற்க, அங்கே வானமாமலை ஜீயர் தம் ஆசார்யரான அழகிய மணவாளப் பெருமாள் நாயனாருக்குப் பாங்காக ஸமஸ்தமான பணிவிடைகளையும் செய்துகொண்டு கால க்ஷேப ஸஹபாடியாயும் போரா நிற்க, இப்படி நாயனாரும் சிலகாலம் அங்கே எழுந்தருளியிருந்து ஸ்ரீபாஷ்யம் தலைக்கட் டினவாறே ஸசிஷ்யராய்ப் புறப்பட்டு, ''ஸ்தாநாநி யாநி திவ்யாநி மத்யே ஸந்தி ஜகத்பதே:| ஆரங்காத் மங்களாந்யே

---

[1] यतीन्द्रजननीं प्राप्य पुरीं पुरुषपुङ्गवः।
अन्तः किमपि संपश्य न्नद्राक्षी ल्लक्ष्मणम्मुनिम्॥

[2] स्थानानि यानि दिव्यानि मध्ये सन्ति जगत्पतेः।
आरङ्गान्मङ्गलान्येषां चक्राते क्रमश स्त्विमौ॥

ஷாம் சக்ராதே க்ரமசஸ்த்விமௌ॥'' என்கிறபடியே மத்யே மார்க்கமுள்ள திவ்யதேசங்களை எல்லாம் மங்களாசாஸநம் பண்ணியருளிக் கோயிலேற எழுந்தருளிக் காவேரியிலே நீராடி, அநுஷ்டானங்களையும் முடித்துக்கொண்டு, பெரிய பெருமாளை மங்களாசாஸநம் செய்தருளி யதாபூர்வம் காலக்ஷேபம் நடவாநிற்கிற காலத்திலே தெற்கில் நின்றும் சிலர் வந்து நாயனாருக்கு ஒரு ஆசௌசத்தைச் சொல்ல, அதுவே ஹேதுவாக, [1] "மோக்ஷாச்ரமம் விவிக்ஷுஸ்ஸந் ஸந்நிதிம் ஸ்ரீநிதேர் யயௌ। அபிப்ராயம் அபிக்ஞாய ரங்கவிந்த: ததாந்வசாத்॥ ''என்கிறபடியே நாயனாரும் பெருமாள் அநுமதிகொண்டு ஸந்யஸித்து, பெருமாளை ஸேவிக்க எழுந்தருளி மங்களாசாஸநம் செய்தருள, பெருமாளும் போர வுகந்து, தீர்த்தம், திருமாலை, திருப்பரிவட்டம், சடகோபனையும் ஸாதித்து, அழகிய மணவாள ஜீயர் என்று திருநாமம் சாத்தியருளி, பல்லவராயன் திருமண்டபத்தை மடமாக ப்ரஸாதித்தனுப்ப ஸகல வரிசைகளுடன் மடமேற எழுந்தருளி [2]" அயம் வியத் பர்வதயோகிவர்யோ குரோர் நியோகாத் விதுஷாம் விசாலம்| வேதாந்தபாடாய ஸத: ப்ரகாசம் ஸ்ரீசைலநாதா ஹ்வ மகாரயத் ஸ்வை:॥ ஸ்தம்பே ஸதஸ்யத்ர ஸுபோதமுத்ரம் ஸ்ரீஸௌம்யஜாமாத்ரு முநிம் விதாய| தம் ப்ராங்முகம் ப்ராஞ்ஜலிபாணிரக்ரே ஸம்ஸேவமாநோ

---

[1] मोक्षाश्रमं विविक्षुस्सन् सन्निधिं श्रीनिधे र्ययौ ।
अभिप्राय मभिज्ञाय रङ्गविन्द स्तदा न्वशात् ॥

[2] अयं वियत्पर्वतयोगिवर्यो गुरोर्नियोगा द्विदुषां विशालम् ।
वेदान्तपाठाय सदःप्रकाशं श्रीशैलनाथा ह्व मकारयत् स्वैः ॥
स्तंभे सदस्यत्र सुबोधमुद्रं श्रीसौम्यजामातृमुनिं विधाय ।
तं प्राङ्मुखं प्राञ्जलिपाणि रग्रे संसेवमानो भिमुखो वतस्थे ॥

அபிமுகோ வதஸ்தே||'' என்கிறபடியே, [1]"பரவாநஸ்மி காகுஸ்த! த்வயி வர்ஷசதம் ஸ்திதே| ஸ்வயம் து ருசிரே தேசே க்ரியதா மிதி மாம் வத||'' என்ற இளையபெருமாளைப் போலே, வானமாமலை ஜீயரும் தம் ஆசார்யன் திருவடிகளிலே "மடத்தை எல்லாம் செப்பனிடும்படி நியமித்தருள வேணும்'' என்று ப்ரார்த்தித்து நிற்க, ஸ்வாமி நாயனாரும் [2]"இஹா ச்ரமபதம் ஸெளம்ய! யதாவத் கர்த்துமர்ஹஸி'' என்று நியமித்த பெருமாளைப்போலே தமக்கு ஏகாந்த சிஷ்யரான வானமாமலை ராமாநுஜ ஜீயரை மடத்தை யெல்லாம் செப்பனிடும்படி நியமித்தருள, [3]"ஸமீக்ருத தலம் ரம்யம் சகார ஸ மஹாபல:| நிவாஸம் ராகவஸ்யார்தே ப்ரேக்ஷணீய மநுத்தமம்||'' என்று செய்தருளின இளைய பெருமாளைப்போலே, வானமாமலை ஜீயரும் தமக்கு அந்தரங்கர்களையும் கூட்டிக் கொண்டு மடத்தை யெல்லாம் சீர் திருத்திச் செப்பனிட்டு, ஸதா காலக்ஷேபார்ஹமாய் திருமலையாழ்வாரையும் செய்தருளி, ஸ்வாமி எழுந்தருளியிருக்கிற இடத்திலே ப்ராங்முகமாய்க் கையும் ஞானமுத்ரையுமாய் ஸ்வாமி ரூபத்தையும் சித்திரத்திலே எழுந்தருளப் பண்ணி, அவர் திருமுன்பே தான் விநீதராய் ப்ராஞ்ஜலியாய் ஸதா ஸேவித்திருப்பதாயும் சித்திரத்திலே தம்மையும் எழுந்தருளப் பண்ண, நாயனாரும் திருப்பணி யழகையெல்லாம் கடா

---

[1] परवानस्मि काकुत्स्थ त्वयि वर्षशतं स्थिते ।
स्वयन्तु रुचिरे देशे क्रियता मिति मां वद ॥

[2] इहा श्रमपदं सम्यक् यथावत् कर्तुमर्हसि ।

[3] समीकृततलं रम्यं स चकार महाबलः ।
निवासं राघवस्यार्थे प्रेक्षणीय मनुत्तमम् ॥

க்ஷித்து [1]"ப்ரீதோஸ்மி தே மஹத் கர்ம த்வயா க்ருத மிதம் ப்ரபோ| ப்ரியோஸி யந்நிமித்தம் தே பரிஷ்வங்கோ மயாக்ருத:॥ பாவஜ்ஞேந க்ருதஜ்ஞேந தர்மஜ்ஞேந ச லக்ஷ்மண!॥ த்வயா புத்ரேண தர்மாத்மா நஸம்வ்ருத்த: பிதா மம॥" என்று உகந்தருளின பெருமாளைப்போலே நாயனாரும் இவர் விஷயத்திலே போர ப்ரீதராய், "நம்முடைய பா(भा)வம் அறிந்து செய்தீர்" என்று தம்முடைய திருக்கைகளாலே தழுவி அணைத்தருளி "ஸச்சிஷ்யரான உம்மைப் பெற்று தர்சன அபிவ்ருத்திக்கு ஏகாந்தர்களான பூர்வாசார்யர்கள் விஷயத்திலே க்ருதக்ருத்யனானேன்" என்றுகந்தருளினார்.

அநந்தரம் [2]"ஸ்ரீரம்யவரயோகீந்த்ரம் தண்டவத் ப்ரணதோ புவி| ஸேவமாந: புரோதிஷ்டத் வியதத்ரிய தீச்வர:॥ ந த்ருப்தி மாப நேத்ராப்யாம் அநுபூயைஷ ஸத்குரும்| புபுக்ஷு: போஜநமிவ லப்த்வா தனமிவ அதந:॥" என்கிறபடியே, ஸதாசார்யரான பெரிய ஜீயரை சிஷ்யரான வானமாமலைஜீயர் காலங்களிலே தண்டம் ஸமர்ப்பித்துக்கொண்டு ஸர்வ விதத்திலும் சுச்ருஷித்து ஸர்வகாலத்திலும் தொடர்ந்து அடிமை செய்துகொண்டு, அதநன் நிதியைக் கண்டாப்போலேயும் பசியன் சோற்றைக் கண்டாப்

---

1 प्रीतोस्मि ते महत्कर्म त्वया कृत मिदं प्रभो ।
प्रियोसि यन्निमित्तं ते परिष्वङ्गो मया कृतः ॥
भावज्ञेन कृतज्ञेन धर्मज्ञेन च लक्ष्मण ।
त्वया पुत्रेण धर्मात्मा न संवृत्तः पिता मम ॥

2 श्रीरम्यवरयोगीन्द्रं दण्डव त्प्रणतो भुवि ।
सेवमानः पुरोतिष्ठ द्वियदद्रियतीश्वरः ॥
न तृप्ति माप नेत्राभ्यां मनुभूयैष सद्गुरुम् ।
भुभुक्षु र्भोजनमिव लब्ध्वा धनमिवाधनः ॥

போலேயும் அநுபவித்துப் பின்னும் [1]"ஸ்ரீரங்கே கதிசித் ருதூந் ஸ குருணு ஸார்த்தம் ஸ்பூப்ருந்முநி:| ஸ்ரீரங்கேச்வர-பாத-பத்மமநிசம் ஸேவந் நுவாஸா த்ருத:‖ ஸ்ரீமத்ஸௌம்யவராபிதாந யமிநோ ப்ருத்யாநுப்ருத்யாந்திமாம்| ஸீமாம் ப்ராப்ய பபௌ ஸதா சமதமாத்யாத்மாநுரூபைர் குணை:‖" என்கிறபடியே வானமாமலை ஜீயரும் உத்தமாசார்யரான நாயனார், ஸந்நிதி மங்களாசாஸநத்துக்கு எழுந்தளும்போது அவர் பாதச்சாயாபந்நராய் எழுந்தருளி [2]"த்வத் ப்ருத்ய-ப்ருத்ய-பரிசாரக-ப்ருத்ய-ப்ருத்ய-ப்ருத்யஸ்ய ப்ருத்ய இதி மாம் ஸ்மர" என்று சரமபர்வ நிஷ்டராய் வெகு காலம் எழுந்தருளியிருந்து அடிமைசெய்து போந்திருந்தார்.

அநந்தரம் [3]"தத: ஸ்ரீரம்யஜாமாத்ரு யோகீந்த்ரம் நித்ய மந்வகாத்| வாநாத்ரி யோகிராஜேந கடிதோ வரதோ குரு:‖" என்கிறபடியே கோயில் அண்ணன் முதலானோர்களும் பெருமாள் ஸ்வப்நாதி முகத்தாலே பெரிய ஜீயருடைய திருவடிகளில் ஆச்ரயிப்பதுவே தங்களுக்கு அத்யந்தம் அதிசயாவஹமாயிருக்கும் என்று அத்யவஸித்து அவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கைக்காக உற்ருர் உறவாருடன் பெருந்

---

[1] श्रीरङ्गे कतिचिदृतून् स गुरुणा साकं स्वभूभृन्मुनि-
श्श्रीरङ्गेश्वरपादपद्ममनिशं सेवन्नुवासादृतः ।
श्रीमत्सौम्यवराभिधानयमिनो भृत्यानुभृत्यान्तिमां
सीमां प्राप्य बभौ सदा शमदमाद्यात्मानुरूपै र्गुणैः ॥

[2] त्वद्भृत्यभृत्य-परिचारकभृत्यभृत्य-
भृत्यस्य भृत्य इति मां स्मर लोकनाथ ।

[3] तत श्श्रीरम्यजामातृयोगीन्द्रं नित्य मन्वगात् ।
वानाद्रियोगिराजेन घटितो वरदो गुरुः ॥

கூட்டமாகத் திருமுன்காணிக்கைகளும் பலங்களும் முன்னே எடுத்துக்கொண்டு மடத்து வாசலிலே எழுந்தருள, [1]"த்ருஷ்ட்வா வாநாசலமுநிம் பஹிரங்கண ஸம்ஸ்திதம்| ப்ரணம்ய ஸாதரம் பூர்வ முவாச வரதோ குரு:||" என்கிறபடியே அங்கே வானமாமலை ராமானுஜ ஜீயர் இருக்கக் கண்டு அவரை புரஸ்கரித்தருளி அவருடனே அண்ணன் அதிவிநீதராய், "ஜீயர் திருவடிகளே ப்ராப்ய ப்ராபகமாய் வந்தடைந்தோம், தேவரீர் அங்கீகரித்தருளவேணும்" என்ன, வானமாமலை ராமாநுஜ ஜீயரும் இதுகேட்டு அதிப்ரீதராய், ஹர்ஷ பாரவச்யத்தாலே ஸ்தப்தராயிருந்து பின்பு [2]"அந்த: ப்ரவிச்ய யோகீந்த்ரஸ் ஸ்வாமிஸந்நிதி மாகத:||," [3]"வாதூலா வரதாதயோபி பகவந்! த்வத்பாதபத்மாச்ரயே ஸம்ஜாதாதிகுதூஹலா: ஸஸுஹ்ருத: ஸம்ப்ராப்ய திஷ்டந்தி தே| த்வாரம் த்வத்பவநஸ்ய ஸாத்விகவரைஸ் ஸம்ப்ராப்த ஸம்பாஷணாந் ரங்கேசஸ்ய கடாக்ஷவீக்ஷணவசாத் ஸம்யக் தயஸ்வா த்ய தாந்||" என்கிறபடியே அதித்வரையுடனே ஸந்நிதிக்கு எழுந்தருளி ஸ்வாமியை தண்டம்ஸமர்ப்பித்து ஹர்ஷபரவசராய், "ஸ்வாமி! இற்றைக்கு அண்ணன் முதலானார்கள் எல்லாரும் திருவடிகளிலே ஆச்ரயிக்கைக்குப் பெருங்கூட்டமா

---

[1] दृष्ट्वा वानाचलमुनिं बहिरङ्गणसंस्थितम् ।
प्रणम्य सादरं पूर्व मुवाच वरदो गुरुः ॥

[2] अन्तःप्रविश्य योगीन्द्र स्स्वामिसन्निधि मागतः ।

[3] वाधूला वरदादयोपि भगवन् ! त्वत्पादपद्माश्रये
सञ्जातातिकुतूहला स्ससुहृद स्संप्राप्य तिष्ठन्ति ते ।
द्वारं त्वद्भवनस्य सात्विकवरै स्संप्राप्त संभाषणान्
रङ्गेशस्य कटाक्षवीक्षणवशात्, सम्यक् दयस्वा द्य तान् ॥

கத் திருமுன் காணிக்கைகளும் பலங்களும் முன்னே எடுத்துக்கொண்டு மடத்து வாசலிலே எழுந்தருளியிருக்கிறார்கள். அவர்கள் முதலியாண்டான் திருவம்ச்யராகையாலே, மிகவும் ப்ரஸித்தர்கள்; அவர்களுக்கு [1]ஈச்வரஸ்யச ஸௌஹார்தம் யத்ருச்சாஸுக்ருதம் ததா| விஷ்ணோ: கடாக்ஷம த்வேஷமாபிமுக்யம் ச ஸாத்விகை:|| ஸம்பாஷணம் ஷடேதானி''—என்று இவைகள் நம் அப்பாச்சியாராலே உண்டானபடியாலே ஸாத்விக ஸம்பாஷணமானது ப்ராப்தமாயிருக்கிறது. அது விஷயத்திற்காகவே ஆய்ச்சியாரும் ஸ்வாமி ஸந்நிதிக்கு வந்திருப்பது. இப்படி ஆசார்ய ப்ராப்தி ஹேதுக்களெல்லா முண்டானபடியாலே தேவரீர் திருவடிகளில் ஸம்பந்தமும் லபிக்கிறது. [2]ஆத்மலாபாத் பரம் கிஞ்சித் அந்யத் நாஸ்தி என்றிறே தேவரீர் திருவுள்ளமிருக்கும்படி. ஆசார்யன் இருவர்க்கும் உபகாரகன் என்றிறே இருக்கிறது. அவர்கள் விஷயத்திலே இரங்கியருளவேணும். ஆய்ச்சியாருடையவும் அடியேனுடையவும் மநோரதம் நிறைவேறும்படி [3]சுபேந மநஸா த்யாதம்: என்கிறபடியே திருவுள்ளம் பற்றவேணும்'' என்று விண்ணப்பம் செய்து, ''வாசலிலே எழுந்தருளியிருக்கிற அவர்கள் மஹாகுல ப்ரஸூதர்களாகையாலே எதிர்கொண்டழைக்கவேணும்'' என்று விண்ணப்பம் செய்ய ஜீயரும் கேட்டு உகந்தருளிப் புறப்பட்டு மடத்துவாசலிலே எழுந்தருளித்

---

[1] ईश्वरस्य च सौहार्दं यदृच्छासुकृतं तथा ।
विष्णोःकटाक्ष मद्वेष माभिमुख्यं च सात्विकैः ॥
संभाषणं षडेतानि

[2] आत्मलाभात्परं किञ्चिदन्य न्नास्ति

[3] शुभेन मनसा ध्यातम्

திருவுள்ளத்தில் உகப்போடே [1]"வித்யா விமுக்திஜநநீ விநயாதிகத்வம் ஆசார ஸம்பத்அநுவேலவிகாஸி சீலம்| ஸ்ரீலக்ஷ்மணார்யகருணாவிஷயீக்ருதாநாம் சித்ரம் ந தாசரதிவம்ச ஸமுத்பவாநாம்||" என்றருளிச்செய்து அவர்கள் எல்லாரையும் கண்டு [2]" ஸ்ரீராமாநுஜ யோகீந்த்ரகருணா பரிப்ரும்ஹிதாம்| ச்ரேயஸீ மநகாம் வந்தே ஸ்ரீமத்வாதூலஸந்ததிம் " என்று அநுஸந்தித்தருள, அவர்களெல்லாரும் திருவடிகளிலே தீர்க்க ப்ரணாமம் பண்ணி "நகர்மணா", "வேதாஹமேதம்" என்கிற பஞ்சாதிகளை அநுஸந்தித்து, உபஹாரங்களை ஸமர்ப்பிக்க அங்கீகரித்தருளி, உள்ளே எழுந்தருளித் திருவோலக்கமாக எழுந்தருளியிருந்து "பொலிக பொலிக" என்கிற திருவாய்மொழிக்கும் திருப்பல்லாண்டுக்கும் ஸங்க்ரஹமாக அர்த்தோபந்யாஸம் செய்தருளி, இப்படி ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ருத்தி நித்யமாய்ப் போரவும் எல்லாரும் மங்களாசாஸநபரராகவும் ஆசீர்வதித்தருளி எழுந்தருளியிருக்க, அப்போது அண்ணன் வானமாமலை ஜீயருடனே ஸமாச்ரயணத்திற்கு வரித்தருள இவ்விஷயத்தைப் பெரிய ஜீயரும் திருவுள்ளம்பற்றி எழுந்திருந்து அப்பாலே ரஹஸ்யஸ்தலத்திலே இருந்துகொண்டு வானமாமலை ஜீயரைக்கொண்டு அண்ணனை அங்கே அழைப்பித்து "தேவரீர் மஹாகுலப்ரஸூதரும் எல்லாருக்கும் குருகுலமும் அன்றோ? இப்படி ஏதுக்கு?" என்ன, அண்ணனும், "ஸ்வாமி அப்படியொன்றும் அருளிச் செய்யவேண்டா"

---

[1] विद्या विमुक्तिजननी विनयाधिकत्व
माचारसंपदनुवेलविकासि शीलम् ।
श्रीलक्ष्मणार्यकरुणापरिबृंहितानां
चित्रं न दाशरथिवंशसमुद्भवानाम् ॥

[2] श्रीरामानुजयोगीन्द्र-करुणापरिबृंहिताम् ।
श्रेयसी मनघां वन्दे श्रीमद्वाधूलसन्ततिम् ॥

என்று தாம் முன்னிருந்த இருப்புக்கு க்ஷாபணம் பண்ணிக் கொண்டு, ஸ்வப்ந வ்ருத்தாந்தத்தை முதலிலிருந்து தப்பாமல் விண்ணப்பம் செய்யக் கேட்டருளி, ஈயானுடைய திருவம்ச ஸ்தராய் இன்னும் சிலருண்டே முன் அநுகூலித்தவர்கள். அவர்களுக்கும் மற்றும் சில வேறு பாஹ்யாதிகாரிகளுக்கும் பெருமாள் இரங்கி ஸ்வப்நாதிகளாலே தேவரீர் நியமனத் தாலே கூட்டுகிறுர்; அவர்களையும் கூட்டிக்கொண்டு இற் றைக்கு மூன்று நாட்கள் கழித்து நாலா நாள் தேவரீர் திரு வுள்ளப்ரகாரத்திற்கு எல்லோருக்கும் ஸமாச்ரயணம் ஆகி றது" என்று நிர்ணயம் செய்தருளிப் புறப்பட்டருளித் திரு வோலக்கத்திலே சாத்துப்படி அடைக்காய் அமுது விநியோக மாய் எல்லாரும் திருமாளிகைக்கு எழுந்தருளினுர்கள்.

அநந்தரம் [1]"ஸ்வப்நே ஹஸ்திகிரேர் நாதோ வரதார் யம் மஹௌஜஸம்| வாதூலகுலஸம்பூதம் ஆதிதேச ரமா ஸக:‖ ச்ரீரங்கே ரம்யஜாமாத்ருயோகிந: ஸந்நிதௌ ஸதா| பாந்தம் வாநாத்ரியமிந மாச்ரயேதி மஹாமதே| அத ஹஸ்த்ய கபூபாலநியோகாத் ரங்கமந்திரே| ரம்யஜாமாத்ரு யோகீந்த்ர ஸ்ந்நிதிம் ப்ராப ஸாநுக:‖ ஸ நாம்நா ப்பாச்சியாரண்ணு இதி க்யாதோ மஹிதலே| வாதூலகுலஸம்பூதோ வரதஸ்யா நு

---

1 स्वप्ने हस्तिगिरे र्नाथो वरदार्य म्महौजसम् ।
वाधूलकुलसंभूत मादिदेश रमासखः ॥
श्रीरङ्गे रम्यजामातृयोगिन स्सन्निधौ सदा ।
भान्तं वानाद्रियमिन माश्रयेति महामते ॥
अथ हस्त्यगभूपालनियोगा द्रङ्गमन्दिरे ।
रम्यजामातृयोगीन्द्रसन्निधिं प्राप सानुगः ॥
स नाम्ना प्याच्चियारण्णा इति ख्यातो महीतले ।
वाधूलकुलसंभूतो वरदस्यानुजो गुरोः ॥

ஜோ குரோ:||'' என்கிறபடியே தேவப்பெருமாள் அண்ணனுடைய சிற்றப்பா குமாரரான வரதார்யருடைய ஸ்வப்நத்திலே, '' நம் கோயிலிலே ஸௌம்யஜாமாத்ரு யோகீந்த்ரர் ஸந்நிதியிலே அவர் திருவடிகளிலே ஆச்ரயித்து பாதரே காமயராய் ப்ராண ஸுஹ்ருத்தாய் கைங்கர்ய ஸ்ரீயாலே ப்ரகாசமானரா யிருக்கிற வானமாமலை ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயித்து உஜ்ஜீவியும்'' என்று நியமித்தருளினர். வரதார்யரும் ப்ரபுத்தரானவாறே இதொரு ஸ்வப்நமிருந்தபடி என்! என்று விஸ்மிதராய் ஸாநுகராகப் புறப்பட்டுக் கோயிலேற எழுந்தருளி, [1]''தத: ச வரதாசார்யௌ ப்ராதரௌ ரங்கமந்திரே | அந்யோந்யம் ஸ்வப்நவ்ருத்தாந்தம் ச்ருத்வா விஸ்மய மாபது:||'' என்கிறபடியே அண்ணன் முதலானவர்கள் ஸந்நிதியிலே விண்ணப்பம்செய்ய அவர்களும் தங்கள் ஸ்வப்நத்தை விண்ணப்பம் செய்யக் கேட்டு விஸ்மிதரானார்கள். அநந்தரம் இங்கே பெரிய பெருமாளும் சிலரைத் திருத்துவாராக [2]''புந: ஸ்வப்நாபதேசேந தேசே தேசே நிரங்குச:| அய மர்ச்சாவதாரத்வஸமாதி மவதீரயந்|| அநந்யத்வம் ததேதஸ்ய தத்வ மாத்யந்திகம் ஹிதம்| அஸங்குசிதமாசக்யௌ புஜங்கசயந: புமாந்||'' என்றித்யாதிகளாலே [3]''குரு: ச ஸ்வப்நத்ருஷ்டஸ்ஸ:'' என்கிறபடியே அவர்கள்

---

[1] ततश्च वरदाचार्यौ भ्रातरौ रङ्गमन्दिरे ।
अन्योन्यं स्वप्नवृत्तान्तं श्रुत्वा विस्मयमापतुः ॥

[2] पुन स्स्वप्नापदेशेन देशे देशे निरङ्कुशः ।
अय मर्चावतारत्वसमाधि मवधीरयन् ॥
अनन्यत्व न्तदेतस्य तत्व मात्यन्तिकं हितम् ।
असङ्कुचित माचख्यौ भुजङ्गशयनः पुमान् ॥

[3] गुरुश्च स्वप्नदृष्टस्सः

ஸ்வப்நத்தில் "அர்ச்சாவதாரரூபேண வந்து நாமே இப்படி ஆசார்யரூபேண அவதரித்தோம், நீங்களுமப்படியே [1]"ஆசார்யம் மாம் விஜாநீயாத் பவபந்தவிமோசகம்" என்கிறபடியே விசேஷப்ரதிபத்தி பண்ணி ஆச்ரயியுங்கோள்" என்றருளிச்செய்ய, அநந்தரம் அவர்களும் [2]"தேஷாமதிசயம் மத்வா தத்வேந சரணம் யயு:॥" என்கிறபடியே ஜீயர் திருவடி ஸம்பந்தமே தங்களுக்கு ஸர்வாதிசயங்களுமாக எண்ணி ஜீயர் திருவடிகளைச் சரணமாக அடைந்திருக்க, அண்ணனும் இவர்கள் எல்லாரையும் திரளாகக் கூட்டிக்கொண்டு பெரியஜீயர் திருமுன்பே சென்று [3]"நிர்திஷ்டோ திவஸ: ப்ராப்த: மஹாமங்களதாயக:। பவதா பஞ்சஸம்ஸ்காரகரணார்த்தஞ்ச மாத்ருசாம்॥" என்கிறபடியே தேவரீர் அடியோங்களுக்கு இட்டிருந்த நாளும் வந்து எம்பா முதலானாராலே ப்ரதிபந்திக்கப்பட்டவர்களும் பெருமாள் ஸ்வப்நத்தாலே திருந்தி இந்த கோஷ்டியில் வந்திருக்கிறார்கள். எல்லாரையும் க்ருபை பண்ணியருளவேணும்" என்று விண்ணப்பம் செய்ய [4]"தத: ஸுந்தரஜாமாதா வாநாசலமுநிம் த்வரந்। பஞ்சஸம்ஸ்கார கார்யேஷு ஸஜ்ஜோ பவிதுமர்ஹஸி" என்கிறபடியே ஜீயரும் வானமாமலை ஜீயரை அழைத்து அதற்கு வேண்டியவைகளை

---

1 आचार्यं मां विजानीयाद्भवबन्ध विमोचकम् ।

2 तेषा मतिशयं मत्त्वा तत्वेन शरणं ययुः ।

3 निर्दिष्टो दिवसः प्राप्तो महामङ्गलदायाकः ।
भवता पञ्चसंस्कारकरणार्थं च मादृशाम् ॥

4 तत स्सुन्दरजामाता वानाचलं मुनिं त्वरन् ।
पञ्चसंस्कारकार्येषु सज्जो भवितुमर्हसि ॥

ஸந்நத்தமாக்கும்படி நியமித்தருளி தாம் திருவாராதனம் செய்தருளி, ஸந்நிதி முன்பாக எழுந்தருளியிருந்து ஸமாச்ரயணம் ஆகவேண்டியவர்களெல்லாரையுமழைத்து, அண்டையிலே செய்யும் கிரிசைகளெல்லாம் செய்தருளி, [1]"சக்ராதி தாரணம் பும்ஸாம் பரஸம்பந்தவேதநம்| பதிவ்ரதா நிமித்தம் ஹி வலயாதிவிபூஷணம்||" என்கிறபடியே அண்ணனுக்கு முதலிலே சக்ராங்கநாதிகளை ப்ரஸாதித்து உகந்தருளி நெடும்போது அண்ணனைத் தாம் "கண்டு கொண்டு" என்கிறபடியே கடாக்ஷித்துக் கொண்டிருந்து [2]"வாநாசலமுநிம் தஸ்மை தர்சயித்வா த பார்ச்வகம் வ்யஞ்ஜயந்நாத்மநோ பாவ முவாச வசநத்ரயம்" என்கிறபடியே வானமாமலை ராமானுஜ ஜீயரைக் காட்டியருளி, "இவர் நமக்கு ப்ராணஸுஹ்ருத்து, நமக்கு உண்டான அதிசயமெல்லாம் இவருக்கும் உண்டாகவேணும்" என்று அருளிச்செய்து, முதலியாண்டான் திருவம்சத்திலே நமக்கு ஸம்பந்தமுண்டானாப்போலே இவருக்கும் உண்டாகவேணுமென்று அருளிச்செய்ய, அண்ணனும் திருவுள்ளக் கருத்தறிந்து ஸ்வாமி திருமுகமண்டலத்தை ஸேவித்து [3]"ஸ்வாமிந் மே பஞ்சஸம்ஸ்காராந் கர்த்தும் வாநாத்ரியோகிநம் | நாசார்யம் க்ருதவாந் கிம் த்வம் த்வத்க்ருபாபூர்ண ஸம்பதம்||" என்கிறபடியே அடியேனை வானமாமலை ஜீயரிடத்தில் ஆச்ரயிப்பித்தால் ஆகாதோ? என்ன, ஸ்வாமி பெரிய ஜீயரும் இது நமக்கு

---

[1] चक्रादिधारणं पुंसां परसम्बन्धवेदनम् ।
पतिव्रतानिमित्तं हि वलयादि विभूषणम् ॥

[2] वानाचलमुनिं तस्मै दर्शयित्वाथ पार्श्वगम् ।
व्यञ्जय न्नात्मनो भाव मुवाच वचनत्रयम् ॥

[3] स्वामिन् मे पञ्चसंस्कारान् कर्तुं वानाद्रियोगिनम् ।
नाचार्यं कृतवान् किं त्वं त्वत्कृपापूर्णसंपदम् ॥

ப்ராப்தமான விஷயம், [1]"வாநாசலமுநீந்த்ரம் தம் ப்ரிய மத்யர்த்தமேவமே| ரஹஸ்யத்ரிதயார்த்தாநாம் ஆசார்யம் பஜ ஸுவ்ரதம்||" என்கிறபடியே "நமக்கு அத்யந்தம் ப்ரிய(நாத)ரான வானமாமலை ராமானுஜ ஜீயரிடத்திலே ரஹஸ்யத்ரயார்த்த காலக்ஷேபங்களைப் பண்ணும்" என்று நியமித்தருள அண்ணனும் அடியேன், மஹாபாக்யமென்று ஸம்மதப்பட்டு, தேவப்பெருமாள் ஸ்வப்நவ்ருத்தாந்தத்தை நினைவிலே கொண்டு ஸாபிப்ராயமாகப் பின்னே அப்பாச்சியாரண்ணவை கடாக்ஷித்தருள, பாவஞ்ஞரான அப்பாச்சியார் குமாரர் அண்ணா எழுந்திருந்து தண்டம் ஸமர்ப்பிக்க, ஸ்வாமியும் என்? என்று கேட்டருள அவரும் தேவப்பெருமாள் ஸ்வப்ந வ்ருத்தாந்தத்தை விண்ணப்பஞ்செய்து அடியேனை "எங்களாண்டவன் வானமாமலை ராமானுஜ ஜீயருடைய திருவடிகளிலே ஆச்ரயிப்பித்து அருளவேணும்" என்று விண்ணப்பம் செய்ய [2]"நிசாம்ய தம் ஸ்வாபிகதம் ஸௌம்ய ஜாமாத்ருதேசிக:| ராமானுஜமுநிம் ஸௌம்ய! ஸாக்ஷாதேநம் ஸமாச்ரய||" என்கிறபடியே ஜீயரும் தம்மபீஷ்டத்தில் இசைந்தபடிக்கு மிகவும் உகந்தருளி நம் அப்பாச்சியாரண்ணவன்றோ! என்று அழைத்தருளி, நீர் அப்படியே வானமாமலை ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயியும் என்று அருளிச்செய்து அவரைக் கையைப்பிடித்து தம்முடைய அண்டையிலே வைத்துக்கொண்டு, தாம் எழுந்தருளியிருந்த ஆஸநத்திலே வானமாமலை ஜீயரை இருத்தி, தம்முடைய திருக்கையிலாழ்வார்களையும் வானமாமலைஜீயர் திருக்கைகளிலே ஸாதித்

---

[1] वानाचलमुनीन्द्रन्तं प्रियमत्यर्थमेव मे ।
रहस्यत्रितयार्थाना माचार्यं भज सुव्रतम् ॥

[2] निशाम्य तं स्वाभिगतं सौम्यजामातृदेशिकः ।
रामानुजमुनिं सौम्य ! साक्षादेनं समाश्रय ॥

தருளி, அண்ணாவைக் காட்டி, "இவருக்கு ஸாதியும்" என்ன, வானமாமலை ஜீயரும் ஸங்கோசத்தாலே சற்று தாமஸிக்கப் பெரிய ஜீயரும், "அப்படிச் செய்யவேண்டா; நமக்கு ப்ரியமான இத்தைச் செய்யும்" என்று நியமித்து அண்ணாவை ப்ரீத்யதிசயத்தாலே தழுவிக்கொண்டிருந்து ஆச்ரயிப்பித்தருளினார். [1]"அத தாசரதி: ஸ்ரீமாந் வரதார்யஸ்ய சாஸநாத்| ஆச்ரயாமாஸ வாநாத்ரி-யோகிபுங்கவ மஞ்ஜஸா ||" என்கிறபடியே இவர் திருத்தம்பியார் தாசரதி அப்பையும் அப்பாச்சியாரண்ணா நியமனத்தாலே வானமாமலை ஜீயர் திருவடிகளில் ஆச்ரயித்தருளினார்.

அநந்தரம் ஏவம்ப்ரகாரமாய் வானமாமலை ஜீயரை [2]"ஸ்ரீஸகஸ்ய நியோகேந சிச்ரியே தேசிகச்ரியா|" என்கிறபடியே பெரியபெருமாள் நியோகத்தாலே அநந்ய ஸாதாரணமான ஆசார்ய பதத்திலே உஜ்வலராய் எழுந்தருளியிருக்கிற பெரிய ஜீயரும், ச்ரிய: பதியான வானமாமலைப் பெருமாள் நியோகத்தாலே தமக்கும் ப்ரியமாய் தம்முடைய அநந்ய ஸாதாரணமான ஸ்தாநத்திலே வைத்து, தமக்கு அஸாதாரணமான தம்முடைய திருக்கையில் ஆழ்வார்களையும் அவர் திருக்கைகளிலே ஸாதித்து வாதூலர்களுக்கு ஸமாச்ரயணம் ஸாதிக்கும்படி நியமித்து செய்தவை எல்லாம் பார்த்து அண்ணன் முதலான வாதூலர்கள் எல்லாம் [3]"வாநாத்ரி யோகிநா தேந ப்ராப்தம் யத் பத மத்புதம்| தத் பதம் ஸர்வ மஸ்மாபி: அலப்யம் பவதி த்ருவம்||" என்கிறபடியே வான

---

1 अथ दाशरथि श्श्रीमान् वरदार्यस्य शासनात् ।
आश्रयामास वानाद्रि योगिपुङ्गव मञ्जसा ॥

2 श्रीसखस्य नियोगेन शिश्रिये देशिकश्रिया ।

3 वानाद्रियोगिना तेन प्राप्तं यत्पदमद्भुतम् ।
तत्पदं सर्वमस्माभि रलभ्यं भवति ध्रुवम् ॥

மாமலை ஜீயர் பெற்ற பேறு நமக்கெல்லாம் அலப்யமென்று விஸ்மிதரானார்கள். பின்னும் [1]"ஆகதா பஹவோ ப்யந்யே தத்ரைவம் வாசமூசிரே | ஸ்வஸ்தாநே விநிவேச்ய லக்ஷ்மண முநிம் ஸ்வஸ்யைவ க்ருத்யம் குரு: ஸ்வாஸாதாரண சங்க சக்கரமபி தத்ஹஸ்தே ப்ரதாயாந்வசாத் || தத்ரத்யா வரதாதி ஸர்வகுரவோ ப்யாச்சர்ய மாபு: ததா த்ருஷ்ட்வா தத் குருபுங்கவஸ்ய சரிதம் ஸ்வேஷா மலப்யம் க்ருதம் ||" என்கிறபடியே தேசாந்தரத்திலிருந்து வந்திருந்த மற்றும் அநேகம் பேர்களும் இப்படி ஆசார்யச்ரேஷ்டரான பெரிய ஜீயர் வானமாமலை ஜீயர் விஷயத்தில் செய்தருளின காரியங் களை எல்லாம் கண்டு வாதூலர்களும் விஸ்மிதரானவைகளை அந்யோந்யம் சொல்லிக்கொண்டு ஸ்வாமியை ஸேவித்திருந் தார்கள். [2]"ததோ வியத்பர்வதயோகிநாதம் ஜ்ஞாநாதி பூர்ணம் வரதார்யவாசா | ஸ்ரீசுத்தஸத்வாண்ணகுரு: ப்ர பேதே ஸமாச்ரயார்த்தீ யதிஸார்த்தநாதம் || முநீந்த்ரமா லோக்ய முமோத நாம்நா ஜாதோஹ்யயம் கௌசிக ஜாந்வ வாயே | ஸ விஸ்மயோத்புல்ல விசாலநேத்ர: ஸதாஜநை: ஸத்பிருபாஸிதாங்க்ரிம் ||" என்கிறபடியே ஸாத்விகச்ரேஷ்ட

---

[1] आगता बहवोप्यन्ये तत्रैवं वाचमूचिरे ।
स्वस्थाने विनिवेश्य लक्ष्मणमुनिं स्वस्यैवकृत्यं गुरु-
स्स्वासाधारण शङ्खचक्रमपि तद्धस्ते प्रदायान्वशात् ।
तत्रत्या वरदादिसर्वगुरवोप्याश्चर्यमापुस्तदा
दृष्ट्वा तद्गुरुपुङ्गवस्य चरितं स्वेषा मलभ्यं कृतम् ॥

[2] ततो वियत्पर्वतयोगिनाथं ज्ञानादिपूर्णं वरदार्यवाचा ।
श्रीशुद्धसत्वाण्णगुरुः प्रपेदे समाश्रयार्थी यतिसार्थनाथम् ॥
मुनीन्द्र मालोक्य मुमोद नाम्ना जातोह्ययं कौशिकजान्ववाये ।
सविस्मयोत्पुल्लविशालनेत्र स्सदाजनै स्सद्भिरुपासिताङ्घ्रिम् ॥

ரான சுத்த ஸத்வம் அண்ணாவைக் கோயிலண்ணன் ஸ்வாமி வானமாமலை ஜீயர் திருவடிகளில் ஆச்ரயிப்பித்தருள, அவ ரும் ஆச்ரயித்து ஸ்வாசார்யரான வானமாமலை ஜீயரை ஸேவித்து ஸ்வாமியுடைய சமதமாதியான கல்யாண குண கணங்களையும், அதுக்கு இசைந்ததான திருமேனியினுடைய ஸௌந்தர்ய ஸௌகுமார்யாதிகளையும் ஸேவித்து, இப்படி ஆச்சர்ய குணபூமியாயும் ஸாத்விக உபாஸ்யங்களான திரு வடிகளை உடையராயும் இருக்கிற அவரை ஆசார்யராகப் பெற்ற பெருமையாலே அதிவிஸ்மிதராய் ஆனந்த பரவச ராய் இருந்தார்.

அநந்தரம் [1]"யதீச்வரோயம் நிகிலாபஹ்ருஷ்ட: ஸஜுஷ்டமேநம் ஹ்யுரரீசகார | ஸம்ஸார தாபாபஹ மத் யுதாரம் ப்ரோவாச தஸ்மை நிகமாந்தயுக்மம்|| தத: ஸ்ரீசுத்த ஸத்வாண்ண நாமக: சீலவாந் குரு:| கோயிலண்ணமிதி க்யாத நாமகோ வரதோ குரு:|| காஞ்ச்யாமப்பாச்சியாரண்ண நாமகோ வரதோ குரு:| தஸ்யைவசாநுஜோ ப்ராதா ஸ்ரீமாந் தாசாதிச்ச ஸ:|| வாநாசலமுநிம் ப்ராப்ய ஸர்வே ஸம்பூய ஸாதரம்| ஸம்ப்ரார்த்ய ப்ரணதா பூத்வா சுச்ருவு தஸ்ய ஸந்நிதௌ || ரஹஸ்யத்ரய தத்வார்த்தாந் ஸம்ப்ராப்

---

[1] यतीश्वरोयं निखिलाभहृष्ट स्सजुष्ट मेनं ह्युररीचकार ।
संसारतापापह मत्युदारं प्रोवाच तस्मै निगमान्तयुग्मम् ॥
तत श्श्रीशुद्धसत्वाण्ण-नामकश्शीलवान् गुरुः ।
कोयिलण्णनिति ख्यातनामको वरदो गुरुः ॥
काञ्च्या मप्पाच्चियारण्णनामको वरदो गुरुः ।
तस्यैवचानुजो भ्राता श्रीमान् दाशरथिश्च सः ॥
वानाचलमुनिं प्राप्य सर्वे संभूय सादरम् ।

தாந் ஸம்ப்ரதாயத:|'' என்கிறபடியே வானமாமலை ராமாநுஜ ஜீயர் [1]"ஆத்மலாபாத் பரம் கிஞ்சி தந்யந் நாஸ்தி'' என்றிருக்குமவராகையாலே சேதந லாபத்திலே ஹ்ருஷ்டராய், சுத்தஸத்வம் அண்ணனுக்கு காலக்ஷேபம் ஸாதிக்குமவராய் இருக்கையில் கோயிலண்ணன், அப்பாச்சியாரண்ணா, தாசரதி அப்பை இவர்களும் கூடி வானமாமலை ராமாநுஜ ஜீயரை ரஹஸ்யத்ரய காலக்ஷேபம் ஸாதிக்கும்படி ஜீயர் நியமனத்தை முன்னிட்டு ப்ரார்த்திக்க, வானமாமலை ஜீயரும் ஸ்வாசார்யன் நியமனத்திலே பத்தராய் இருந்து, அப்படியே அவர்களுக்கு ரஹஸ்யத்ரயார்த்தாதி விசேஷார்த்தங்களை ப்ரஸாதித்து க்ரமேண சாற்றியருளினார்.

அநந்தரம் இப்படிச் சில காலம் சென்றவாறே பெரிய ஜீயரும் திரும்பவும் ஆழ்வார் ஸேவையிலே திருவுள்ளமுடையவராய் இருக்க, அவ்வளவிலே [2]"ஸ்ரீமத்ஸந்நிதி கார்யார்த்தம் வாநாத்ரிநகரம் ப்ரதி| ராமாநுஜமுநிம் ரம்ய ஜாமாத: ப்ரேஷயேதி தம்|| வாநாசல புராத்ச்ரீசசாஸநம் ப்ரதிபாதிதம்|'' என்கிறபடியே வானமாமலை ஜீயரை வானமாமலை ஸ்ரீகார்யத்திற்கு வேணுமென்று பெருமாள் நியமனமான ஸேனைமுதலியார் திருமுகம் வர, எதிர்கொண்டு சிரஸா வஹித்து, அப்படியே ஸம்மதியாம்படி ஜீயரை நிய-

---

संप्राप्य प्रणता भूत्वा शुश्रुवु स्तस्य सन्निधौ ॥
रहस्यत्रयतत्वार्थान् संप्राप्तान् संप्रदायतः ।

[1] आत्मलाभात्परं किञ्चिदन्यन्नास्ति

[2] श्रीमत्सन्निधि कार्यार्थं वानाद्रिनगरं प्रति ।
रामानुजमुनिं रम्यजामातः ! प्रेषयेति तम् ॥
वानाचलपुरा च्छ्रीशशासनं प्रतिपादितम् ।

மித்தருளி, பின்பு [1]"ஸ்ரீமாந் ஸௌம்யோபயந்தா சடரிபுநக ரம் கந்துமிச்சந் முநீந்த்ரம் ஆஹூயாந்த: ப்ரவிச்ய ப்ரமுதித மநஸா ரங்கவிந்தம் ஸுரேசம்| ஸ்ரீபூநீளா ஸமேதம் கலிரிபுவசஸாம் அந்தபாகே த்ரிகாதா: காயந் ஸம்ஸேவ்ய திஷ்டந் குணகணநிசயே மக்நசித்தோ பபூவ||" என்றும், [2]"ஸ்ரீஸௌம்ய ஜாமாத்ரு முநீச்வரஸ்ய ப்ரஸாத ஸம்பத் ப்ரதமாஸ்பதாய| ஸ்ரீரங்கபூரீச்வர நாமதேயம் ரமாபதிம் லக்ஷ்மண யோகிநே தாத்||" என்றும், [3]"ஆதாய தம் மஹா யோகீ ஜகாம மடமுத்தமம்| ததோ ஸ்ய வவ்ருதே ஸம்பத் சிஷ்யை ரஷ்டகஜாபிதை:||" என்றும் சொல்லுகிறபடியே, பெரிய ஜீயரும் வானமாமலை ஜீயரை அழைத்துக் கொண்டு, பெரிய பெருமாள் நியமனம் வேணுமென்று எழுந்தருளுகையில், பெரிய ஜீயர் நாலாயிர ப்ரபந்தத்தில் நித்யம் நூறு பாட்டாய் அநுஸந்திக்கும் க்ரமத்திலே அப்போது "அணியார் பொழில் சூழ் அரங்கநகரப்பா" என்கிற சாற்றுப் பாட்டு ஸேவிக்கும் அவஸரம் பெரிய பெருமாள் திருமுன்பே நேரிட, பெருமாளும் உகந்தருளிப் பெரிய ஜீயர் திருவுள்ளத்திற்குப் பாங்காயிருக்கும்படி அர்ச்சகரை ஆவே-

---

[1] श्रीमान् सौम्योपयन्ता शठरिपुनगरं गन्तुमिच्छन् मुनीन्द्र
न्त्वाहूयान्तःप्रविश्य प्रमुदितमनसा रङ्गविन्दं सुरेशम् ।
श्रीभूनीलासमेतं कलिरिपुवचसा मन्तभागे त्रिगाथा
गायन् संसेव्य तिष्ठन् गुणगणनिचये मग्नचित्तो बभूव ॥

[2] श्रीसौम्यजामातृमुनीश्वरस्य प्रसादसंपत्प्रथमास्पदाय ।
श्रीरङ्गपूरीश्वरनामधेयं रमापतिं लक्ष्मणयोगिनेऽदात् ॥

[3] आदाय तं महायोगी जगाम मठ मुत्तमम् ।
ततो स्य ववृधे संप च्छिष्यै रष्टगजाभिधैः ॥

சித்து "பூபாலராயனிலே எழுந்தருளியிருக்கிற லக்ஷ்மீ நாராயண விக்ரஹத்தைக் கையிலே எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வானமாமலை ஜீயரைக் குறித்து, 'ஜீயா! நாம் அரங்கநகரப்பன்; உம்மாசார்யருக்கும் உமக்குமாகத் திருவாராதனமாக வருகிறோம்" என்று நியமித்து வானமாமலை ஜீயர் திருக்கைகளிலே ஸாதித்தருளினார். இவ்வரங்க நகரப்பனும் முன்பு க்ஷீராப்தியில் நின்றும் ப்ரார்த்தித்து நிற்கும் ப்ரஹ்மாவுக்கு ப்ரார்த்தநா பலமாக ஆராத்யராய் திருவடி முகேந ஸ்வயம் வ்யக்த ரூபியாய் எழுந்தருளினாப் போலன்றிக்கே தம்முகப்பின் பலமாய் தாமாவேசித்து அர்ச்சகமுகேந எழுந்தருளின ஸ்வயம் வ்யக்த மூர்த்தியாகிறார். அநந்தரம் ஜீயரும் மஹாபாக்யம் என்று திருக்கைகளிலே எழுந்தருளப்பண்ணிக் கொண்டு, மாமுனிகளின் திருமுக மண்டலத்தையும் பார்த்து, "பெரியார்க்காட்பட்டக்கால் பெருத பயன் பெறுமாறு" என்று விண்ணப்பம் செய்ய பெருமாளும் பரிவட்டம், திருமாலை, தீர்த்தம், சந்தனம், அடைக்காய், ப்ரஸாதம், சடகோபன்களையும் ஸாதித்தருளி, உத்தமநம்பியாருக்கு அருள்பாடிட்டு ஜீயர்களை ஸகல விருதுகளுடன் மடத்திலே விட்டுவரும்படி நியமித்தருள, உத்தம நம்பியும் சத்ரசாமர தாளவ்ருந்தாதிகளுடன் அஷ்டாதச வாத்யங்கள் முழங்க அரங்க நகரப்பனேடே கூட ஜீயர்களையும் மடத்திலே விட்டுவந்தார். அதுமுதல் வானமாமலை ராமாநுஜ ஜீயருக்கு அஷ்டைச்வர்யங்களும் சிஷ்ய ஸம்பத்துக்களும் அஷ்ட திக்கஜங்களும் உண்டாகி அபிவ்ருத்தமாயிற்று.

அநந்தரம் [1]"அத ரங்கபதே ரநுஜ்ஞயாயம் வரயோகீ குருகாபுரீச மாகாத்| ககநாத்ரிமுநி: ப்ரியேண நீதோ குருணா

---

[1] अथ रङ्गपतेरनुज्ञयायं वरयोगी कुरुकापुरीशमागात् ।
गगनाद्रिमुनिः प्रियेण नीतो गुरुणा तेन हि भास्वता प्रमेव ॥

தேநஹி பாஸ்வதா ப்ரபேவ||" என்றபடியே பெரிய ஜீயரும் பெருமாள் நியமனம் பெற்று ஆழ்வாரை ஸேவிக்க வேண்டித் திருநகரி ஏறப் புறப்பட்டுத், தமக்குச் சாயாபூதரான வான மாமலை ஜீயருடன் எழுந்தளிப், பயணகதியிலே ஸகல ஜகத் ப்ரகாசகனை பாஸ்வானவன் ப்ரபையோடே கூடச் செல்லுமாபோலே, தமக்கு இணைபிரியாத அந்தரங்க சிஷ்ய ரான வானமாமலை ஜீயரையும் அழைத்துக்கொண்டு மத்யே திவ்ய தேசங்களை எல்லாம் அடைவிலே மங்களாசாஸநம் செய்தருளித் திருநகரியில் சென்று, திருச்சங்கணி துறை யிலே நீராடி, யதோசிதமான அநுஷ்டாநங்களையும் செய் தருளி வானமாமலை ஜீயருடன்கூட எழுந்தருளி எம்பெருமா னுரை "ஸ்ரீமாதவாங்க்ரி" என்று தொடங்கி அநுஸந்தித்து மங்களாசாஸநம் பண்ணி, வெளியே புறப்பட்டு, க்ரமேண மங்களாசாஸநம் செய்தருளி ஆழ்வார் திருமுன்பே சென்று "மாதா பிதா யுவதய:" என்று தொடங்கி "ப்ரணமாமி மூர்த்நா" வரை அநுஸந்தித்து ஆழ்வாரையும் மங்களாசாஸ நம் செய்தருளி மடமேற எழுந்தருளி, சிறிது காலம் அங்கே எழுந்தருளியிருந்து அநந்தரம் [1]"ததோவ்யதீதேஷு பஹு ஷ்வஹஸ்ஸு ப்ரஜக்மது: வ்யோமகிரிம் ப்ரதீதௌ | அகர் தமே கர்தம பத்மதீர்த்தே பத்மாகரே சக்ரது ராஹ்நிகாநி|| வியந்மஹாபர்வதநாத வேச்ம ப்ரவிச்ய பூமாமஹிதம் விலோக்ய || ப்ரணம்ய பூமாவுரஸாச மூர்த்நா முநீச்வரௌ துஷ்டுவுது : ஸுதுஷ்டௌ || ததோ மடம் ப்ராப்ய த்ருடம்

---

[1] ततो व्यतीतेषु बहुष्वहस्सु प्रजग्मतु र्व्योमगिरिं प्रतीतौ ।
अकर्दमे कर्दमपद्मतीर्थे पद्माकरे चक्रतु राह्निकानि ॥
वियन्महापर्वतनाथ वेश्म प्रविश्य भूमामहितं विलोक्य ।
प्रणम्य भूमा बुरसाच मूर्ध्ना मुनीश्वरौ तुष्टुवतु स्सुतुष्टौ ॥

[1]த்ருஷத்பி:, காடம் மஹத்பி : நிகமாந்தவித்பி:| நபோ யதா தாரவரைஸ் ஸுதர்மா தேவைரிவாம்போதி ரநர்க்கரத்நை:||" என்கிறபடியே வானமாமலை மங்களாசாஸநத்திலே திருவுள்ளமாய் ஸசிஷ்யராய்ப் புறப்பட்டு, வானமாமலை ஏற எழுந்தருளி, சேற்றுத்தாமரையிலே நீராடி யதோசிதமான அனுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, தெய்வநாயகன் ஸந்நிதி ஏற எழுந்தருளி எம்பெருமானுர் முதலாக அடைவிலே மங்களாசாஸநம் செய்தருளி, தெய்வ நாயகன் திருமுன்பே சென்று, "நோற்ற நோன்பிலேன்" என்று தொடங்கி மங்களாசாஸநம் செய்தருளி, [2]"கதாபுந: சங்க ரதாங்க கல்பக த்வஜாரவிந்தாங்குச வஜ்ரலாஞ்நம்| த்ரிவிக்ரம! த்வத் சரணும்புஜத்வயம் மதீய மூர்த்தாந மலங்கரிஷ்யதி ||" என்றநுஸந்தித்து தண்டம் ஸமர்ப்பித்து உள்ளே புக்கு தெய்வ நாயகனையும் வானமாமலைப் பெருமாளையும், எண்ணம் புகுந்து தித்திக்கும் செந்தாமரைக் கண்களையும், செங்கனிவாய் நால்தோள முதத்தையும், செங்கமலக்கழலில் படியையும் சீதக்கடலென்கிற திருமொழிப்படியே நூபுராதிகிரீடாந்த ஸர்வ திவ்யாபரண திவ்யமால்யாம்பர திவ்யாங்கராக சோபிதமான அவ்வடிவழகையும் பாதாதிகேசாந்தமாக அநுபவித்து "ஆறேனக்கு நின்பாதமே சரணாகத் தந்தொழிந்தாய், உனக்கோர்கைம்மாறு நானொன்றிலேன் எனதாவியுமுனதே, சேறுகொள் கரும்பும் பெருஞ்செந்நெலும் மலிதண் சிரீ

---

[1] ततो मठं प्राप्य दृढं दृषद्भिः, गाढं महद्भि र्निगमान्तविद्भिः ।
नभो यथा तारवरै स्सुधर्मा देवैरिवा म्बोधि रनर्घरत्नैः ॥

[2] कदापुन श्शङ्खरथाङ्ग-कल्पक-
ध्वजारविन्दाङ्कुश-वज्रलाञ्छनम् ।
त्रिविक्रम ! त्वच्चरणाम्बुजद्वय-
म्मदीयमूर्धानम लङ्करिष्यति ॥

வரமங்கை, நாறு பூந்தண்டுழாய் முடியாய் தெய்வநாயகனே'' என்று அநுஸந்தித்து மனமுருகி மலர்க் கண்கள் பனிப்பக் கண்ணீரப் பருகி வாயாரவாழ்த்தி நிற்க, பெருமாளும் பெரிய ஜீயரைக் குறித்து திருப்பவளச் சோதிவாய் திறந்து, தம்முடைய க்ருபார்த்ர கருணம்ருதவ்ருஷ்டிகளாலே குளிரக் கடாக்ஷித்து, ''நம் ஸந்நிதி ஸ்ரீகார்யத்திற்கு உம்மைப்போலே நமக்குப்ரியமாயிருப்பார் ஒருவரைத் தந்தீர்; வளர்த்ததனுல் பயன் பெற்றேன்'' என்றருளிச் செய்து போர உகந்தருளி திருமாலை திருப்பரிவட்டம் சடகோபனையும் ஸாதித்து ப்ரஸாதமும் ப்ரஸாதித்து க்ருபை செய்தருளினர். அநந்தரம் பெரிய ஜீயரும் ஸ்வசிஷ்யரான வானமாமலை ஜீயருடன்கூட ஸந்நிதியில் நியமனம் பெற்றுக்கொண்டு புறப்பட்டு மடமேற வெழுந்தருளி, பெரிய பெருமாள் க்ருபை செய்தருளின அரங்கநகரப்பனை, ஸ்வாமி பெரிய ஜீயர் தம்முடைய திருக்கைகளாலே எழுந்தருளப்பண்ணி ப்ரதிஷ்டிப்பித்தருளி, வானமாமலை ராமானுஜ ஜீயரை நித்யமாகத் திருவாராதனம் பண்ணும்படி நியமித்தருளி, அரங்கநகரப்பன் கடாக்ஷத்தாலே சிஷ்யதநாபிவ்ருத்தியும் தர்சனபிவிருத்தியும் நிறைந்த செல்வமாய் நடக்கும்படி பூர்ண க்ருபையாலே கடாக்ஷித்தருளினர்.

அநந்தரம் சிலகாலம் வானமாமலையில் எழுந்தருளியிருந்து பின்பு திருக்குறுங்குடிக் கெழுந்தருளி நம்பியை மங்களாசாஸநம் செய்தருளி மீளவும் வானமாமலை ஏற எழுந்தருளினர். [1]''தோதாத்ரிமாகம்ய திநாந்யுவாஸ த்வித்ராணி பூமாபதி பக்திபூஷ:। ஸ்ரீகாரிஸூரீச்வரஸேவயா த்வாக்ருஷ்டசித்தௌ குருகா மகாதாம்। மாஸா: ச ஷட் தத்ர தயோரபூவந் க்ஷணர்த்தவத் ஸம்யமிநோர் வ்யதீதா:॥'' என்

---

[1] तोदाद्रिमागम्य दिनान्युवास द्वित्राणि भूमापति-भक्तिभूषः। श्रीकारिसूरीश्वरसेवया त्वाकृष्टचित्तौ कुरुका मगाताम् ॥ मासाश्च षट् तत्र तयोरभूवन् क्षणार्धवत्संयमिनो र्व्यतीताः।

கிறபடியே ஸ்வாமி பெரிய ஜீயரும் திரும்பவும் வானமாமலை யிலே மூன்று தினம் எழுந்தருளியிருந்து மங்களாசாஸநம் செய்தருளி தமக்குப் பாதரேகாபந்நரான வானமாமலை ஜீய ருடன்கூடப் புறப்பட்டு ஆழ்வார்திருநகரி ஏற எழுந்தருளி, அங்கே ஆழ்வார் மங்களாசாஸநபரர்களாக ஆறுமாஸ காலத்தை க்ஷணார்த்தம்போலக் கழித்து, அநந்தரம் [1]"ப்ரீத்யை மம த்வம் ககநாகநாததாஸ்யம் விதந்வந் ஸுகமாஸ்வ தத்ர| இத்யேவமுக்தோ குருணா நிதாந்த தாந்தோ பவத் வ்யோமகிரீந்த்ரயோகீ॥ ததிங்கிதஜ்ஞ: ப்ரஹஸந்நுதார: ஸ்ரீரம்யஜாமாத்ருமுநீச்வர:ஸ்தம்| ஸஹைவ கந்தும் ப்ரதிசந் நநுஜ்ஞாம் தயாநிதிர் மாசுச இத்யவோசத்॥ தத: ப்ரஸந்நேந ஸஹாநுயாதும் த்வராந்விதோ பூத் வியதத்ரியோகீ|" என் கிறபடியே பெரிய ஜீயர், வானமாமலை ஜீயரைக் குறித்து "நீர் எனக்கு ப்ரியத்தைச் செய்பவராய் வானமாமலைப் பெருமாள் ஸந்நிதியிலே ஸகலவித கைங்கர்யங்களையும் பண்ணிக் கொண்டு ஸுகமாக வாழ்ந்திரும்" என்றருளிச்செய்ய, வான மாமலை ஜீயரும் இப்படி ஆசார்யன் நியமனத்தை மறுக்க வொண்ணாதே ஸ்வாசார்ய விச்லேஷாஸஹிஷ்ணுவாய் நெஞ் சிலே தபித்துநிற்க, பெரிய ஜீயரும் பாவஜ்ஞராகையாலே, இவரந்தரங்கத்தை யறிந்து மந்தஹாஸம் பண்ணி இவரைக் கடாக்ஷித்தருளி, "ஜீயரே! நீர் கலேசிக்கவேண்டா, நம்முடன் கூட நம்பெருமாள் ஸந்நிதிக்கு வாரும்" என்று பரம க்ருபாளு வாய்க் கொண்டு நியமித்தருள, இதைக் கேட்ட வானமாமலை ஜீயரும் ப்ரஸந்நராய் ஸ்வாசார்ய ஸஹகமநத்திலே உத்ஸா

---

[1] प्रीत्यै ममत्वं गगनागनाथदास्यं वितन्वन् सुखमास्व तत्र ।
इत्येव मुक्तो गुरुणा नितान्ततान्तो भवद्व्योमगिरीन्द्रयोगी ॥
तदिङ्गितज्ञः प्रहसन्नुदार श्श्रीरम्यजामातृमुनीश्वर स्तम् ।
सहैवगन्तुं प्रदिशन्ननुज्ञां दयानिधि र्माशुच इत्यवोचत् ॥
ततःप्रसन्नेन सहानुयातुं त्वरान्वितो भूद्वियदद्रियोगी ।

ஹத்துடன் உத்யுக்தராயிருந்தார். அநந்தரம் [1]"வரோபயந்தா முநிஸார்வபௌமः ப்ரணம்ய காரீசஸுதம் ப்ரதஸ்தே| ஸ்ரீரங்க முத்திச்ய புரம் புராணம் பிதுர் க்ருஹாத் பர்த்ரு க்ருஹம் ப்ரியேவ||" என்கிறபடியே பரமஹம்ஸாச்ரமிகளில் ச்ரேஷ்டதமரான பெரிய ஜீயரும் உத்தம ஸ்த்ரீயானவள் பித்ருக்ருஹத்தில் நின்றும் அத்யுத்ஸுகையாய்க்கொண்டு பர்த்ருக்ருஹம் போமாப்போலே ஆழ்வாரனுமதிகொண்டு வானமாமலை ஜீயருடன் புறப்பட்டு த்ருதீய விபூதியான கோயிலேற வெழுந்தருளி பெரிய பெருமாளை மங்களாசாஸநம் செய்தருளி மடமேற வெழுந்தருளினர்.

அநந்தரம் [2]"ததோ மஹார்யः கமலாநிவாஸ ஸ்ஸமாச்ரயார்த்தீ வரயோகிஸந்நிதிம்| ஸம்ப்ராப்ய ஸஞ்சோதித ஏவ தேந வாநாத்ரியோகீந்த்ரம் அசிச்ரயத் ஸः|| [3]வாதூல வம்ச்யாக்ரஸரோ மஹார்ய: ஸ்ரீவாநபூப்ருத்யதிராண்முகாப்ஜாத்| சுச்ராவ வேதாந்தரஹஸ்யஜாதம் ஸ்ரீகாரிஜாதாத்தக்ருதிம் ஸடீகாம்||" என்கிறபடியே கோயிலில் எழுந்தருளிக் காலக்ஷேபம் நடந்துவருங்காலத்திலே வாதூல வம்ச்யராய் ஸ்ரீநிவாஸாசார்யாபரநாமதேயத்தையுடையரா யிருக்கிற மஹார்யர் கோயிலில் பெரிய ஜீயருடைய வைபவம் கேட்டு அவர் திருவடிகளிலே ஆச்ரயிக்கைக்காக ஸ்வாமி ஸந்நிதி ஏற எழுந்தருளித் திருவடிகளிலே ஸாஷ்டாங்கமாக தண்டம் ஸமர்ப்பித்து அடியேனை ஆட்கொண்டருளவேணு

---

1 वरोपयन्ता मुनिसार्वभौमः प्रणम्य कारीशसुतं प्रतस्थे ।
श्रीरङ्ग मुद्दिश्य पुरं पुराणं पितुर्गृहा द्भर्तृगृहं प्रियेव ॥

2 ततो महार्यः कमलानिवास स्समाश्रयार्थी वरयोगि सन्निधिम् ।
संप्राप्य सञ्चोदित एव तेन वानाद्रियोगीन्द्र मशिश्रयत्सः ॥

3 वाधूलवंश्याग्रसरो महार्य श्श्रीवानभूभृद्यतिराण्मुखाब्जात् ।
शुश्राव वेदान्तरहस्यजातं श्रीकारिजातात्थकृतिं सटीकाम् ॥

மென்று ப்ரார்த்திக்க, பெரிய ஜீயரும் வானமாமலை ஜீயரைக் காட்டியருளி, "இவர் திருவடிகளிலே ஆச்ரயியும் உமக்கு மஹாதிசயங்கள் உண்டாகும்'' என்று நியமிக்க, அவரும் நியமனமென்று ஹ்ருஷ்டராய் வானமாமலை ராமாநுஜ ஜீயர் திருவடிகளிலே ஆச்ரயித்தார். வானமாமலை ஜீயரும் ஸ்வாசார்ய நியமநத்தாலே மஹாசார்யருக்கு பஞ்சஸம்ஸ்காரங்களையும் பண்ணியருளி க்ரமேண மந்த்ரமந்த்ரார்த்தங்களையும் பகவத்விஷயத்தையும் ப்ரஸாதித்தருளினார். அநந்தரம் [1]"ஸ வாநசைலேசயதிப்ரபாவப்ரகாசகம் ஸ்தோத்ர முவாச காந்தம்| அதீத்ய யத் நித்ய மமுஷ்ய பாதபத்மாச்ரிதா: ஸ்ரீபதிஸாம்ய மாபு:|'' என்கிறபடியே மஹார்யரும் "பெரியார்க் காட்பட்டக்கால் பெறுத பயன் பெறுமாறு'' என்று பெரிய ஜீயர் க்ருபையாலேயன்றோ விலக்ஷணஸம்பந்தம் கிடைத்தது'' என்று ஹ்ருஷ்டராய்க்கொண்டு ஸ்வாசார்யரான வானமாமலை ராமாநுஜ ஜீயர் விஷயமாக திநசர்யை, ப்ரபத்தி, மங்களாசாஸநங்களைச் செய்தருளினார். இப்ரபந்தங்கள்தான் முமுக்ஷுக்களுக்கு நித்யாநுஸந்தேயமாய் ச்ரிய:பதிஸாம்யத்தைத் தருமதாயிற்று.

அநந்தரம் [2]"ஸமரபுங்கவஸத்குரு ராதராத் ச்ரவணயோர் நிததே ஜநதேரிதம்| ககநசைல முநீந்த்ரபதாம்புஜே நிஜபரம் ஸகலம் ஸ கலாநிதி:| வியந்மஹீ பருத்-யதிஸார்வபௌம ஸ்ரீ பாதபத்மாச்ரயணாத் க்ருதார்த்த:| ஸத்ஸம்ப்ரதாயார்த்தவிசேஷ மஸ்மாத் சுச்ராவ தந் நித்ய மபூஜயத் ஸ;'

[1] स वानशैलेशयतिप्रभावप्रकाशक स्तोत्र मुवाच कान्तम् ।
अधीत्य यन्नित्य ममुण्य पादपद्माश्रिता श्श्रीपतिसाम्य मापुः ॥

[2] समरपुङ्गवसद्गुरु रादरा
च्छ्रवणयो र्निदधे जनतेरितम् ।
गगनशैलमुनीन्द्रपदांबुजे
निजभरं सकलं स कलानिधिः ॥

என்கிறபடியே ஸமரபுங்கவாசார்யரும் பெரிய ஜீயர் ஸந்நிதியில் அவர் பாதரேகையாய் எழுந்தருளியிருக்கிற வானமாமலை ராமானுஜ ஜீயருடைய வைபவங் கேட்டு மிகவும் ஞானாதிகராகையாலே வந்து அவர் திருவடிகளில் ந்யஸ்தபரராய் ஆச்ரயித்து அவரிடத்தில் மந்த்ரார்த்தங்களையும் பகவத்விஷயம் முதலான ஸத்ஸம்ப்ரதாயார்த்தங்களையும் கேட்டு ஹ்ருஷ்டராய் அவர் திருவடிகளில் நித்யமான கைங்கர்யங்களைப் பண்ணிப்போந்து இருந்தார்.

[1]"அத வத்ஸகுலாம் போதே ரப்ஜோ ராமானுஜோ குரு:। அகமத் வானசைலேச யதிராஜம் ஜகத்குரும்॥" என்கிறபடியே ஸ்ரீவத்ஸ குலதிலகரான ராமானுஜாசார்யரானவர் வானமாமலை ஜீயர் திருவடிகளி லாச்ரயிக்க எழுந்தருளுகையில் [2]"ஆயாந்த மாலோக்யததா விதூரே வாநாத்ரியோகீ ஸ முதா (அ)பிமேநே। த்ருவம் ஹ்யயம் தர்சநவர்த்தன: ஸ்யாத் தயாம்புதே ரங்கபதே: ப்ரஸாதாத்॥" என்கிறபடியே வானமாமலை ஜீயரும் இவருடைய தேஜஸ்ஸைக் கடாக்ஷித்து பெரிய பெருமாள் க்ருபையாலே இவர் தர்சனவர்த்தகராவார்" என்று கடாக்ஷித்துக்கொண்டிருக்க, ராமானுஜாசார்யரும் ராமானுஜ ஜீயரைக் கிட்டிவந்து ஸாஷ்டாங்கமாக தண்டன்ஸமர்ப்

---

वियन्महीभृद्यतिसार्वभौम-श्रीपादपद्माश्रयणात् कृतार्थः।
सत्संप्रदायार्थविशेष मस्मा च्छुश्राव तन्नित्य मपूजयत् सः॥

[1] अथ वत्सकुलाम्बोधे रब्जो रामानुजो गुरुः।
अगम द्वानशैलेशयतिराजं जगद्गुरुम्॥

[2] आयान्त मालोक्य तदा विदूरे वानाद्रियोगी स मुदाभिमेने।
ध्रुवं ह्ययं दर्शनवर्द्धन स्स्या द्दयानिधे रङ्गपतेः प्रसादात्॥

பித்து [1]"தயஸ்வ மாமத்ய தயாநிதே த்வம்" என்று ப்ரார்த் திக்க ஜீயரும் [2]"கடாக்ஷவர்ஷை ரபிஷிச்ய தம் ஸ்வை: தாபாபஹை: தாபமுகாந கார்ஷீத்|பஞ்சாபி ஸம்ஸ்காரவ ராந் யதீந்த்ரோ நாமாபி ராமாநுஜபுத்ரகேதி||" என்கிற படியே ஸம்ஸார தாபங்களைப் போக்குவிக்குமதான தம் முடைய க்ருபாகடாக்ஷ வர்ஷங்களாலே அபிஷிக்தரார்க்கி பஞ்சஸம்ஸ்காரங்களையும் செய்தருளி இவருக்கு ராமானு ஜம் பிள்ளான் என்று திருநாமமும் சாற்றியருளி க்ரமேண ஸகல ரஹஸ்யஜாதங்களையும் பகவத்விஷயங்களையும் ப்ரஸா தித்தருளி [3]"சகார வேதாந்தயுகப்ரவீணம்" என்று உபய வேதாந்தப்ரவர்த்தகராம்படி க்ருபை செய்தருளினார். அநந் தரம் [4]"புத்ரீக்ருதோஸௌ ககநாத்ரியோகிநா த்வாத்ரிம் சதப்தாந் தமநுவ்ரதோ ஸௌ | சாயேவ ஸத்வம் சவிவந் மஹாமணிம் நிவாஸசய்யாஸநபோஜநேஷு ||" என்கிற படியே ராமானுஜம் பிள்ளானும் பிள்ளையென்று அழைக்கப் பட்டவராய் வானமாமலை ஜீயருக்கு நிழலுமடிதாறுமாய் நின்று ஸர்வாவஸ்தையிலும் தொடர்ந்து முப்பத்திரண்டு ஸம்வத்ஸரம் அடிமைசெய்து வாழ்ந்துகொண்டிருந்தார்.

---

1 दयस्व मा मद्य दयानिधे त्वम्

2 कटाक्षवर्षै रभिषिच्य तं स्वै स्तापापहै स्तापमुखा नकार्षीत् ।
पञ्चापि संस्कारवरान् यतीन्द्रो नामापि रामानुजपुत्रकेति ॥

3 चकार वेदान्तयुगप्रवीणं श्रीवत्सवंश्यं यतिराजवर्यः ।

4 पुत्रीकृतोऽसौ गगनाद्रियोगिना
द्वात्रिंशदब्दान् तमनुव्रतो सौ ।
छायेव सत्वं छविवन् महामणिं
निवासशय्यासनभोजनेषु ॥

[1]"ததோ மஹாத்மா நிக்ருஹீதசித்த ச்சாத்தாநிதி க்யாதி முபாகதோ த்ர | முநீந்த்ர மாச்ரித்ய பபூவ தஸ்மாத் ஸம்ப்ராப்தஸத்தாதிகுண : ப்ரகாமம்|| ஆத்தா நிதி ப்ராப்தயசா : ப்ரசாந்த ஸ்வாந்த : ஸமாச்ரித்ய யதீச்வரம் தம்| ஆத்தாகிலத்ராவிடவேதபாவ : ப்ராப்தோ பவத் ஞாநநிவிஷ்டத்ருஷ்டி :||" என்கிறபடியே மஹாத்மாவாய் ஜிதேந்த்ரியராயிருக்கிற ஆத்தானும் வானமாமலை ஜீயர் ப்ரபாவம் கேட்டுவந்து, அவர் திருவடிகளி லாச்ரயித்து, "ஆத்மஸ்வரூபம் ஸத்தை பெற்றது" என்று கருதார்த்தராய், ஜீயர் திருப்பவளத்தாலே பகவத் விஷயத்தை ப்ரஸாதிக்க ச்ரவித்து அத்தாலே ஞானஸித்தியையும் பெற்று அத்தாலே ஞானக் கண்ணாத்தான் என்று ப்ரஸித்தரா யிருந்தார்.

அநந்தரம்[2] "கோஷ்டபுராத்ச்ரேஷ்டதமோ குரூணாம் கோஷ்டபுரீபூர்ணகுரோ ஸ்ஸ வம்ச்ய :| கோஷ்ட மகாத் வாநமஹாத்ரிஸூரே : கோஷ்டபதே : ஸம்ச்ரயணாத் ப்ரியோபூத்||" என்கிறபடியே திருக்கோட்டியூரில் நின்றும் நம்பிவம்ச்யராய் அந்த வம்சத்தில் ச்ரேஷ்டராயிருந்துள்ள கோஷ்டபுரத்தையரும் வானமாமலை ஜீயர் கோஷ்டியிலே எழுந்தருளி கோஷ்டியில் ஸ்வாமியாக எழுந்தருளியிருக்கிற வானமாமலை ஜீயரை ஆச்ரயித்து அவருக்கு அத்யந்தப் ப்ரியபூதராய் எழுந்தருளியிருந்தார்.

---

[1] ततो महात्मा निगृहीतचित्त श्चात्तानिति ख्याति मुपागतो त्र।
मुनीन्द्र माश्रित्य बभूव तस्मा त्संप्राप्तसत्तादिगुणः प्रकामम्॥
आत्तानिति प्राप्तयशाःप्रशान्तस्वान्त स्समाश्रित्य यतीश्वरन्तम्।
आत्ताखिलद्राविडवेदभावः प्राप्तोऽभव ज्ज्ञाननिविष्टदृष्टिः॥

[2] गोष्ठीपुराच्छ्रेष्ठतमो गुरूणां गोष्ठीपुरीपूर्णगुरो स्स वंश्यः।
गोष्ठी मगा द्वानमहाद्रिसूरे र्गोष्ठीपते स्संश्रयणा त्प्रियो ऽभूत्॥

அநந்தரம் [1]"அத வாநாத்ரியோகீந்த்ரம் ச்ருத்வா ஞாநாதிபூஷணம்| அசிச்ரயந் மஹாதேஜா: ஸித்தபாதோ ஜகத்குரும்||" என்கிறபடியே பள்ளக்கால் சித்தரும் வானமாமலை ஜீயருடைய ஞானபக்தி வைராக்யாதி குணவைபவங்களைக் கேட்டு அவர் ஸந்நிதியிலே எழுந்தருளி ஜீயர் திருவடிகளி லாச்ரயித்தருளினார்.

அநந்தரம் பெரிய ஜீயரும் ஒரு ஸமயத்தில் தமக்குண்டான அதிசயமெல்லாம் வானமாமலை ஜீயருக்கு முண்டாக வேணு மென்றிருக்குமவராகையாலே [2]"ரம்யஜாமாத்ருமுநிநா வாநாசலமுநீச்வர:| பதிர் கஜாநா மஷ்டாநாம் க்ருதச்சைவம் விதாநத:|| கோஷ்டீபுரார்ய வரதார்ய மஹார்ய வர்யா: ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரதாநுஜ ஸித்தபாதா:|| ஸ்ரீசுத்தஸத்வ ரணபுங்கவதேசிகௌச வாநாத்ரியோகிந இமே ஷ்டகஜா: க்ருதா ஸ்தே||" என்கிறபடியே வானமாமலை ஜீயருக்கும் அஷ்டதிக்கஜங்களை நியமிக்கத் திருவுள்ளமாய் மஹார்யர், ஸமரபுங்கவாசார்யர், சுத்தஸத்வமண்ணா, அப்பாச்சியாரண்ணா, ராமானுஜம் பிள்ளை, கோஷ்டீபுரத்தையர், பள்ளக்கால் சித்தர், ஞானக்கண்ணாத்தான் இவ்வெண்மர்களையும்

---

1 अथ वानाद्रियोगीन्द्रं श्रुत्वा ज्ञानादिभूषणम् ।
अशिश्रयन् महातेजा स्सिद्धपादो जगद्गुरुम् ॥

2 रम्यजामातृमुनिना वानाचलमुनीश्वरः ।
पति र्गजाना मष्टानां कृत श्चैवं विधानतः ॥
गोष्ठीपुरार्यवरदार्यमहार्यवर्या
श्श्रीश्रीनिवासभरतानुजसिद्धपादाः ।
श्रीशुद्धसत्वरणपुङ्गवदेशिकौच
वानाद्रियोगिन इमेष्टगजाः कृता स्ते ॥

அஷ்டதிக்கஜங்களுக்கு கைங்கர்ய வ்யவஸ்தையும் செய்தருளினார். வானமாமலை ஜீயரும் பெரிய ஜீயருடைய க்ருபாபாத்ரர்களான அஷ்ட திக்கஜங்களோடே மஹாப்ரபாவசாலியாய் எழுந்தருளியிருக்கும் காலத்தில் ஒருநாள் வானமாமலை ஜீயரும் தம்முடைய அஷ்டதிக்கஜங்களோடே ஸ்வாசார்யரான பெரிய ஜீயரை ஸேவித்து அநுபவித்துக்கொண்டு கோஷ்டியிலே எழுந்தருளியிருக்க [1]"ததா ஸுந்தரஜாமாதா மஹார்யம் ப்ராஹ ஸாதரம்| த்வத்குரோர் விஷயே கிஞ்சித் வதபோ ஸுப்ரதிஷ்டிதம்" என்கிறபடியே அப்போது பெரிய ஜீயரும் மஹார்யரைக் கடாக்ஷித்து உம்மாசார்யர் விஷயமாய் ஸுப்ரதிஷ்டிதமாய் இருக்கும்படி ஒன்று சொல்லிக்காணீரென்றருளிச்செய்ய [2]"இதி ப்ராசார்யஸந்தேசம் நிசம்ய பரவாந் ஸ்தித:| ஸ பத்யம் ப்ராஹ ஸஹஸா ஸ்வாசார்யகுணவிஸ்தரம்||" என்கிறபடியே மஹார்யரும் ஸ்வாமி நியமனங் கேட்டவாறே ஆவிஷ்டராய் தம் நினைவின்றியே ஆசார்யரான வானமாமலை ஜீயர் சீலாதி குணங்களுக்கு இசைந்திருக்கும்படி [3]"ரம்யஜாமாத்ருயோகீந்த்ர பாதரேகாமயம் ஸதா| ததாயத்தாத்மஸத்தாதிம் ராமாநுஜ முநிம் பஜே||" என்றருளிச் செய்ய இப்படி ஞாதாக்களுக்கெல்லாம் ஹ்ருத்யமாயும் அந்வர்த்தகுண போதகமாயும் இருக்கிற பத்யத்தைக் கேட்டு பெரிய ஜீயரும் அத்யந்தம் ஹ்ருஷ்ட

---

[1] तदा सुन्दरजामाता महार्यं प्राह सादरम् ।
त्वद्गुरो विषये किञ्चि द्वद भो ! सुप्रतिष्ठितम् ॥

[2] इति प्राचार्यसन्देशं निशम्य परवां स्थितः ।
स पद्यं प्राह सहसा स्वाचार्यगुणविस्तरम् ॥

[3] रम्यजामातृयोगीन्द्रपादरेखामयं सदा ।
तदायत्तात्मसत्तादिं रामानुजमुनिं भजे ॥

ராய் [1]"ச்ரீசைலேசேதி பத்யம் யத் ரங்கராஜோ ரமாபதி:। த்ரிகண்டம் ப்ராஹ பகவாந் பூர்வம் பக்ஷீசமண்டபே॥ துரீய கண்டவத் கேயம் தேநைவ ஸஹ ஸர்வதா॥" என்கிறபடியே முன்பு பெரிய பெருமாள் கருடமண்டபத்திலே த்ரிகண்டமாய் அருளிச்செய்த ஸ்ரீசைலேச பத்யத்தோடே துரீய கண்டமாயிருக்கும்படியும் [2]"பல்லாண்ட்விதி ஸமாரப்ய பல்லாண்டேத்யந்த மேவ ச ॥ காதாத்வயம் யதா ஸர்வை ரேக காதேவ கீயதே। யதா வராஹசரமோ மந்த்ர: பத்யத்வயாத்மக:॥ யதா ச கீயதே ஸர்வைர் ஹரி ரித்யக்ஷரத்வயம்। யதா வாக்யத்வயம் மந்த்ரரத்நம் லோகே ப்ரகீயதே॥ ஸ்ரீசைலேதி ஸமாரப்ய ராமாநுஜமுநிம் பஜே। இத்யந்த மேக மந்த்ர: ஸ்யாத் பத்யத்வயமபி த்ருவம்॥" என்கிறபடியே பல்லாண்டென்று ஆரம்பித்தால் அப்பாஞ்சசன்னியமும் பல்லாண்டே என்று இரண்டு பாட்டையும் ஒன்றுயனுஸந்திக்குமாபோலேயும் பத்யத்வயாத்மகமாய் ஏகமந்த்ரமாயிருக்கும் வராஹ சரமம்போலேயும், அங்காங்கிகளை ப்ரதிபாதிக்குமதாய் ஈரிரண்டு வாக்யமாயிருந்துள்ள ஏகமந்த்ர

---

1 श्रीशैलेशेतिपद्यं यद्रङ्गराजो रमापतिः।
त्रिखण्डं प्राह भगवान् पूर्वं पक्षीशमण्डपे॥
तुरीयखण्डव द्गेयं तेनैव सह सर्वदा।

2 पल्लाण्ड्विति समारभ्य पल्लाण्डेत्यन्तमेवच।
गाथाद्वयं यथा सर्वै रेकगाथेवगीयते॥
यथा वराहचरमो मन्त्रः पद्यद्वयमात्मकः।
यथा च गीयते सर्वै र्हरि रित्यक्षरद्वयम्॥
यथा वाक्यद्वयं मन्त्ररत्नं लोके प्रगीयते।
श्रीशैलेति समारभ्य रामानुजमुनिं भजे॥
इत्यन्त मेकमन्त्र स्स्या त्पद्यद्वयमपि ध्रुवम्।

மான மந்த்ரரத்னம் போலேயும் இரண்டக்ஷரமான ஹரி பதம்போலேயும் (ஸபதி) நியதங்களாய் அநுஸந்தித்துப் போருங்கோள்'' என்றருளிச்செய்ய அதைக் கேட்டிருந்த ராமாநுஜம் பிள்ளை முதலானாரும் ஸந்தோஷ பரவசர்களாய் பெரிய ஜீயர் திருமுகமண்டலத்தை ஸேவித்து அடியோங்களுக்கு இற்றைக்கு ஓர் மஹாநிதியானது ப்ராப்தமாயிற்று ; "பெரியார்க்காட்பட்டக்கால் பெறுதபயன் பெறுமாறு" என்று கொண்டாடி அன்றுமுதல் அவர்கள் எல்லாரும் [1]"ததாரப்ய மஹாப்ராஞ்ஞை : நியோகாத் வரயோகிந :| பட்யதே ஸர்வகாலேஷு தத் த்வயம் த்வத்வயம் யதா ||" என்கிறபடியே ப்ராசார்ய நியோகத்தாலே ஏகபத்யமாகவும் அங்காங்கி ப்ரதிபாதகமான ஏகமந்த்ரமாயும் அநுஸந்தித்துப்போருவர்கள்.

பின்பு சிலகாலஞ் சென்றவாறே வானமாமலை ஸந்நிதி ஸ்ரீகார்யார்த்தமாக வானமாமலை ராமாநுஜ ஜீயரை யனுப்ப வேணுமாய்ப் பெருமாள் நியமநமாக ஸேனை முதலியார் திருமுகம் வர, மாமுனிகளும் இவரை நியமிக்க, ஆசார்ய நியமனத்தையும் பகவந் நியமனத்தையும் மறுக்க முடியாது இவரும் "ஆசாரியனைப் பிரிந்திருப்பாரார் மனமே பேசு" என்று தன்னிலே விசாரித்துகொண்டு போர மனக்லேசமுற்றவராய்க் காணப்பட்டார். அப்பொழுது அப்பாச்சியாரண்ணவையும் மாமுனிகள் பெருமாள் கோவிலுக்கு நியமித்தருள அவரும் இந்த ஸேவையையும் கோஷ்டியையும் விட்டு விடைகொள்ள வல்லலேனோ வென்று வ்யாகுலப்பட, ஜீயர் அவர் கையைப் பிடித்துக்கொண்டு ஸந்நிதியிலே எழுந்தருளி தாம் அடிதொடங்கி இராமாநுசன் என்று திருநாமம் சாற்றி பஹுநாளாண்டதாய், ஜீர்ணமான தீர்த்தச் சொம்பு

---

[1] तदारभ्य महाप्राज्ञै र्नियोगा द्वरयोगिनः ।
पठ्यते सर्वकालेषु तद्द्वयं त्वद्द्वयं यथा ॥

ஸ்வாமியினுடைய ப்ரஸாதமென்று வானமாமலை ராமானுஜ ஜீயர் திருமண் கூடையிலே வைத்து ஸேவித்துக் கொண்டிருப்பதைக் கொண்டு வரச்சொல்லி திருக்கையிலே வாங்கிக் கொண்டு முன்னிருந்த திருவாழி, திருச்சங்கு, திருமண் ஸ்ரீசூர்ணம் எல்லாம் ப்ரமுஷிதமாயும் ஜீர்ணமாயு மிருப்பதாலே இத்தையிட்டு நம்மைப்போலிருக்கிற இரண்டு விக்ரஹங்களையுமுண்டாக்கி உமது ஆசார்யருக்கு ஒரு விக்ரஹமும் உமக்கு ஒரு விக்ரஹமுமாகக் கொள்ளுமென்று நியமித்து அவ்வாறே ஸித்தமான அர்ச்சைகளான இரு விக்ரஹங்களையும் தாம் கடாக்ஷித்து தமது திருக்கைகளாலே எடுத்து இருவருக்கும் கொடுத்து அர்ச்சாரூபியாய் நாமே உங்களைத் தொடர்ந்து வருகையாலே நீங்கள் நம்மைப் பிரிந்ததாக க்லேசிக்கவேண்டா என்றருளிச் செய்து இருவரையும் தத்தம் கார்யங்களிலே யதிகரிக்கும்படி நியமித்தருளினார்.

பிறகு வானமாமலை ஜீயரும் தேறி தமது ஆசார்ய விக்ரஹத்தைத் தம்முடன் எழுந்தருளப்பண்ணிக்கொண்டு சிரீவரமங்கைக்கு எழுந்தருளி மடத்திலே தமது ஆசார்யார்ச்சையை ப்ரதிஷ்டிப்பித்து அவருக்கு பரதந்த்ரராய் பரதாழ்வான் ஸ்ரீராமபாதுகாபரதந்த்ரனாய் ஸாம்ராஜ்யம் செலுத்தி வந்தாப்போலே ஸந்நிதி ஸ்ரீகார்யங்களை எல்லாவற்றையும் ஸ்வாமிதிருமுன்பே விஞ்ஞாபநம் செய்தே நடத்தியருளினார். இப்படி [1]"அநந்தரம் லக்ஷ்மணயோகிவர்ய: கதாசநோவாஸ வியந்மஹீத்ரே | ஸ்ரீதேவநாதே ரமயைதமாநே வஸம்ச்சிராத் தத்வரிவஸ்யயைவ||" என்கிறபடியே தெய்வநாயகனுக்கும் ஸ்ரீவரமங்கை நாய்ச்சியாருக்கும் உகப்பாக ஸ்ரீகார்யங்களை நிர்வஹித்துக்கொண்டு வெகுகாலம் வானமாமலையிலேயே எழுந்தருளியிருந்தார்.

---

[1] अनन्तरं लक्ष्मणयोगिवर्यः कदाचनो वास वियन्महीध्रे ।
श्रीदेवनाथे रमयैधमाने वसं श्चिरा त्तद्वरिवस्ययैव ॥

பிறகு ஒரு ஸமயம் [1]"நியோகாத் ரம்யஜாமாத்ரு யோகிநோ ரங்கமந்திரம்| ததஸ்வஸ்ததசாம் த்ரஷ்டும் அகாத் வாநாத்ரிஸம்யமீ|| ப்ரணம்ய ரம்யஜாமாத்ருயோகிநம் யோகிபுங்கவ:| க்ருதார்த்தோ பூத் ததா தஸ்ய ஸந்நிதா வவஸத் ஸுகம்||" என்கிறபடியே கோயிலில் பெரிய ஜீயர் நோவுசாத்தி எழுந்தருளியிருக்கையில் "பாராரு மண்ணவீ ராமானுசச்சீயர், சீராரும் சேனைமுதலியார் நாயனார், ஆராதவன்புடைய வாத்தான றிந்திலரே என்னுடைய துன்பமதை தீர்த்தற்குத்தான்" என்றும், "தாய்மனம் நின்றிரங்கித் தனியேநெடுமால் துணையாப் போயின" வானமாமலை ஜீயருக்கு விண்ணப்பம் என்று அருளிச்செய்து திருமுகம் போகவிட, வானமாமலை ஜீயரும் அதைச் சிரஸா வஹித்து உடனே புறப்பட்டு ஜீயர் ஸந்நிதிக்கு எழுந்தருளி ஸ்வாமி திருவடிகளில் பரிசரித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கும் காலத்திலே ஒரு நாள் பெரிய ஜீயரும் திருமேனி நோவு சாந்தமாகவிருக்க, தேசதேசங்களில் யாத்திரைசென்று ப்ரமுஷிதமான ராமாநுஜ ஸித்தாந்தத்திற்கு உபகரிக்கப்பெற்றிலோமே; அதற்கு வீரகு ஏதென்று சிந்தித்து [2]"தத: ஸ்ரீரம்யஜாமாத்ருயோகீ வாநாத்ரியோகிநம்| ஜகாத ரக்ஷணார்த்தம் தம் ஜகதாம் குருராதராத்||" என்கிறபடியே வானமாமலை ஜீயரை யழைத்து ஜகத்ரக்ஷணார்த்தமாக ஒரு வார்த்தை அருளிச்செய்தபடி—

---

[1] नियोगा द्रम्यजामातृयोगिनो रङ्गमन्दिरम् ।
तदस्वस्थदशां द्रष्टु मगा द्वानाद्रिसंयमी ॥
प्रणम्य रम्यजामातृयोगिनं योगिपुङ्गवः ।
कृतार्थो भू त्तदा तस्य सन्निधा ववस त्सुखम् ॥

[2] तत श्श्रीरम्यजामातृयोगी वानाद्रियोगिनम् ।
जगाद रक्षणार्थं तं जगतां गुरु रादरात् ॥

என்னென்னில் [1]"பூர்வம் ராமானுஜாசார்யைர் யதீநாம் சேகரைர் முநே| சிக்ஷிதாபி க்ஷிதிர் வ்யாப்தா பாமரௌகைர் நசோபதே|| அஸ்மத்ப்ரதிநிதிர் யோகிந்! கத்வா த்வம் சோத்தராம் திசம்| தத்ரத்யாந் ஸகலாந் பும்ஸ: குரு ஸத்வ குணோஜ்வலாந்|| பஞ்சஸம்ஸ்காரதாநேந ரஹஸ்யார்த்த ப்ரதாநத:| ஸம்ஸாரார்ணவஸம்மக்நாந் உஜ்ஜீவய மஹாமுநே!||" என்கிறபடியே முன்பு பாஷண்டத்ரும ஷண்ட தாவதஹநராய் எழுந்தருளியிருந்த எம்பெருமானாராலே ஜகத்தெல்லாம் திருத்தப் பட்டிருக்கச்செய்தேயும் நெடுங்காலம் சென்றதனால் பாமர ஜனங்களாலும் குத்ருஷ்டிகளாலும் வ்யாப்தமான உத்தர திக்கு ஏறப்போய் பஞ்சஸம்ஸ்காராதி தாநத்தாலும் ஞானோபதேசத்தாலும் நமக்கு ப்ரதிநிதியாயிருந்து சீர்திருத்தி வாரு மென்று நியமித்தருளி [2]" இத்யாதிச்ய தமாஹூய ரங்கராஜநிவேசநம்| ப்ரவிச்ய ரங்கராஜம் தம் புஜகேசயம் அத்புதம்|| த்ருஷ்ட்வா நிவேத்ய ஸ்வாபீஷ்டம் ஸசிஷ்யஸ் ஸம்ஸ்திதோ முநி:|" என்கிறபடியே பெரிய ஜீயரும் இவ்விஷயத்துக்குப் பெரிய பெருமாள் நியோகம் வேணுமென்று திருவுள்ளமாய் இவரையுங்கூட்டிக்

---

1 पूर्वं रामानुजाचार्यैं र्यतीनां शेखरै र्मुने ।
शिक्षितापि क्षितिर्व्याप्ता पामरौघै र्नशोभते ॥
अस्मत्प्रतिनिधि र्योगिन् गत्वा त्वं चोत्तरां दिशम् ।
तत्रत्यान् सकलान्पुंसः कुरु सत्वगुणोज्वलान् ।
पञ्चसंस्कारदानेन रहस्यार्थप्रदानतः ।
संसारार्णवसम्मग्ना नुज्जीवयमहामुने ॥

2 इत्यादिश्य तमाहूय रङ्गराजनिवेशनम् ।
प्रविश्य रङ्गराजं तं भुजगेशय मद्भुतम् ॥
दृष्ट्वा निवेद्य स्वाभीष्टं सशिष्य स्संस्थितो मुनिः ।

கொண்டு ஸந்நிதியேற வெழுந்தருளி விண்ணப்பம் செய்ய பெருமாளும் பெரிய ஜீயர் திருவுள்ளத்தை உட்கொண்டு வானமாமலைஜீயரைக்கடாக்ஷித்து நீர் இவர் (தத்) அம்சாவதாரமாகையாலே [1]"ரம்யஜாமாத்ருயோகீந்த்ரபர்யாயாசார்யதாம் பஜந்| ராமாநுஜமுநீந்த்ரஸ்ய தர்சனஸ்தாபகோ பவ|| இத்யாதிச்ய ச ஸம்மாந்ய ப்ரேஷயாமாஸ தம் ப்ரபு:|" என்கிறபடியே வரவரமுநி பர்யாயாசார்யராய்க் கொண்டு யாத்ரைசென்று ராமாநுஜ தர்சன ஸ்தாபனம் பண்ணிவாரு மென்று நியமித்து க்ரமேண ஆசார்ய சிஷ்யர்களையும் ஸம்மானித்து அனுப்பியருள பெரிய ஜீயரும் பெற்றுக்கொண்டு ஸசிஷ்யராய் மடமேற எழுந்தருளி வானமாமலை ஜீயரை [2]"இத்யாதிஷ்டோ முநீந்த்ரேண வாநாத்ரிமுநிபுங்கவ:| ஸ்வஸ்யா ஷ்டதிக்கஜை: ஸாகம் ப்ரதஸ்தே ரங்கமந்திராத்||" என்கிறபடியே இந்த ப்ரகாரமாக பெரிய பெருமாள் நியமனபர்யந்தமாக நியமித்தருள, உத்தம சிஷ்யரான வானமாமலை ஜீயரும் மஹாபாக்யமென்று மணவாளமாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகளை உன்னிச் சிரத்தாலேதீண்டி, விடைபெற்று, ஸ்வாசர்ய க்ருபாபாத்ரபூதர்களான ஸ்வாஷ்டதிக்கஜங்களோடும் பின்னும் அனேக ஸ்ரீவைஷ்ணவர்களோடும் பெரிய ஸம்ப்ரமத்துடனே புறப்பட்டு வடமுகம் நோக்கி எழுந்தருள, [3]"ஸஹா கதா:

---

1 रम्यजामातृयोगीन्द्रपर्यायाचार्यतां भजन् ।
रामानुजमुनीन्द्रस्य दर्शनस्थापको भव ॥
इत्यादिश्यच सम्मान्य प्रेषयामास तं प्रभुः ।

2 इत्यादिष्टो मुनीन्द्रेण वानाद्रिमुनिपुङ्गवः ।
स्वस्यांष्टदिग्गजै स्साकं प्रतस्थे रङ्गमन्दिरात् ॥

सहागतास्तदा शिष्या आदरेण जयोक्तिभिः ।
नानावाक्यशतै रुच्चै वदन्ति गुरो र्गुणान् ॥

த்தா ஸிஷ்யா ஆதரேண ஜயோக்திபி:| நாநாவாக்யசதை ருச்சை ருத்கிரந்தி குரோர் குணாந்||'' என்கிறபடியே தேசதேசங்களாய் எழுந்தருளும்போது ஸ்ரீவைஷ்ணவர்கள் திரண்டு பெருங் கூட்டமாய், ''கோயில் மணவாள மாமுனிவன் பொன்னடியாஞ் செங்கமலப் போதுகள் வந்தார்'', ''வரமங்கை மாமுனிவன் வந்தார்,'' ''தெய்வநாயககர்க்கினிய தேசிகனுர் வந்தார்,'' ''எம்பெருமானுர் தர்சனத்தை வளர்க்குமவர் வந்தார்'' என்று இப்படிப் பலவாருக இவர் வைபவங்களைச் சொல்லி விருதூதிப் பல திருச்சின்னம் பணிமாற ஸகல வாத்யங்களும் முழங்க எழுந்தருளுகையில் இதை தேசாந்தரஸ்தர் எல்லாரும் கேட்டு [1]''தத: ஸமுத்ஸுகா: ஸர்வே சதசோ தஸஹஸ்ரச:| சரணம் தஸ்ய ஸம்ச்ரித்ய சரணௌ தந்ய தாம் கதா:||'' என்கிறபடியே அவர்கள் அஸங்க்யாதர்களாய் மருகாந்தாரத்திலே மஹா வ்ருஷ்டியைக் கண்டாப்போலே அத்யாச்சர்ய யுக்தர்களாய் வந்து ஸ்வாமி வானமாமலை ஜீயர் திருவடிகளிலாச்ரயிக்க அவர்களையும் க்ருபை பண்ணியருளி ''திருத்தித் திருமகள்கேள்வனுக்காக்கி'' என்றும், ''அரங்கன் செய்ய தாளிணையோ டார்த்தான்'' என்றும் சொல்லுகிறபடியே, ''அரங்கன் மெய்யடியார்கள்'' என்றும், ''திருமாலடியார்கள்'' என்றும் நிரூபகமாம்படி அத்தலைக்கு ஆளாக்கி அருளாநின்றுகொண்டு, [2]''தித்ருக்ஷு: த்வாரகாம் ப்ராப்ய ப்ருந்தாவநமநுஸ்மரந்| கேதாரம் ஜில்லிகாரண்யம் நைமிசாரண்யமேவ ச|| ஸாலக்ராமகிரிஞ்சைவ ஸம்ஸேவ்ய

---

[1] तत स्समुत्सुका स्सर्वे शतशो ऽथ सहस्रशः।
शरणं तस्य संश्रित्य चरणौ धन्यता ङ्गताः॥

[2] दिदृक्षु र्द्वारकां प्राप्य वृन्दावन मनुस्मरन्।
केदारं झिल्लिकारण्यं नैमिशारण्यमेवच॥
सालग्रामगिरिं श्चैव संसेव्य मुद मवाप सः।

முதமாப ஸ:|'' என்கிறபடியே மேலமார்க்கமாய் எழுந்தருளி த்வாரகையை ஸேவித்துக்கொண்டு ப்ருந்தாவன மேற எழுந்தருளி கேதாரம், ஜில்லிகாரண்யம், நைமிசாரண்யம், ஸாலக்ராமகிரிகளையும் ஸேவித்துப் புறப்பட்டு [1]'' கத்வா பதரிகாத்வீபம் (க்ஷேத்ரம்) மநுராட்ஜநநாலயம்| தத்ர நாராயணஸ்யார்யோ மந்த்ரராஜம் விவ்ருண்வத:|| ஸ்வாகாரம் நர முத்திச்ய லோகாநாம் ஹிதசிந்தயா| க்ருத்வோத்ஸவாந் மண்டபாதீந் ப்ரதஸ்தே தக்ஷிணாம் திசம்||'' என்கிறபடியே "வானமாமலை ராமானுஜ ஜீயராகிய பெரிய காளமேகம் புறப்பட்டு மணவாளமாமுனிகளாகிற ஞானக் கடலிலே படிந்து மெய்ஞானமாகிய நீரைப் பருகி ஸ்வாசார்ய நியோகமாகிற மாருதம் வடமுகமாக நயிப்பிக்கப் புறப்பட்டுத் தம்முடைய க்ருபாமுகத்தாலே தேசவாசியின்றிக்கே ஸமமாக வர்ஷித்து, ஸ்வரூபமறிய இயலாது தீய்ந்து கிடந்த எம்பெருமானார் தர்சனமாகிற ஸஸ்யங்களெல்லாம் தளிர்த்துப் பலமுகமாயிற்று'' என்று ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லாரும் உத்கோஷிக்கும்படி திருமந்த்ரம் விளைந்த பூமியான பதரிகாச்ரம மேற எழுந்தருளி, நரநாராயணர்களை மங்களாசாஸநம் செய்தருளி, உபகார ஸ்ம்ருதியாலே நரநாராயணர்களுக்குத் திருமண்டபம் கட்டிவைத்து உத்ஸவமும் நடத்தியருளி, அங்கு சிலகாலம் மங்களாசாஸநபரராய் எழுந்தருளியிருந்து நரநாராயணர்கள் |அநுமதிகொண்டு "கங்கைகங்கையென்ன வாசகத்தாலே எழுமையுங்கூடி ஈண்டியபாவம் இறைப்பொழுதளவினில் கழிவிடும் பெருமை

---

[1] गत्वा बदरिकाक्षेत्रं मनुराट्जननालयम् ।
तत्र नारायणस्यार्यो मन्त्रराजं विवृण्वतः ॥
स्वाकारं नर मुद्दिश्य लोकानां हितचिन्तया ।
कृत्वोत्सवान् मण्डपादीन् प्रतस्थे दक्षिणां दिशम् ॥

புடை கங்கையிலே" உடையவர் நீராடின துறையிலே "திருமால் கழலிணைக்கீழே குளித்து" என்கிறபடியே நீராடித் திருப்பரிவட்டம் சாத்தியருளி த்வாதசோர்த்வபுண்ட்ரங்களையு மணிந்துகொண்டு கண்டமென்றுங் கடிநகர் எம்பெருமானைக் கைதொழுது கழலிணை தொழுது புறப்பட ஸ்ரீ வைஷ்ணவர்கள் "பாஷண்டத்ருமஷண்ட" தொடங்கி விருது பல கூற திருச்சின்னம் பணிமாற ஸகல வாத்யங்களும் முழங்கக் கீழை மார்க்கமாய் வாரணஸீ எழுந்தருளுகையில் அங்குள்ள த்வைதிகள் மாயாவாதிகள் விருதூதப்பொறுமையாலே [1]"த்வைதம் கைச்சித் உதீரிதம் கதிபயை: ஸஞ்ஜல்பிதம் சேதநப்ரும்ஹாபேதமபி ப்ரதூஷ்ய புவநே ராமானுஜீயம் மதம் | ஸ்பஷ்டீக்ருத்ய ஸமஸ்தவாதிநிவஹாந் நிர்ஜித்ய லக்ஷ்மீபதேர் தாஸ்யாஸக்தமநோரதாந் விதநுதே ராமானுஜோயம் முநி :||" என்கிறபடியே, வாதம்பண்ண வர அவர்களை எல்லாம் வாதில் வென்று ராமானுஜ தர்சனத்திற்கு ஆளாக்கி வாழ்வித்துக்கொண்டு எழுந்தருளுகையில் அடியார்கள் எல்லாரும் ஸ்வாமி வைபவங்கள் கண்டு கண்ணெச்சில் வாராமைக்காகப் பரிந்து "தண்டிவரும் சாக்கியர் வாய்தகர்த்தவனே பல்லாண்டு, மண்டிவரும் வாதியரை வதைத்தவனே பல்லாண்டு, மணவாளமுனி கழல் சேர்வரதனே பல்லாண்டு, எண்டிசையும் பரவு கழலி றையவனே பல்லாண்டு, இலகுபுகழி ராமானுசமுனியே பல்லாண்டு" என்று மங்களாசாஸநம் செய்துகொண்டுவர எழுந்தருளு

---

1 द्वैतं कैश्चिदुदीरितं कतिपयैः स्संजल्पितं चेतन-
ब्रह्माभेदमपि प्रदूष्य भुवने रामानुजीयं मतम् ।
स्पष्टीकृत्य समस्तवादिनिवहा न्निर्जित्य लक्ष्मीपते
र्दास्यासक्तमनोरथान्वितनुते रामानुजोय म्मुनिः ॥

திறவளவிலே [1]"மத்யேமார்க்கம் பவாம்போதௌ மக்நாந கில சேதநாந்| உத்தாரயித்வா வாநாத்ரிநாயகஸ்ய ரமாபதே:‖ கர்த்தும் விமானப்ராகாரகோபுராதீந் மஹாமதி:| ஸம்பாத்ய த்ரவிணம் பேஜே ஸத்வரம் வேங்கடாசலம்‖" என்கிறபடியே அன்பொடு தென்திசை நோக்கிப் பள்ளி கொண்ட அணியரங்கன் திருப்பதியை நோக்கி விரைந் தெழுந்தருளுகையில் மார்க்க மத்தியில் ஆங்காங்கு அநேகம் ஸ்ரீ வைஷ்ணவர்கள் இவர் வைபவங் கேட்டுவந்து ஆச்ர யித்து பஹுவாக திருமுன்காணிக்கைகளையும் ஸமர்ப்பிக்க அவர்களையெல்லாம் க்ருபைசெய்தருளி வானமாமலைப் பெரு மாள் ஸந்நிதி விமான மண்டப கோபுர ப்ராகாராதி திருப் பணிகளுக்கு அநுஷ்டங்களாக அனேக த்ரவ்யங்களையும் ஸம்பாதித்துக்கொண்டு எழுந்தருளுகையில் பயண கதியிலே திருமலைக்கு எழுந்தருள [2]"ஸம்வத்ஸரே தத்ர கதே கதோ ஸௌ பரம்பதம் ஸௌம்யவரோ முநீந்த்ர:| வ்ருத்தாந்த மேதத் ஹி அச்ருணோத் ததாநீம் சேஷாசலே வாநமஹீத்ர யோகீ" என்கிறபடியே இவரது யாத்ரையிலேயே ஸம்வத் ஸரம் கழிந்தவளவில் கோயிலிலே பெரிய ஜீயர் திருநாட்டுக் கெழுந்தருளின செய்தியைக் கேட்டு வெகுவாக க்லேசித்து, தளர்ந்து தம்மிலே தேறி திருமலையிலப்பன் ஸந்நிதியிலே எழுந்தருளி அங்குள்ள ஜீயர்கள் ஸ்ரீவைஷ்ணவர்கள் அனை வரையுங் கூட்டிக்கொண்டு ஸ்வாசார்யரான பெரிய ஜீயருக்கு

---

1 मध्येमार्गे भवाम्बोधौ मग्ना नखिलचेतनान् ।
उत्तारयित्वा वानाद्रिनायकस्य रमापतेः ॥
कर्तुं विमानप्राकारगोपुरादीन् महामतिः ।
संपाद्य द्रविणं भेजे सत्वरं वेङ्कटाचलम् ॥

2 संवत्सरे तत्र गते गतोसौ परंपदं सौम्यवरो मुनीन्द्रः ।
वृत्तान्त मेत द्ध्यश्रृणो त्तदानीं शेषाचले वानमहीध्रयोगी ॥

பெருக்கத் திருவத்யயனம் நடத்தியருளி வானமாமலைக்கு எழுந்தருளுமவராய்ப் புறப்படவேண்டி [1]"ஸ்ரீ வெங்கடேசாய நிவேத்ய கந்தும் லக்ஷ்மீபதே: ஸந்நிதிமாப யோகீ" என்கிறபடியே அப்பன்ஸந்நிதியிலே விண்ணப்பம் செய்துநிற்க, [2]"லக்ஷ்மீபதி: ஸ்ம்யமிநம் நிரீக்ஷ்ய ஸம்மாந்ய வாசம் ஸமுதாஜஹார | லப்தம் த்வயா ரங்கபதே: ப்ரஸாதாத் ஸௌம்யோபயந்து: க்ருபயாச ஸர்வம்|| ஸாம்யேந ஜாதோவரயோகிமூர்த்தே: சாந்தே குரூணாம் ப்ரதமோஸி யத்த்வம்|| அத: ச நித்யம்வியதத்ரிதேசே ஜகத்ஹிதார்த்தம் ஸுகமாஸ்வயோகிந்||" என்கிறபடியே அப்போது அலர்மேல்மங்கையுறை மார்பனும் ஜீயரைக் கடாக்ஷித்தருளி இவரை பஹுவாக ஸம்மாநிக்கத் திருவுள்ளம்பற்றிப் பார்த்தவிடத்தில் இவரைப் பெரிய பெருமாளும் பெரிய ஜீயருமாய் பூர்ணமாகக் கடாக்ஷித்து உபயவிபூத்யைச்வர்யத்தையும் கைவசமாக்கிப் பூர்ணராக்கியிருப்பதைக் கண்டு, "ஜீயரே! நீர் நம் திருவரங்கத்திலே நர்மாலும் நம்முடைய ஜீயராலும் பூர்ணமாகக் கடாக்ஷிக்கப்பட்டு பூர்ணராகிறீர். நீர் மணவாளமாமுனிகளோடு ஸமமாக அவதரித்தவராகையாலே குருபரம்பரையின் கடையிலே நின்று அநந்தரமுள்ள ஆசார்யர்களுக்கெல்லாம் தலைவராய் ஜகத்ஹிதார்த்தமாக வானமாமலையிலே வாழ்ந்திருக்கக் கடவீர்" என்றருளிச்செய்து ஸம்மானித்தனுப்ப, ஜீயரும்

---

[1] श्रीवेङ्कटेशाय निवेद्य गन्तुं लक्ष्मीपते स्सन्निधि माप योगी ।

[2] लक्ष्मीपति स्संयमिनं निरीक्ष्य सम्मान्य वाचं समुदाजहार ।
लब्धं त्वया रङ्गपतेः प्रसादा त्सौम्योपयन्तुः कृपयाच सर्वम् ॥
साम्येन जातो वरयोगिमूर्ते श्शान्तेगुरूणां परमोसि यत्त्वम् ।
अतश्च नित्यं वियदद्रिदेशे जगद्धितार्थे सुखमास्व योगिन् ! ॥

[1]"ராமானுஜார்யாதிபி ரஷ்டபி ஸ்தைர் திசாகஜைரப்ரதிமப்ரபாவை:| ஸ்ரீரங்க மாகம்ய ஸ தீநசித்த: ஸ்வாசார்யஹீநம் மட மாஜகாம||" என்கிறபடியே திருவேங்கடமுடையான் அநுமதிகொண்டு ஜீயரும் தம்முடையஅஷ்டதிக்கஜங்களுடன் புறப்பட்டு த்வரையுடன் கோயிலேற எழுந்தருளி அதிக கேதத்தோடு மடத்து வாசலில் ஸாஷ்டாங்கமாய் தண்டம்ஸமர்ப்பித்து நிற்கும்போது ஆசார்யரில்லாதே வெறியோடின மடத்தை ஸேவித்து துக்காக்ராந்தராய் "இல்லம் வெறியோடிற்ருலோ" என்று கதறிக் கூப்பிட்டுப் புரண்டு கிடக்க அங்குள்ளார்கள் வாரியெடுத்துத் தேற்றுவிக்கத் தேறி நின்று சில நாளங்கே வஸித்திருக்க [2]"தஸ்மிந் மடேஸ்தாபித யோகிவர்ய: ஸ்ரீரம்யஜாமாத்ருமுநேர் நியோகம்| விஞ்ஞாபயாமாஸ வியந்மஹீத்ர-யோகீச்வராயா ந்திமவாக்யஜாதம்||" என்கிறபடியே அப்போது மடத்திலே எழுந்தருளியிருக்கிற ஜீயர் நாயனுரும் மணவாளமாமுனிகள் அந்திம தசையில் நியமித்த விஷயங்களையெல்லாம் இவரிடத்தில் விண்ணப்பம் செய்தருளினுர்.

அவை என்? என்னில் [3]"ஸௌம்யோ பயந்தா யதி ஸார்வபௌம: (ஸ்வஸ்யாபி) ஸ்வகீயஹஸ்தேந த்ருதோபதண்டம்| ஆசார்யமுத்ராங்குளிபூஷணம் தத் ஸ்ரீசைலநாதைர் த்ருதபாதுகெச|| தேயம்ஹி ஸர்வம் முநயேச தஸ்மை வாநாத்

---

[1] रामानुजार्यादिभि रष्टभिस्तै र्दिशागजै रप्रतिमप्रभावैः ।
श्रीरङ्ग मागम्य सदीनचित्त स्वाचार्यहीनं मठ माजगाम ॥

[2] तस्मिन् मठे स्थापितयोगिवर्य श्श्रीरम्यजामातृमुने र्नियोगम् ।
विज्ञापयामास वियन् महीध्र-योगीश्वराया न्तिमवाक्यजातम् ॥

[3] सौम्योपयन्ता यतिसार्वभौम स्वकीयहस्तेन धृतोपदण्डम् ।
आचार्यमुद्राङ्गुलिभूषणं तत् श्रीशैलनाथै र्धृतपादुकेच ॥

னிவாஸாய மம ப்ரியாய| கிஞ்சாபி வாநாத்ரிமுநீச்வரேண கார்யம்ஹி தீர்த்தம் விபுலம் திதௌ மே|| இத்யேவ மாஞ்ஞாம் ப்ரசகார துப்யம் வைகுண்டலோகம் ப்ரதி கந்து மிச்சந்||'' என்கிறபடியே ''ஸ்வாமி தம் திருக்கைகளில் தரித்திருந்த த்ரிதண்டத்திலுள்ள உபதண்டத்தையும் தம்முடைய திருக்கையிலுள்ள திருவாழி மோதிரத்தையும் திருவாய்மொழிப் பிள்ளை திருவடி நிலைகளையும் தேவரீரிடத்தில் நித்யமாய் இருக்கும்படி கொடுக்கவும், தேவரீரைப் பெருக்கத் திருவத்யயனம் பண்ணும்படி சொல்லவுமாய் நியமித்தருளித் திருநாட்டுக்கெழுந்தருளினார்'' என்று விண்ணப்பம்செய்து, [1]''பூர்வோக்த தண்டம்ச ததாங்குளீயம் ஸ்ரீ சைலநாதார்ய பதத்ரயுக்மம்| ப்ராதாத் வியத்பர்வத யோகிநே தாநா தாய ஸர்வம் சிரஸா ததே ஸ:||'' என்கிறபடியே ஸ்வாமியின் உபதண்டத்தையும் திருவாழி மோதிரத்தையும் ப்ராசார்ய பாதுகைகளையும் எழுந்தருளப்பண்ணி ஸாதிக்க ஜீயரும் பெற்றுக்கொண்டு சிரஸா வஹித்து சிறிது நாள் அண்ணன் முதலியோரால் ஆதரிக்கப்பெற்று எழுந்தருளியிருந்து வானமாமலைக்கு எழுந்தருளுமவராய் பெரிய பெருமாள்நியமநம் பெறவேண்டி உள்ளே எழுந்தருளி ஸேவித்து குணாநுஸந்தானத்தாலே ஈடுபட்டு நிற்க, பெருமாளும் தமக்கு அத்யந்தம் ப்ரியபூதரான ஜீயரைக் கடாக்ஷித்து ஸம்மாநபூர்வமாக ஒரு

---

देयंहि सर्वं मुनये च तस्मै वानाद्रिवासाय मम प्रियाय।
किञ्चापि वानाद्रिमुनीश्वरेण कार्यंहि तीर्थं विपुलं तिथौ मे॥
इत्येवमाज्ञां प्रचकार तुभ्यं वैकुण्ठलोकं प्रति गन्तु मिच्छन्।

[1] पूर्वोक्तदण्डं च तथाङ्गुलीयं श्रीशैलनाथार्यपतत्रयुग्मम्।
प्रादा द्वियत्पर्वतयोगिने तानादाय सर्वं शिरसा ददे सः॥

வார்த்தை அருளிச்செய்தார். அது வென் என்னில் [1]"ஸ்ரீமாந் ஸுந்தரஜாமாதா வைகுண்ட மகமந் முநி:| தத்விப்ரயோகதுக்கம் யத் த்வத்தர்சனகுதூஹலாத்|| நிரஸ்தம் மூலதோ஽ஸ்மாபி: யத் தத்பர்யாயதா த்வயி|" என்கிறபடியே "ஜீயரே! நம் பெரிய ஜீயர் திருநாட்டுக்கெழுந்தருளின துக்கமெல்லாம் தத்பர்யாயா சார்யராயிருந்துள்ள உம்மைப் பார்த்தமாத்ரத்திலே நிரஸ்தமாய்விட்டது; [2]"நித்யம் பர்யாயபூதஸ்த்வம் ரம்யஜாமாத்ருயோகிந:| ராமாநுஜமதே ஸர்வம் ஜகத் ஸ்தாபய மத்ப்ரியே||" என்கிறபடியே நீர் நித்யமாய் வரவரமுநி பர்யாயாசார்யராய் நமக்கு ப்ரியமான ராமானுஜ தர்சந ஸ்தாபகராய் நின்று ஜகத்தை தர்சநாபிருசி மாருதபடி திருத்திவாருமென்று நியமித்து ஸம்மானித்தனுப்ப ஜீயரும் ஸ்வதந்த்ர நியமனம் அநுல்லங்கநீயம் என்று விடை பெற்றுப் புறப்பட்டு வானமாமலை ஏற எழுந்தருளி வான மாமலை எம்பெருமான் விமான கோபுர ப்ராஸாதாதிகளையும் செய்தருளி அநந்தரம் [3]"ஸ்ரீமாந் வாநாத்ரியோகீ விதித குணகண: சேதநாநாம் ஹிதார்த்தீ கத்வா ஜித்வா ச தேசாந் பரஸமயிம்ருகாந் துர்விதக்தேபஸிம்ஹ:| ஸ்ரீமல் லோகார்ய ஸித்தாந்தவிவரணத: ஸாத்விகாநுக்ரஹாய

---

[1] श्रीमान् सुन्दरजामाता वैकुण्ठम गमन्मुनिः।
तद्विप्रयोगदुःखं यत्त्वद्दर्शनकुतूहलात्॥
निरस्तं मूलतोस्माभि र्य त्तत्पर्यायता त्वयि।

[2] नित्यं पर्यायभूत स्त्वं रम्यजामातृयोगिनः।
रामानुजमते सर्वं जग त्स्थापय मत्प्रिये॥

[3] श्रीमान् वानाद्रियोगी विदितगुणगण श्चेतनानां हितार्थी
गत्वा जित्वा च देशान् परसमयिमृगान् दुर्विदग्धेभसिंहः।
श्रीमल्लोकार्यसिद्धान्तविवरणत स्सात्विकानुग्रहाय।

ப்ராப்த: ப்ராப்யாங்க்ரிபத்ம: பரமிதிஜநதாஸ்ஸம்ச்ரயந்தே ஸ்ம வர்யம்|''என்கிறபடியே தேசதேசங்களில் எல்லாம்ஸஞ்சரித்து ஆசார்ய நியோகத்தாலே அநேக துர்வாதிகளையும் ஜயித்து ப்ரஸித்தமான ப்ரபாவத்தையுடையராய், மந்த்ர மந்த்ரார்த்த ரஹஸ்யங்களையும் ஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கிற ஜீயரை அநேகம் சேதந கோடிகள் ஆச்ரயித்து உஜ்ஜீவித்தார்கள்.

பின்பு [1]"கதே சிரே நேஹஸி ஸம்யமீந்த்ர: ஸ்ரீரங்க முத்திச்ய புந: ப்ரதஸ்தே| ராமானுஜார்யேண வரேண பும்ஸாம் வத்ஸாந்வவாயாப்தி-நிசாகரேண||'' என்கிறபடியே வானமாமலையிலே சிலகாலம் ஏவம்ப்ரகாரமாய் எழுந்தருளியிருந்து. அநந்தரம் "பாயுநீர ரங்கந்தன்னுள் பாம்பணைப் பள்ளிகொண்ட மாயனை" மங்களாசாஸநம் பண்ணத் திருவுள்ளமாய் வானமாமலைப் பெருமாள் அநுமதி கொண்டு தமது ஞானபுத்ரரான ராமானுஜப் பிள்ளானுடன் புறப்பட்டருளி [2]"ஸ்ரீதந்விநவ்யநகரே கோதாம் ஸேவிதுமாதராத்| தத்புரஸ்ய ஸமீபேது ந்யவஸத் க்ருஷ்ணஸந்நிதௌ||'' என்கிறபடியே, வில்லிபுத்தூருறைவான்றன் பொன்னடி காண்பதோராசையினால் அங்கேற எழுந்தருளி ஊரருகேயுள்ள கண்ணன் ஸந்நிதியிலெ எழுந்தருளியிருந்தார்.

அப்போது [3]"ப்ரேஷிதம் கோதயா ப்ரேம்ணா ப்ரஸாதம் சிரஸா க்ரஹீத்|'' என்கிறபடியே ஆண்டாளும் ஜீயர்

---

प्राप्तः प्राप्याङ्घ्रिपद्मः परमिति जनता स्संश्रयन्ते स्म वर्यम् ॥

1 गतेचिरेनेहसि संयमीन्द्र श्श्रीरङ्ग मुद्दिश्य पुनः प्रतस्थे।
रामानुजार्येण वरेण पुंसां वत्सान्ववायाब्धिनिशाकरेण ॥

2 श्रीधन्विनव्यनगरे गोदां सेवितु मादरात्।
तत्पुरस्य समीपेतु न्यवस त्कृष्णसन्निधौ ॥

3 प्रेषितं गोदया प्रेम्णा प्रसादं शिरसाऽग्रहीत्।

எழுந்தருளுவதைக் கேட்டு, உடுத்துக்களைந்த பீதகவாடை யும் மார்பணிந்த வனமாலையும் அபயஹஸ்தங்களுமாய் பொற்றட்டிலே அமைப்பித்து அத்தட்டுடன் அடியார் களையும் அநேகம் ஸ்ரீ வைஷ்ணவர்களையும் நியமித்தனுப்ப, அவர்களும் ஸமஸ்த வாத்யங்களுடனும் விருதுகளுடனும் ஜீயர் இருக்குமிடம்வந்து பரிவட்டம் திருமாலை அபயஹஸ் தம் ப்ரஸாதங்களையும் ஸ்வாமிக்கு யதாக்ரமமாக ஸாதிக்க பெற்றுக்கொண்டு ஆண்டாளனுப்பியதும் தம்மதுமான இருவகை வாத்யங்கள் விருதுகளுடனும் அந்த ஸ்ரீவைஷ்ண வர்களுடனும் புறப்பட்டு நகரமேற எழுந்தருளி ஆண்டாள் ஸந்நிதியில் த்வஜஸ்தம்பத்தருகே செல்ல ஆண்டாளும் தாமே எதிர்கொண்டு ஜீயரை யழைக்குமவளாய் திருக்கைத் தலத்திலே ஸ்ரீ சடகோபனையும் அனுப்பியருள, ஜீயர் தண்டம் ஸமர்ப்பித்து சிரஸா வஹித்து உள்ளே எழுந் தருளி ஆண்டாளை "நீளாதுங்கஸ்தநகிரி" என்று தொடங்கி பலவாக அநுஸந்தித்து ஸேவித்து மன்னனுரையும் ஸேவித்துநிற்க, ஆண்டாளும் அர்ச்சகமுகேந அருளப் பாடிட்டருளி பரிவட்டம் திருமாலை தீர்த்தம் சாத்துப்படி அடைக்காய் சடகோபனையும் ஸாதித்து திருத்துழாய் ப்ரஸாதங்களையும் க்ருபை செய்தருள, ஜீயரும் அவைகளை எல்லாம் மஹாப்ரஸாதம் என்று அங்கீகரித்தருளி விடை பெற்றுக்கொண்டு புறப்பட்டு, வடபெருங்கோயிலுடை யானையும் பெரியாழ்வாரையும் மங்களாசாஸநம் செய்தருளி, ஸம்மானிதராய்ப் புறப்பட்டு, [1]"ச்ரீசைலமபஜத் ஸ்ரீமான் மந்திரம் ஸுந்தரஸ்ய ஸ:|" என்கிறபடியே திருமாலிருஞ் சோலையேற எழுந்தருளி, [2]"நூபுராஹ்வநதீமூலே ப்ரதமே நிர்ஜ்ஜரே ததா ||" என்கிறபடியே நூபுர கங்கையிலே

---

[1] श्रीशैलमभजच्छ्रीमान् मन्दिरं सुन्दरस्य सः ।

[2] नूपुराह्वनदीमूले प्रथमे निर्झरे तदा ।

ஶீராதி அநுஷ்டானங்களையும் முடித்துக்கொண்டு, மாலி ருஞ்சோலைநின்ற சுந்தரனையும் மங்களாசாஸநம் பண்ண எழுந்தருளுகையில், [1]"அலங்கார ஸ்தலஸ்தாஸ்தே ஸாலங் காரா: புரோ யயு:|" என்கிறபடியே அலங்கார (அழகர்) ஸ்தலத்திலுள்ளாரனைவரும் அலங்க்ருதர்களாய் வந்து ஸ்வாமியை தண்டன் ஸமர்ப்பித்து மர்யாதை க்ரமத்திலே முன்னேசெல்ல ஸ்வாமியும் பின்னே எழுந்தருளி [2]"லாளிதோ கோபுரத்வாரே சடகோபாகமேந ஸ:" என்கிறபடியே ஸ்வாமி கோபுர வாசலிலே எழுந்தருளினவாறே உள்ளே பெருமாளும் ஜீயரை எதிர்கொண்டழைக்கத் திருவுள்ளமாய் தமக்கு ப்ரதிநிதியாய் ஸ்ரீ சடகோபனைத் திருக்கைத் தலத்தில் எழுந்தருளப்பண்ணும்படி நியமிக்க அடியார்களுமப்படியே எழுந்தருளப் பண்ணிக்கொண்டுவர ஸ்வாமியும் தண்டன் ஸமர்ப்பித்து ஸ்ரீ சடகோபனை சிரஸா வஹித்து உள்ளே எழுந்தருளி "மாலிருஞ்சோலை நின்றானை"யும் மங்களாசாஸநம் செய்துநிற்க, பெருமாளும் தமக்கு அத்யந்தம் ப்ரியபூதரான ஜீயரைக் கடாக்ஷித்து [3]"ஸௌம்ய ஜாமாத்ருமுநிநா துல்யோ பவஸி ஜந்மநா| ஆகதம் வரயோகீந்த்ரம் மந்யே த்வாம் அத்ர தர்சநாத்||" என்கிற படியே நீர் பெரிய ஜீயரோடு துல்யராய் அவதரித்தவராகையாலே உம்மைக் கண்டது அவரைக் கண்டதுபோலுங்காண் என்று அருளிச்செய்து அருளிப்பாடு பரிவட்டம் திருமாலை ப்ரஸாதபர்யந்தமான ஸமஸ்த மர்யாதைகளையும் ஸாதித்து

---

[1] अलङ्कारस्थलस्थास्ते सालङ्काराः पुरो ययुः ।

[2] लालितो गोपुरद्वारे शठकोपागमेन सः ।

[3] सौम्यजामातृमुनिना तुल्यो भवसि जन्मना ।
आगतं वरयोगीन्द्रं मन्ये त्वा मत्र दर्शनात् ॥

க்ருபை செய்தருள, அவைகளை எல்லாம் பெற்றுக்கொண்டு ஸேவித்து அகலகில்லாது மூன்று தினங்கள் எழுந்தருளி யிருந்து, விடைபெற்றுப் புறப்பட்டு பயண கதிகளிலே எழுந்தருளி, பொன்னி சூழர ரங்கத்தைக் கிட்டி, கங்கையிற் புனிதமாய காவிரியிலே நீராடித் திருப்பரிவட்டம் த்வாத சோர்த்தவபுண்ட்ரங்களும் சாத்தி அருளி யதோசிதமான அநுஷ்டாநங்களை அநுஷ்டித்துப் புறப்பட [1]"ஆகதம் முநிவர்யம் ஸ: ச்ருத்வா ரங்கீ ஜகத்ப்ரபு:| ப்ரேஷயாமாஸ சேஷாம்ச மாலிகாத்விதயம் ததா|| ஸ்வஸ்யசா பயஹ ஸ்தௌ த்வௌ ப்ரஸாதம் துலஸீமபி| ஏதத் ஸர்வம் க்ருஹீத்வா து ச்ரேஷ்ட: பூர்ணஸ்ஸஹாநுக:||" என்கிற படியே அங்குக் கோயிலிலே பெரிய பெருமாளும் ஜீயர் எழுந் தருளுவதைக் கேட்டு உத்தமநம்பிக்கு நியமிக்க, அவரும் அவன் மார்பணிந்த வனமாலையும் உடுத்துக்களைந்த பீதக வாடையும் அபயஹஸ்தங்களும் பூவார்கழல்களும் ப்ரஸா தங்களுமாய்க் கொண்டு ஸந்நிதியில் அனைத்துப் பரிகரங்களு டனும் ஸ்ரீவைஷ்ணவர்களுடனும் சத்ர சாமர தாளவ்ருந்தாதி களுடனும் ஸகல வாத்யங்களுடனும் பெருங் கூட்டமாக ஜீயரை எதிர்கொண்டுவர, வானமாமலை ஜீயரும் எதிரே எழுந்தருளுகிற வைஷ்ணவக் குழாங் கண்டு "அரங்கன் மெய்யடியார்களோ நித்யஸூரிகளோ" என்றும் "வண் பொன்னிப்பேராறு போல்வரும் கண்ணநீர்கொண்டு அரங் கன் கோயில் திருமுற்றம் சேறு செய் தொண்டர் சேவடிச் செழுஞ் சேறென்சென்னிக் கணிவன்" என்றும் அநுஸந்

---

[1] आगतं मुनिवर्यं स श्रुत्वा रङ्गी जगत्प्रभुः ।
प्रेषयामास शेषांच मालिकाद्वितयं तथा ॥
स्वस्य चाभयहस्तौ द्वौ प्रसादं तुलसीमपि ।
एतत्सर्वं गृहीत्वा तु श्रेष्ठः पूर्णस्सहानुगः॥

த்து ஸாஷ்டாங்கமாக தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, அவர்களும் பெருமாள் நியமனப்படியே ஜீயருக்குத் திருப்பரிவட்டம் திருமாலை அபயஹஸ்தங்களும் பூவார்கழல்களும் ப்ரஸாதங்களும் ப்ரஸாதிக்கப் பெற்றுக்கொண்டு அவர்களுடன்கூட திருவரங்கநகரேற எழுந்தருளி அங்குள்ள வண்டினமுரலும் சோலைகளையும் திருவீதிகளையும் மாடமாளிகைகளையும் திருக்கோபுரங்களையும் ஸேவித்துக்கொண்டு திருவீதி வலம் வந்து தம்முடைய உத்தமாசார்யரான மணவாளமாமுனிகள் மடத்து வாசலிலே எழுந்தருளி ஸாஷ்டாங்கமாய் தண்டன் ஸமர்ப்பித்து உள்ளே புக்கு மங்களாசாஸநம் செய்தருளி திருமலையாழ்வாரையும் தண்டன் ஸமர்ப்பித்து அங்கே தாம் முன்பு ஏறியருளப்பண்ணிய சித்ரரூபமான ஸ்வாமியின் திருமேனி யழகை யெல்லாம் கண்ணுர ஸேவித்து வாயார வாழ்த்தி பண்டையவை எல்லாம் ஸ்மரித்து நெஞ்சிலே தேக்கிக்கொண்டு ஸ்வாமி பெரிய ஜீயர் பண்டுபோலே முன்னே எழுந்தருளுவதாய் அத்யவஸித்துப் புறப்பட்டு நான்முகன் கோபுரவாசலிலே புகுந்து "தேவீகோதா" இத்யாதிப்படியே ஆண்டாள், உடையவர், ஆழ்வார் இவர்களை அடைவே மங்களாசாஸநம் பண்ணியருளி அநந்தரம் [1]"கலசாம்போதி கந்யாயா: குலசோ லோகவந்திதம்| நிர்மலாதர்சஸங்காசம் ப்ரவிவேச க்ருஹோத்தமம்||" என்கிறபடியே ஸ்ரீரங்கநாயகியாரை மங்களாசாஸநம் பண்ணுவதாக எழுந்தருளி ஸந்நிதி முன்பே சென்று தண்டன் ஸமர்ப்பித்து உள்ளே புக்கு "[2]ரக்ஷகாம் ஸாபராதாநாம் அஹேதுகக்ருபாமயீம்| பரதந்த்ராம்

---

1 कलशांभोधिकन्यायाः कुलशो लोकवन्दितम् ।
निर्मलादर्शसङ्काशं प्रविवेश गृहोत्तमम् ॥

2 रक्षकां सापराधाना महेतुककृपामयीम् ।
परतन्त्रां परं पत्यु रनन्यां चैव वल्लभाम् ॥

பரம் பத்யு: அநந்யாம் சைவ வல்லபாம்'' என்கிறபடியே நிர்ஹேதுக க்ருபையாலே ஸாபராதர்களான சேதநர்களையும் ரக்ஷிக்குமவளாய் எழுந்தருளியிருக்கிற ஸ்ரீரங்கநாய்ச்சியாரையும் ஸேவித்து ''உல்லாஸ பல்லவித'' தொடங்கி ''ஸ்ரீரங்கராஜ மஹிஷீம் ச்ரியமாச்ரயாம:'' என்று அநுஸந்தித்து மங்களாசாஸநம் செய்தருளி, பூர்வாசார்யர்களுடைய ஸ்ரீ ஸூக்திகளை அநுஸந்தித்து நிற்க, நாய்ச்சியாரும் இவரைக் குளிரக் கடாக்ஷித்து [1]''ப்ரியோஸி ரங்கராஜஸ்ய யத்த்வம் மம ச ஸர்வதா'' என்கிறபடியே ''ஜீயரே! நீர் பெரிய பெருமாளுக்கு அத்யந்தம் ப்ரியபூதராகையாலே நமக்கு மப்படியேயாகிறீர்'' என்றருளிச்செய்து அருளிப்பாடு பரிவட்டம் திருமாலை தீர்த்தம் முதலிய ஸகல மர்யாதைகளையும் ஸாதித்து ஸம்மானிக்க, ஜீயரும் பெற்றுக்கொண்டு விடை பெற்று எழுந்தருளி சந்த்ரபுஷ்கரணியிலே தீர்த்த ஸ்வீகாரம் பண்ணியருளி உள்ளே புக்கு ரங்கவிமானத்தையும் ஸேனைமுதலியாரையும் ஸேவித்து [2]''ஸேநேசம் ப்ரணநாமாத ஸோபாந மகமத் தத:| நியோகாத் ரங்கராஜஸ்ய தஸ்யார்ச்சனபரை: ததா|| ஆநீதாம் சடகோபாக்யாம் பாதுகாம் சிரஸா ததத்|'' என்கிறபடியே பூர்வஸோபாநத்தருகே தண்டன் ஸமர்ப்பிக்குமளவிலே உள்ளே நம்பெருமாளும் எதிர் கொண்டழைக்கத் திருவுள்ளமாய் ஸ்ரீசடகோபனையுமெழுந்தருளப்பண்ணி அழைக்கும்படி நியமிக்க அடியார்களும்அப்படியே சடகோபனைத்திருக்கை த்தலத்திலே எழுந்

---

[1] प्रियोसि रङ्गराजस्य यत्त्वं मम च सर्वदा ।

[2] सेनेशं प्रणनामाथ सोपान मगम त्ततः ।
नियोगा द्रङ्गराजस्य तस्या र्चनपरैस्तदा ॥
आनीतां शठकोपाख्यां पादुकां शिरसादधत् ।

தருளப் பண்ணிக்கொண்டுவர ஸ்வாமியும் தண்டன் ஸமர்ப்பித்து சிரஸா வஹித்து உள்ளே எழுந்தருளி த்வாரபாலகர்களை ஸேவித்து அநுமதிகொண்டு உள்ளேபுக்கு [1]"ப்ரணம்யாந்த: ப்ரவிச்யாத ஸுரபிஸ்தம்பமத்யத:| புளகாஞ்சிதகாத்ர: ஸ: ஸச்சாத்ரோ வேத்ரமத்யகாத்||" என்கிறபடியே தண்டன் ஸமர்ப்பித்து உள்ளே எழுந்தருளி ஸ்ரீநிதியைக் கண்டு புளகாஞ்சிதகாத்ரராய் திருமணத்தூணருகே நின்று [2]"ஸ்ரீரங்கராஜ மத்ராக்ஷீத் ரம்யஜாமாதரம் ப்ரபும்" என்கிறபடியே, அரங்கமா கோயில் கொண்ட கரும்பினைக் கண்டு கண்ணிணை களித்து "அமலனாதிப்பிரா"னிற்படியே பாதாதிகேசாந்தமாக அநுபவித்தருளி, "படுத்தபைந்நாகணைப் பள்ளிகொண்டானுக்குப் பல்லாண்டு" என்று பல்லாண்டு பாடி, அநந்தரம்[3]"அபயப்ரதமுத்ராட்யம் ப்ரயோகாரிதரம் ஹரிம்| பாஞ்சஜந்யகதாபாணிம் பீதாம்பரலஸத்கடிம்" என்கிறபடியே திருக்கையிலே பிடித்த திவ்யாயுதங்களும், வைத்தஞ்சலென்ற கையும், கவித்தமுடியும், முகமும், முறுவலும், ஆஸநபத்மத்திலே அழுத்தின திருவடிகளுமாய் நிற்கிற நம்பெருமாளையும் மங்களாசாஸநம் செய்தருளி நிற்க, பெருமாளும் தம்முடைய க்ருபார்த்ர த்ருஷ்டிகளாலே குளிரக் கடாக்ஷித்து [4]"ஸ்ரீமத்வாநமஹாசைலராமாநுஜ

---

1 प्रणम्यान्तःप्रविश्याथ सुरभिस्तम्भमद्ध्यतः ।
पुलकाञ्चित गात्र स्सः सच्छात्त्रो वेत्रमत्यगात् ।

2 श्रीरङ्गराजमद्राक्षी द्रम्यजामातरं प्रभुम ।

3 अभयप्रद मुद्राढ्यं प्रयोगारिधरं हरिम् ।
पाञ्चजन्यगदापाणिं पीतांबरलसत्कटिम् ॥

4 श्रीमद्वानमहाशैलरामानुज महामुने ।

மஹாமுனே| இத்யாமந்த்ரய ததாரங்கீ சேஷாம் பத்வாஸ்ய மூர்த்தநி||"என்கிறபடியே வானமாமலை ஜீயரே! என்றருளிப் பாடு ஸாதித்து பரிவட்டம் திருமாலை தீர்த்தம் சந்தநம் அபய ஹஸ்தம் சடகோபன் திருத்துழாய் ப்ரஸாதங்களையும்ப்ரஸா தித்தருளி [1]"ராமாநுஜமுநேஸ் தஸ்ய தர்சநஸ்தாபநே ரத:| தஸ்யைவஸர்வநிர்வாஹம் குருஷ்வே த்வந்வசாத் ததா||"என் கிறபடியே முன்பு நியமித்தபடியே ராமாநுஜ தர்சநநிர் வாஹகராய் அவருடைய ஸர்வ நிர்வாஹத்தையும் நிர்வஹித் துப்போருமென்று நியமித்தருள, ஸ்வாமியும் மஹாபாக்ய மென்று ஸம்மதித்து நியமனம் பெற்றுப் புறப்பட்டு ப்ரஸா தங்களையும் ஸ்வீகரித்து க்ருதார்த்தராய் [2]"ஸம்பச்யந் நததர்ப்பாஸா வபாஸர்ப்பத் சனைர் பஹி:" என்கிறபடியே பெருமாளை ஸேவித்து நெஞ்சாராதே மெள்ள வெளியே எழுந்தருளி ப்ரதக்ஷிணமாக ஸந்நிதி அழகையெல்லாம் அங்கங்கே ஸேவித்துக் கொண்டு மடமே எழுந்தருளி, [3]"நியோகாத் ரம்யஜாமாது: ஸ்வீக்ருதை: ஸ்வதிசாகஜை:| ரராஜ யோகிராஜோயம் நிதராம் ரங்கமந்திரே|| பூஜிதோ வரதார்யாத்யை: புரே ஸ்ரீரங்கநாமகே| நத்வா ஸ்ரீரங்க நாதம் ஸ தஸ்தௌ வாநாத்ரிஸம்யமீ||" என்கிறபடியே கோயிலண்ணன் முதலானோர்களாலே ஸம்மானிக்கப் பட்ட

---

इत्यामन्त्र्य तदा रङ्गी शेषां बध्वास्य मूर्धनि ॥

1 रामानुजमुने स्तस्य दर्शनस्थापने रतः ।
तस्यैव सर्वनिर्वाहं कुरुष्वेत्यन्वशा त्तदा ॥

2 संपश्यन् नततर्पासा वपासर्प च्छनै र्बहिः ।

3 नियोगा द्रम्यजामातु स्वीकृतै स्स्वदिशागजैः ।
रराज योगिराजोयं नितरां रङ्गमन्दिरे ॥
पूजितो वरदार्याद्यैः पुरे श्रीरङ्गनामके ।
नत्वा श्रीरङ्गनाथं स तस्थौ वानाद्रिसंयमी ॥

வராய் ப்ரதி தினம் பெருமாளை மங்களாசாஸநம் செய்தருளி தேதீப்யமானராய் சிலநாள் கோயிலில் எழுந்தருளியிருக்கும் காலத்திலே [1]"ததஃ ச வரதாசார்ய: ப்ரார்த்தயாமாஸ யோகிநம்| த்ருடபோத ஸமுத்பத்யை புநர்போதய மேதுநா || ரஹஸ்யத்ரயதத்வார்த்தாந் ஸம்ப்ராப்தாந் ஸம்ப்ரதாயத:|" என்கிறபடியே கோயிலண்ணனும் வானமாமலை ஜீயரை ஸேவித்து ரஹஸ்யத்ரயங்களுடைய ஸம்ப்ரதாயார்த்தங்களையெல்லாம் முன்பு ஒருக்கால் அருளிச்செய்த மாத்திரத்திலே த்ருடபோதமில்லாமையாலே அந்த ஸம்ப்ரதாயார்த்தங்களையெல்லாம் புந: சிந்தந ரூபமாய் மறுமுறையும் நன்ருக ஸாதிக்கவேண்டுமென்று ப்ரார்த்திக்க ஸ்வாமி வானமாமலை ஜீயரும், [2]"உத்தரே ரங்கதேசே து சுத்தஸத்வாதிகாந் ப்ரதி| ரஹஸ்யத்ரயதத்வார்த்தாந் வக்ஷ்யாம்யர்த்தித ஏவ தை||" என்கிறபடியே "எறும்பியில் சுத்தஸத்வம் அண்ணு முதலானோர்கள் ப்ரார்த்தித்து இருக்கிருர்கள் ததர்த்தம் த்வரையாகப் போகவேண்டியிருக்கிறது. தேவரீரும் அடியேனுடன் கூட அங்கேற எழுந்தருள" என்று நியமிக்க, அண்ணனும் அப்படியே ஸம்மதப்பட்டு எழுந்தருளினர்,

அநந்தரம் [3]"ததோ முநிஸ் ஸிந்துரசைலநாதம் ஸிஷேவிஷு: தம் வரதம் வரேண்யம்| ஸ்வஸ்தி ப்ரகாமம் ஹ்ருதி

---

[1] ततश्च वरदाचार्यः प्रार्थयामास योगिनम् ।
दृढबोधसमुत्पत्त्यै पुनर्बोधय मेऽधुना ॥
रहस्यत्रय-तत्वार्थान् संप्राप्तान् संप्रदायतः ।

[2] उत्तरे रङ्गदेशे तु शुद्धसत्वादिकान् प्रति ।
रहस्यत्रयतत्वार्थान् वक्ष्या म्यर्थितएव तैः ॥

[3] ततो मुनि स्सिन्धुरशैलनाथं सिषेविषु स्तं वरदं वरेण्यम् ।

காமயாந: காஞ்சீ மகா தஞ்சிதமஞ்சகேஹாம்॥" [1]"வேகவத்யுத்தரே தீரே க்ஷேத்ரே ஸத்யவ்ரதாக்யகே| அஸ்தி காஞ்சீதி விக்யாதா புரீ புண்யவிவர்த்திநீ ॥" என்றும் சொல்லுகிற படியே புண்யவிவர்த்தகமாகச் சொல்லப்பட்ட காஞ்சீநகர மேற எழுந்தருளி தேவப் பெருமாளை மங்களாசாஸநம் செய்யவேணுமென்று புறப்பட்டுப் பயணகதிகளிலே மத்யே மார்க்கம் உள்ள திவ்யதேசங்களையெல்லாம் மங்களாசாஸநம் பண்ணியருளி ஹஸ்திகிரி யேற எழுந்தருளாநிற்க [2]"ப்ரேஷிதம் தேவராஜேந ப்ரஸாதாதிக மாதராத்| சிரஸா ப்ரதிக்ருஹ்யாத ஸந்நிதிம் ப்ராப்ய யோகிராட் ॥" என்கிற படியே அங்கே அப்பாச்சியாரண்ணா முதலானோர்களும் ஸ்வாமி எழுந்தருளுவதைத் தேவப்பெருமாள் ஸந்நிதியில் விண்ணப்பம்செய்து சாத்திக் களைந்ததுகளான பரிவட்டமும் மாலைகளும் அபயஹஸ்தங்களும் ப்ரஸாதங்களும் கொண்டு, சத்ரசாமரதாளவருந்தாதிகளுடனும் ஸகல வாத்யங்களுடனும் ஸந்நிதி அனைத்துப் பரிகரங்களுடனும் ஸ்ரீவைஷ்ணவர்கள் அநேகர் எதிர்கொண்டெழுந்தருள ஸ்வாமியும் தேவப் பெருமாள் ப்ரஸாதமென்று ஸாஷ்டாங்கமாக தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, தேவப் பெருமாள் ஸந்நிதி அடியார்களும் ஜீயருக்கு பரிவட்டம் திருமாலை முதலான ப்ரஸாதங்களையும் யதாக்ரமமாக (அடைவிலே) ஸாதிக்க ஸ்வாமியும் பெற்றுக்கொண்டு அவர்களுடன் கூடவே எழுந்தருளி

---

स्वस्ति प्रकामं हृदिकामयानः काञ्ची मगा दञ्चितमञ्चगेहाम् ॥

1 वेगवत्युत्तरे तीरे क्षेत्रे सत्यव्रताख्यके ।
अस्ति काञ्चीति विख्याता पुरी पुण्यविवर्द्धिनी ॥

2 प्रेषितं देवराजेन प्रसादादिक मादरात् ।
शिरसा प्रतिगृह्याऽथ सन्निधिं प्राप्य योगिराट् ॥

[1]"ஸ்ரீமத்த்வாரவரம் மஹத்ஹி பலிபீடாக்ரயம் பணீந்த்ரஹ்ரதம் கோபீநாம்ரமணம் வராஹவபுஷம் ஸ்ரீ பட்டநாதம் ததா| ஸ்ரீமந்தம் சடவைரிணம் கலிரிபும் ஸ்ரீபக்திஸாரம் முநிம் பூர்ணம் லக்ஷ்மணயோகிநம் முநிவரா நாத்யாநத த்வாதசாந் ‖ ஸ்ரீமந்மஜ்ஜநமண்டபம் ஸரஸிஜாம் ஹேதீச போகீச்வரௌ ராமம் நீலமணிம் மஹாநஸவரம் தார்க்ஷ்யம் ந்ருஸிம்ஹம் ப்ரபும்| ஸேநாந்யம் கரிபூதரம் ததுபரி ஸ்ரீபுண்யகோடிம் ததா தந்மத்யே வரதம் ரமாஸஹசரம் வந்தே ததீயைர் வ்ருதம் ‖ கமலநிவேசிதாங்க்ரிகமலம் கமலாரமணம் கநமணிபூஷண த்யுதி கடாரித காத்ரருசிம்| அபய கதா ஸ¬தர்சன ஸரோருஹசாருகரம் கரிசிகரிசேகரம் கிமபி சேதஸி மே நிததே" என்கிறபடியே, ஸ்ரீமத்த்வாரவரம் என்று கூறியவடைவிலே எல்லாவற்றையும் ஸேவித்தருளி வையமாளிகையிலே எழுந்தருளி, பேரருளாளரைத் திருவடி

---

1 श्रीमद्वारवरं महद्धि बलिपीठाग्र्यं फणीन्द्रह्रदं
गोपीनां रमणं वराहवपुषं श्रीभट्टनाथं तथा ।
श्रीमन्तं शठवैरिणं कलिरिपुं श्रीभक्तिसारम्मुनिं
पूर्णं लक्ष्मणयोगिनं मुनिवरानाद्यानथ द्वादशान् ॥
श्रीमन्मज्जनमण्डपं सरसिजां हेतीश भोगीश्वरौ
रामं नीलमणिं महानसवरं तार्क्ष्यं नृसिंहं प्रभुम् ।
सेनान्यं करिभूधरं तदुपरि श्रीपुण्यकोटिं तथा
तन्मध्ये वरदं रमासहचरं वन्दे तदीयैर्वृतम् ॥
कमलनिवेशिताङ्घ्रिकमलं कमलारमणं
घनमणिभूषणद्युति-कडारितगात्ररुचिम् ।
अभयगदासुदर्शन सरोरुहरुचिरचारुकरं
करिगिरिशेखरं किमपि चेतसि मे निदधे ॥

தொழுது[1] "மங்களம் வேதஸே வேதிமேதிநீக்ருஹமேதிநே|
வரதாய தயா தாம்நே தீரோதாராய மங்களம்॥" இத்யாதி
களாலே மங்களாசாஸநம் பண்ணியிற்க, தேவப்பெருமாளும்
போர வுகந்தருளி அருளிப்பாடிட்டு தீர்த்தம் திருமாலை திருப்
பரிவட்டம் சடகோபன்களேயும் ப்ரஸாதங்களையும் ப்ரஸாதிக்
கப் பெற்றுக்கொண்டு விடைபெற்று [2]"ப்ரணம்ய தம் நீல
மணிப்ரகாசம் பத்மாஸஹாயம் வரதம் நதாநாம்| ராமா
நுஜாராதித பாதபத்மம் ஸம்மாநிதஸ் தேநமடம்
ஜகாம॥" என்றவாறு வெளியே மடமேற வெழுந்
தருளியிருந்து மூன்று தினம் அங்கே மங்களாசாஸ
நம் செய்தருளி நியமனம் பெற்றுக்கொண்டு திருவேங்கட
முடையானை மங்களாசாஸநம் பண்ணத் திருவுள்ளமாய்ப்
புறப்பட்டருளி எழுந்தருளுகையில், [3]"அதா த்வமத்யேது
பிபீலிகாக்யக்ராமே ஸமாகம்ய சதுர்தசார்யா:| வாநாத்ரி
யோகீந்த்ர மசிச்ரயம்ஸ்தே தத்ரார்த்தயந்தோ நிகமாந்த
போதம்॥" என்கிறபடியே எறும்பியின் ஸமீபமாக எழுந்
தருளும்போது அங்கு சதுர்தசார்யர்கள் ஸ்வாமி எழுந்தருளு
வதைக் கேட்டு ஸ்வாமி ஸந்நிதியில் எழுந்தருளி ப்ரார்த்
தித்து ஸ்வாமியை எறும்பி ஏற எழுந்தருளப் பண்ணி
ஸ்வாமி திருவடிகளில் ஆச்ரயித்து பின்பு ஸ்வாமியை
"இங்கு சிலகால மெழுந்தருளியிருந்து அடியோங்களுக்கு
ரஹஸ்யத்ரயார்த்தங்களையும் பகவத் விஷயார்த்தங்களையும்
ப்ரஸாதித்து க்ருபை செய்தருளவேணும்" என்று ப்ரார்த்

---

[1] मङ्गलं वेधसे वेदिमेदिनी गृहमेधिने।
वरदाय दया धाम्ने धीरोदाराय मङ्गलम्॥

[2] प्रणम्य तं नीलमणिप्रकाशं पद्मासहायं वरदं नतानाम्।
रामानुजाराधितपादपद्मं सम्मानित स्तेनमठं जगाम॥

[3] अथा ध्वमध्येतु पिपीलिकाख्यग्रामे समागम्य चतुर्दशार्याः।
वानाद्रियोगीन्द्र मशिश्रयंस्ते तत्रा र्थयन्तो निगमान्तबोधम्॥

திக்க ஸ்வாமியும் ''அப்படியே யாகிறது'' என்று ஸம்மதப் பட்டு [1]''ததா ஸ்ரீ சுத்தஸத்வாண்ண குர்வாத்யஷ்டகஜா அபி| சதுர்தசார்ய புருஷா: வாதூலவரதாதய:|| ஏதே ஸர்வே ஸமாகம்ய'' என்கிறபடியே அப்போது ப்ரார்த்தித்திருந்தவர்களான சுத்தஸத்வம் அண்ணா முதலானாரையும் போளிப்பாக்கம் நாயனார் முதலான சதுர்தசார்யகளையும் கோயிலண்ணன் முதலானார்களையும் கூட வைத்துக்கொண்டு ரஹஸ்யத்ரயார்த்தத்தையும் தொடங்கிச் சாத்தியருளி பகவத் விஷயத்தையும் ஸாதித்துச் சாத்தியருளி இப்படியாக ஸம்வத்ஸர பர்யந்தம் எறும்பியிலே எழுந்தருளியிருந்து சாத்தியானவாறே அவர்களோடு கூடப் புறப்பட்டு [2]''ப்ரஸ்தித: தைர் மஹாபாகை: கடிகாசலமாகத:|'' என்கிறபடியே நீள் சோலை வண்பூங்கடிகையில் தக்கானையும், கடிகைத் தடங்குன்றில் அக்காரக்கனியையும் அடைந்து மங்களாசாஸநம் பண்ணி மூன்று தினம் அங்கே ஸேவித்துப் புறப்பட்டு அங்குள்ளார்களனைவரும் பின்செல்ல எழுந்தருளுகையில் திருவடிவாரமான திருப்பதியில் கோவிந்தப் பெருமாளைத் திருவடிதொழுவதாக எழுந்தருளி முந்துற எம்பெருமானார் ஸந்நிதியிலே அவரை மங்களாசாஸநம் செய்தருளி பிறகு அவருகந்து ப்ரதிஷ்டிப்பதருளின கொவிந்தப் பெருமாளையும் அத்யாதரத்துடனே ''கையினார் சுரிசங்கனலாழியர்'' என்கிற பாட்டின்படியே ஸேவித்தருளி அங்குநின்று கோவிந்தன் தன்னடியார்களான ஸ்ரீ வைஷ்ணவர்களுடன் கூடவே எழுந்தருளி அடிவாரத்திலே எழுந்தருளியிருக்கிற நம்மாழ்வார் முதலான ஆழ்வார்களையும் திருவடித் தொழுது அற்றைக்கு

---

[1] तदा श्रीशुद्धसत्वाण्णगुर्वाद्यष्टगजा अपि ।
चतुर्दशार्यपुरुषा वाधूलवरदादयः ॥
एते सर्वे समागम्य

[2] प्रस्थित स्तै र्महाभागै र्घटिकाचल मागतः ।

அங்கேயே எழுந்தருளியிருந்து அங்குண்டானவர்களையும் க்ருபைபண்ணியருளி பிற்றை நாள் காலையிலே நீராடி நித்ய கர்மாநுஷ்டானங்களையும் முடித்துக்கொண்டு, திலதமுல குக்காய் நின்ற திருவேங்கடத்தைச்சென்று வணங்கி கிட்டி [1]"வைகுண்டஸதநம் கந்தும் ஸோபாநமிவ நிர்மிதம்| வ்ருஷ பாத்ரிம் ஸமாருஹ்ய நாயகஸ்யாந்திகம் கத: ||" என்கிற படியே பரமபதத்துக்குப் படியொழுங்குபோலே இருக்கிற திருமலையிலே ப்ரதிபத்தியுடனே ஏறியருளி, காட்டுச் சிங் கரைத் திருவடிதொழுது தேனூறு பாயும் திருவேங்கடத்தி லுண்டான காறுகளையும் கண்டு களித்துக்கொண்டு வைகுந்த நாட்டுக்கொப்பான வடவேங்கட நாட்டையும் அநுபவித்து "மாலுகந்த ஊர்" அருகே எழுந்தருளி "நன் மணிவண்ணனூர்" என்கிற பாட்டின்படியே அங்குண்டான அபூர்வங்களையெல்லாம் ஆச்சர்யத்துடனே அநுபவித்து "கண்ணன் விண்ணூர்தொழவே" என்கிறபடியே ஊரருகே ஸேவித்துக்கொண்டு நிற்க, [2]"அத்ராந்தரே வேங்கட சைலநாத: ச்ருத்வா(ஆ)கதம் லக்ஷ்மணஸம்யமீந்த்ரம்| ஸ்வஸ் யைவ சேஷாம் வநமாலிகே த்வே கௌசேயகண்டம் பதலாஞ்சிதம்ச [1]கிம்சாபி ஹஸ்தாவபயப்ரதாக்யௌ தத்வா ப்ரஸாதாதிக மாதரேண||" என்கிறபடியே அவ்வளவிலே வேங்கடத்தைப் பதியாக வாழ்ந்தருளும் திருவேங்கடஜீயரும் ஏகாங்கி ஸ்ரீவைஷ்ணவர்களும் ஸந்நிதியில் அனைத்துப் பரி கரங்களும் வானமாமலை ஜீயர் எழுந்தருளுவதைக் கேட்டு அப்பன் ஸந்நிதியிலே விண்ணப்பம்செய்து நியமனத்தின்

---

1 वैकुण्ठसदनं गन्तुं सोपानमिव निर्मितम्।
वृषभाद्रिं समारुह्य नायकस्यान्तिकं गतः॥

2 अत्रान्तरे वेङ्कटशैलनाथ श्श्रुत्वा गतं लक्ष्मणसंयमीन्द्रम्।
स्वस्यैव शेषां वनमालिके द्वे कौशेयखण्डं पदलाञ्छितं च॥
किञ्चापि हस्ता वभयप्रदाख्यौ दत्त्वा प्रसादादिक मादरेण।

படியே திருமாலை திருப்பரிவட்டம் அபயஹஸ்தங்களும் பூவார் கழல்களும் ப்ரஸாதங்களும் கொண்டு ஸகல வாத்யங்களுடனும் அநேகம் ஸ்ரீ வைஷ்ணவர்களுடனும் எழுந்தருள அவர்களை வானமாமலை ராமானுஜ ஜீயரும் ஸேவித்து "எம்பெருமான் பொன்மலைமே லேதேனுமாவேன்" என்றவர்களாகையாலே "இவர்கள் நித்யஸூரிகள்" என்று ஸாஷ்டாங்கமாக தண்டன் ஸமர்ப்பித்து நிற்க, அவர்களும் திருமாலை திருப்பரிவட்டம் முதலானவைகளை ப்ரஸாதிக்க உகந்து பெற்றுக்கொண்டு அவர்களுடன்கூட எழுந்தருளி திருவேங்கட மாநகரில் ப்ரவேசித்து வைகுந்தன் திருவாசல், அவாவறச் சூழ்ந்தான் திருவாசல் என்கிற திருவாசல்களையும் தண்டன் ஸமர்ப்பித்து ப்ரதக்ஷிணமாக எழுந்தருளி திருக்கோனேரியில் நீராடி இராமானுசன் என்கிற திருநந்தவனத்தையும் மற்றுமுண்டான திருநந்தவனத்தையும் திருப்பூமண்டபங்களையும் ஸேவித்து உகந்தருளி க்ஷேத்ராதிபரான ஞானப்பிரானையும் மங்களாசாஸநம்செய்தருளிப்புறப்பட்டு "ஊனேறு செல்வத்தை" அநுஸந்தித்து அங்குண்டான திர்யக் ஸ்தாவர ஜன்மங்களை ப்ரார்த்தித்துக்கொண்டு திருக்கோபுரத்தருகே தண்டன் ஸமர்ப்பித்து உள்ளே புகுந்து நம்பெருமாள் எழுந்தருளியிருந்த அழகிய மணவாளன் திருமண்டபத்தையும் ஸேவித்தருளி அநந்தரம் ஸேவாக்ரமத்தில் அடைவே அத்தாணிப் புளியையும் ஸ்ரீ பலிபீடம் யமுனைத்துறைவன் என்கிற திருப்பூமண்டபம் செண்பகத் திருவாசல் பெரிய திருவடி, திருமடப்பளி, திருமாமணி மண்டபம் திவ்ய விமானம் முதலானவற்றையும் ஸேவித்தருளி' சேனைமுதலியாரையுந் திருவடிதொழுது எம்பெருமானுரையும் ஸேவித்து அநுமதிகொண்டு திருவேங்கடத்தரியையும் ஸேவித்து வென்றுமாலையிட்டான் திருமண்டபத்தே எழுந்தருளி "விடைந்த வேழ்மரங்களு மடங்கவெய்து வேங்கடமடைந்த மாலான" சக்ரவர்த்தித் திருமகனையும் ஸேவித்து குலசேகரன் படியருகே சென்று "அகலகில்லேன்" என்று தொடங்கி

பூர்வவாக்ய ப்ரக்ரியையாலே, "அடிக்கீழமர்ந்து புகுந்து" நின்று ஸேவித்தருளி செங்கமலக் கழலில் படியே பாதாதி கேசாந்தமாக ஸேவித்தருளி திருப்பல்லாண்டை அநுஸந்தித்து [1]"மங்களம் மாநுஷே லோகே வைகுண்ட மதிதிஷ்டதே| சேஷசைலநிவாஸாய ஸ்ரீநிவாஸாய மங்களம்‖" என்று மங்களாசாஸநம் செய்தருளின வளவிலே அப்பனும் போர உகந்தருளி தீர்த்தம் திருமாலை திருப்பரிவட்டம் சடகோபன் ப்ரஸாதங்களும் ஸாதித்துக் குளிரக் கடாக்ஷித்து க்ருபைசெய்தருள ஜீயரும் ப்ரீதிபுரஸ்ஸரமாகப் பெற்றுக் கொண்டு விடைபெற்று வெளியே எழுந்தருள "[2]ஸ்ரீவேங்கடாவாஸ யதீந்த்ஸூரிணா நீத்வா த்ருத ஸ்தத்ர சிரம் ஹ்யவர்த்தத|" என்கிறபடியே திருவேங்கட ஜீயரும் (ரொம்ப) ஸாதரமாக திருமலையிலேயே ஜீயரை எழுந்தருளப்பண்ணி வைத்துக்கொண்டு [3]"சடாரிவாசாம் முநிரேஷ டீகாம் ஸ்ரீவெங்கடாக்யாய ஜகாத ஸர்வாம்|ஸமாப்தமாத்ரே கமநோத்ஸுகோ பூத் தோதாத்ரியோகீ மஹிதோ மஹத்பி:‖" என்கிறபடியே திருவேங்கடஜீயரும் வானமாமலைஜீயரை பகவத்விஷய காலக்ஷேபம் ஸாதிக்கவேணுமென்று ப்ரார்த்திக்க ஸ்வாமி வானமாமலை ஜீயரும் அப்படியே தொடங்கி ஸாதித்துக் கொண்டுவருகையில் காலக்ரமேண சாந்தி (பூர்த்தி) யானவாறே அங்குள்ள மஹான்களாலே பூஜிக்கப்பட்டவராய் அதி ஸந்தோஷத்துடன் எழுந்தருளியிருந்து

---

[1] मङ्गलं मानुषे लोके वैकुण्ठ मधितिष्ठते ।
शेषशैलनिवासाय श्रीनिवासाय मङ्गलम् ॥

[2] श्रीवेङ्कटावास यतीन्द्र सूरिणा
नीत्वा द्दतस्तत्र चिरं ह्यवर्तत ।

[3] शठारिवाचां मुनि रेष टीकां श्रीवेङ्कटाख्याय जगाद सर्वाम् ।
समाप्तमात्रे गमनोत्सुको भूत्तोदाद्रियोगी महितो महद्भिः ॥

ஸாயம் அநுஷ்டானமானவாறே அப்பன் ஸந்நிதிக்கு எழுந்தருளி மங்களாசாஸநம் செய்தருளி விடிந்தவாறே வானமாமலைக் கைங்கர்யங்களுக்காக எழுந்தருளுவதாக விடைபெற்றுக்கொண்டு மடமேற எழுந்தருளினார்.

அநந்தரம் [1]"ஸ்வப்நே ததா ஸ்யாங்ககதா ஸுகந்யா பத்மாநநா பத்மஸமாநவர்ணா | தாதேதி ஸம்போத்ய சுசிஸ்மிதா தம் மாம் த்வம் நயஸ்வே த்யவதத் புரம் தே||" என்கிறபடியே அன்று ராத்திரி வானமாமலை ஜீயருடைய ஸ்வபநத்திலே அப்போதலர்ந்த செந்தாமரைப் பூப்போன்ற திருமுக மண்டலத்தையுடையளாய் அக்கமலத்தின் நிறம் போன்ற திருமேனி காந்தியை உடையளாயிருக்கிற ஒரு சிறு கன்னிகை இவர் மடியிலே எழுந்தருளியிருந்து, செல்வப் பெண்கள் பிதாவினுடைய மடியிலே இருந்துகொண்டு மழலைச் சொற்களாலே பிதாவை ஆநந்திப்பிக்குமாப் போலே இவளும் இவரைப் பிதாவாக அடைந்து இவரை "அண்ணா" என்று பித்ரு சப்தத்தாலே அழைத்தருளி "என்னையுங்கூட வானமாமலைக்கு அழைத்துக்கொண்டு போம்" என்று அதிஸந்துஷ்டையாய் வழக்கடித்துக்கொண்டிருக்கையில் ப்ரபுத்தரானவாறே (ஜீயரும்) இதொரு ஸ்வப்நமிருந்தபடி என்? என்று விஸ்மிதராய் நெஞ்சிலே விசாரித்துக்கொண்டிருக்கப் பின்னும் ஸ்தலத்திலேயுள்ள திருவேங்கட ஜீயர் முதலான ஸ்தல வாஸிகள் எல்லாருடைய ஸ்வப்நத்திலேயும் [2]"நயத்வ மேதேந ஸஹைவ யூயம் மாமித்யவோசத் ஸ்தலவாஸிந: ச || ஸவிஸ்மயா: ஸ்வப்ந மிதம் ப்ரபாதே மித: ஸமேத்யோசுரமும் முநீந்த்ரே || என்கிற

[1] स्वप्ने तदा स्याङ्कगता सुकन्या पद्मानना पद्मसमानवर्णा ।
तातेति संबोध्य शुचिस्मिता तं मां त्वं नयस्वे त्यवद त्पुर न्ते॥

[2] नयध्व मेतेन सहैव यूयं मामित्यवोच त्स्थलवासिनश्च ।
सविस्मया स्वप्न मिदं प्रभाते मिथ स्समेत्यूचु रमुं मुनीन्द्रे॥

படியே நாய்ச்சியார் தாம் எழுந்தருளி "எங்களய்யா வானமாமலை ராமானுஜ ஜீயர், அவர் ஊரேற எழுந்தருளுகிறார். என்னையும் அவருடன்கூட வானமாமலையிலே விட்டுவிடுங்கோள்" என்று நியமித்தருள அவர்களும் விடிவோறை எழுந்து எல்லாரும் கூடி வார்த்தையிலே ஸ்வப்நவ்ருத்தாந்தத்தை நானும் கண்டேன் நானும் கண்டேன் என்று ஒருமிடறாய்க் கலந்துகொண்டு, வானமாமலை ராமானுஜ ஜீயர் ஸந்நிதிக்கு த்வரித்துவர, ஜீயரும் இவர்களிலே திருவேங்கட ஜீயரைக் குறித்து ஸ்வப்நமிருந்தபடியை விண்ணப்பம் செய்ய, திருவேங்கட ஜீயர் முதலானாரும் அத்யாச்சர்யப்பட்டுக்கொண்டு எங்கள் எல்லாருடைய ஸ்வப்நத்திலும் அப்படியே கண்டோமென்று விண்ணப்பம்செய்து [1]"ஸ்ரீவேங்கடேசாய புரா வதாரிதா ஹரிப்ரியா ஸா ப்ருதகாலயேச்வரீ| நிவாரிதா சேஷகிரீசவக்ஷ: ஸ்தலச்ரியா திஷ்டதி ஸுப்ரதிஷ்டா ‖ கந்தாஸி யோகீந்த்ர! ஸஹாநயா த்வம் தோதாத்ரி நாதாய ததஸ்வ பத்நீம் | ச்ரேயாம்ஸி தாஸ்யத்யநிசம் தவைஷா புத்ரீ மிமாம் குர்விதி தே தமூசு:‖" என்கிறபடியே பூர்வ வ்ருத்தம் சொல்லத் தொடங்கினார்கள் என் என்னில்? முற்காலத்திலே வேங்கடத்துறைவார்க்குத் தனிக் கோவில் நாய்ச்சியார் அவதரித்து ஸுப்ரதிஷ்டிதையாயிருக்க திருக்கல்யாண மஹோத்ஸவாரம்பத்திலே அவன் திருமார்பில் அலர்மேல்மங்கையும் பாவியை (வருத்தத்தை) ச்சிந்தித்து

---

1 श्रीवेङ्कटेशाय पुरा वतारिता
हरिप्रिया सा पृथगालयेश्वरी ।
निवारिता शेषगिरीशवक्ष-
स्स्थलश्रिया तिष्ठति सुप्रतिष्ठा ॥

2 गन्तासि योगीन्द्र ! सहानया त्वं तोदाद्रिनाथाय ददस्व पत्नीम् ।
श्रेयांसि दास्य त्यनिशं तवैषा पुत्रीमिमां कुर्वीति ते त मूचुः ॥

தனிக்கோவில் இங்கேவேண்டாமென்று நியமித்தபடியாலே அது முதலாகவே கோவிலும் திருக்கல்யாண மஹோத்ஸவமு மின்றி ஸுபூஜிதையாய் எழுந்தருளியிருக்கிறார்." ராத்திரி அடியோங்கள் ஸ்வப்நத்திலே நாய்ச்சியார் எழுந்தருளித் தமக்கு "வானமாமலை ஜீயர் பிதாவென்றும் தெய்வநாயகன் பர்த்தா" என்றும் அருளிச்செய்து "அவரோடும்கூட வர மங்கையேறப் போகிறோம். நீங்களும் நம்மைப் பின் சென்று விட்டு வாருங்கோள்" என்றருளிச்செய்தார். ஆகை யாலே வேண்டாவென்ற அலர்மேல்மங்கை திருவுள்ள மிது வாயிருந்தது. தேவரீர் புத்ரியான நாய்ச்சியாரை எழுந்தருளப் பண்ணிக்கொண்டு போய் வானமாமலையிலே திருக்கல்யா ணோத்ஸவம் செய்வித்தருள வேணுமென்று விண்ணப்பம் செய்து, இந்த நாய்ச்சியார் அலர்மேல்மங்கை|உறை மார்பன் உகப்பாலே எழுந்தருளுகையாலே தேவரீரே புருஷகாரமாக தெய்வநாயகப் பெருமாள் பஹுவாக ஆத்மலாபங்களைப் பெற்று [1]"ஆத்மலாபாத்பரம்கிஞ்சி தந்யந்நாஸ்தி" என் றிருக்கும்|தேவரீர் திருவுள்ளத்தைப் பூர்ணமாக்கியருளுவர் என்று எல்லாரும் விண்ணப்பம் செய்ய வானமாமலைஜீயரும் இது ஒரு நியமனம் இருந்தபடி! என்று விஸ்மிதராய் அப் பனையும் தண்டன் ஸமர்ப்பித்துத் தனிப் பல்லக்கிலே நாய்ச்சியாரை எழுந்தருளப்பண்ணிக்கொண்டு அங்கிருந்து அர்ச்சகர்களையும் பரிசாரகர்களையும் பின்னும் திருமேனி காப்பாராய் அனேக ஸ்ரீ வைஷ்ணவர்களையும் கூட்டிக் கொண்டு புறப்பட, திருவேங்கட ஜீயர் அநந்தாழ்வார் முதலானோர்களும் பஹுதூரம் வழிவிட எழுந்தருளுகையில் ஜீயருடைய வைபவங்களை யெல்லாம் ஒருவருக்கொருவர் சொல்லி ஆச்சர்யப்பட்டபடி என் என்னில்?

---

1 आत्मलाभात्परंकिञ्चिदन्यन्नास्ति

[1]"ஸ்ரீவிஷ்ணுசித்தோ மிதிலாதிபேந்த்ரோ வைதர்ப்பதே சாதிபதி: ச ஸர்வே| தோதாத்ரியோகி ப்ரவரேண ஸாம்யம் நைவா ப்நுவந்தீ ஹ கதாசநோர்வ்யாம் ||" யாகார்த்தமான கர்ஷண காலத்திலே ஹலமுகத்திலே உத்பூதையான பிராட்டியை "திக்கு நிறைபுகழாள"ன ஜனகராஜன், திருமக ளாய் அபிமானித்துப் பெருமாளுக்கு தாரை வார்த்து உகந் தருளினர். திருநந்தவனம் செய்கையிலே துளஸீமுகத்தில் உத்பூதையான சூடிக்கொடுத்தாளை "மெய்ம்மைப் பெரு வார்த்தை கேட்டிருக்கும்" விஷ்ணுசித்தரும் தமக்குப் புத் திரியாக அபிமானித்து பெரிய பெருமாளுக்குத் தாரை வார்த்து உகந்தருளினர். ஜநககுலஸுந்தரியைப் பெற்ற மிதி லாதிபனும் ஸ்ரீ ருக்மணிப் பிராட்டியைப் பெற்ற விதர்ப்பா திபனும் சூடிக்கொடுத்தாளைப் பெற்ற பெரியாழ்வாரும் இவ ருக்குநேர் ஒவ்வார்கள். எங்ஙனே என்னில், [2]"அத மே க்ருஷத: க்ஷேத்ரம் லாங்கலா துத்திதா மம| க்ஷேத்ரம் சோத யதா லப்தா நாம்நா ஸீதேதி விச்ருதா|| என்கிறபடியே ஹலமு கோத்பூதையான பிராட்டியை ஜனகராஜன் தமக்குப் புத்திரியாக அபிமானித்து நின்று தம்முடைய தீ வேள்வி யில் [3]"ராமம் ஸத்ய பராக்ரமம்" என்ற பெருமாள் வந்து நின்று பெண்ணைத் தாவென்ன ஜநகரும் [4]"வீர்யசுல்கேதி பகவந் நததாமி ஸுதா மஹம் | தேஷாம் ஜிஜ்ஞாஸமானா நாம் வீர்யம் தநுருபாஹ்ருதம் ||" வீர்யசுல்கை யாகையாலே

---

1 श्रीविष्णुचित्तो मिथिलाधिपेन्द्रो वैदर्भदेशाधिपतिश्च सर्वे ।
तोदाद्रियोगिप्रवरेण साम्यं नैवा प्नुवन्तीह कदाचनो र्व्याम् ॥

2 अथ मे कृषतः क्षेत्रं लाङ्गला दुत्थिता मम ।
क्षेत्रं शोधयता लब्धा नाम्ना सीतेति विश्रुता ।

3 रामं सत्यपराक्रमम्

4 वीर्यशुल्केति भगवन्! नददामि सुता महम् ।
तेषां जिज्ञासमानानां वीर्यं धनुरुपाहृतम् ॥

பரீக்ஷியாதே கொடேனென்று மிக்கபெருஞ்சபை நடுவே வில்லிறுக்கக் கண்டு கொடுத்த அஜ்ஞனிறே ஜனகன். விதர்ப்பராஜனோவென்னில் [1]"ச்ருத்வா குணாந் புவநஸுந்தர ச்ருண்வதாம் தே நிர்விச்ய கர்ணவிவரைர் ஹரதோங்கதாபம்| ரூபம் த்ருசாம் த்ருசிமதா மகிலாத்மலாபம் த்வய்யச்யுதாவி சதி சித்த மபத்ரபம் மே||" என்கிறபடியே க்ருஷ்ணாவேசித பாவையான ருக்மிணிப் பிராட்டியை [2]"பந்தூநா மிச்சதாம் தாதும் க்ருஷ்ணாய பகிநீம் ந்ருப:| ததோ நிவார்ய க்ருஷ்ணத்விட் ருக்மீ சைத்ய மமந்யத:||" என்று பந்துக்களெல்லாம் க்ருஷ்ணனுக்குஎன்றிருக்க க்ருஷ்ணத்வேஷியான ருக்மி சைத்யனுக்கு என்ன [3]"ராஜா ஸ குண்டிநபதி: புத்ரஸ்நேஹவசம் கத:| சிசுபாலாய தாம் கந்யாம் தாஸ்யந் கர்மாண்யகாரயத்||" என்று விதர்ப்ப ராஜனும் புத்ர ஸ்நேஹத்தாலே ருக்மிணிப் பிராட்டியை சிசுபாலனுக்கு என்று கண்ணாலங்கோடித்து நின்ற ஆஸுரப்ரக்ருதியானனிறே. பெரியாழ்வாரோவென்னில், மெய்ம்மைப் பெருவார்த்தை கேட்டிருப்பவரானாலும், [4]"ஸ விஷ்ணுசித்தஸ் துலஸீவநாநீம் கநித்ரவக்-

---

[1] श्रुत्वा गुणान् भुवनसुन्दर! शृण्वतां ते
निर्विश्य कर्णविवरै र्हरतो ऽङ्गतापम् ।
रूपं दृशां दृशिमता मखिलात्मलाभं
त्वय्य च्युता विशति चित्त मपत्रपं मे ॥

[2] बन्धूना मिच्छतां दातुं कृष्णाय भगिनीं नृपः ।
ततो निवार्य कृष्णद्विट् रुक्मी चैद्य ममन्यत ॥

[3] राजा स कुण्डिनपतिः पुत्रस्नेहवशं गतः ।
शिशुपालाय तां कन्यां दास्यन् कर्माण्य कारयत् ॥

[4] स विष्णुचित्त स्तुलसीवनानीं-

த்ரேணகநாநி கல்பயந்| சுபே முஹூர்த்தே சுசிமாஸி பல்குனீ ப்ரதீததாரே துளஸீவநாந்தரே ‖ [1]ஜாதாம் புவ:காஞ்சந பால கந்யகாம் பூம்யம்சகாம் வீக்ஷ்ய ஸவிஸ்மயோ பூத் |'' என்கிறபடியே துலஸீஸம்ஸ்காரகாலத்தில் துலஸீ மூலத்திலுத் பூதையான குடிக்கொடுத்தாளை வாரியெடுத்து தாம் தமக்குப் புத்திரியாக அபிமானித்து வளர்த்த ஸ்வாபிமானியான பேராசைக்காரராய் பெரிய பெருமாளுக்குத் தாரை வார்த்து மீண்டார். வானமாமலை ராமானுஜ ஜீயரோ வென்னில்? இப்படியெல்லாமின்றிக்கே [2]"ஸ்ரீ வேங்கடேசாய புராவதாரிதா ஹரிப்ரியா ஸா ப்ருதகாலயேச்வரீ|'' என்று திருவேங்கட முடையான் திருவடிவாரத்திலே உத்பூதையாய்'' [3]"ஸ்வப்நேததாஸ்யாங்கக்தா......புரந்தே'' என்கிறபடியே இவருடைய மடியிலே ஏறி இவரை அய்யர் என்றழைத்து உமக்குப் புத்ரியாகிய என்னை ஊரேற அழைத்துப்போமென்று அத்தலையால் நியமிக்கப்பெற்ற பேறுலே தெய்வ நாயகர்க்கு நித்யதுஷ்டராய் தாரைவார்க்கப்பெற்ற இவ்வேற்றம் ஒருவர்க்கும் இல்லாததிறே'' என்று கொண்டாடிக் கொண்டு ஜீயரை நாய்ச்சியாரோடுங்கூட வழிவிட்டு மீண்டும் ஸ்வஸ்தாநமேறச் சென்றார்கள். அநந்தரம்

---

खनित्रवक्त्रेण घनानि कल्पयन् ।
शुभे मुहूर्ते शुचिमासि फल्गुनी
प्रतीततारे तुलसीवनान्तरे ॥

[1] जातां भुवः काञ्चन बालकन्यकां
भूम्यंशकां वीक्ष्य सविस्मयो भवत् ।

[2] श्रीवेङ्कटेशाय पुरा वतारिता
हरिप्रिया सा पृथगालयेश्वरी ।

[3] स्वप्ने तदास्याङ्कगता . . . . . पुरन्ते ।

வானமாமலை ராமானுஜ ஜீயரும் அத்யுத்ஸாஹ யுக்தராய்க் கொண்டு பெரிய ஆரவாரத்துடன் சத்ரசாமராதிகள் அஷ்டாதச வாத்யங்களுடன் நாய்ச்சியாரை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வருகையில் மத்யேமார்க்கம் க்ராமங்கள் பட்டணத்திலுள்ளார் அனைவரும் இவ்வாச்சர்யம் கேட்டு விஸ்மிதர்களாய் நாய்ச்சியாருக்கு ஸகல சிறப்புகளும் செய்விக்க அவற்றை எல்லாம் ஜீயரும் நாய்ச்சியாருக்குக் கண்டருளப் பண்ணி ஸ்ரீ வைஷ்ணவர்களுக்கு ததீயாராதனமும் செய்வித்துக்கொண்டு [1]"ஏவம்ப்ரகாரம் பதி திவ்யதேசாந் ஸம்ஸேவ்ய ஸர்வா நத காரிஸூநோ:| திவ்யே புரே மாநித ஏவ தேந ஸௌம்யோபயந்தேவ புந: ப்ரதஸ்தே ||" என்கிறபடியே மத்யேமார்க்கமுள்ள திவ்யதேசங்களை யெல்லாம் மங்களா சாஸநம் பண்ணிக்கொண்டு ஆழ்வாரையும் ஸேவித்து ஸம்மாநிதராய், [2]"புரம் ப்ரவிஷ்டோ வரமங்கநாம்நீம் அகாரயத் பத்ரமஹோத்ஸவம் ஸ:| ஸ்ரீதேவநாதஸ்ய ச தத்ப்ரியாயா: ப்ரியம்கரோ லோககுருர் யதீந்த்ர:||" என்கிறபடியே ப்ரயாண கதிகளிலே எழுந்தருளி சிரீவரமங்கலநகர் ஏற வெழுந்தருளி ஜீயரும் "நாளைவதுவைமண மென்று நாளிட்டு," ஸுபூஜிதையாய் மடத்திலே எழுந்தருளப் பண்ணிவைத்துப் போந்திருந்தார். நாய்ச்சியாரும் தமக்கு பித்ரு க்ருஹமான மடத்திலே விண்ணுற நீண்டடிதாவியமைந்தனை விரும்பியிருக்க ஜீயரும் தெய்வநாயகனை மங்களாசாஸநம் செய்தருளி "விவாஹமஹோத்ஸவம் கொண்டருளவேணும்" என்று ப்ரார்த்தித்து நியமனம்

---

[1] एवंप्रकारं पथि दिव्यदेशान् संसेव्य सर्वा नथ कारिसूनोः।
दिव्ये पुरे मानितएव तेन सौम्योपयन्तेव पुनः प्रतस्थे॥

[2] पुरं प्रविष्टो वरमङ्गनाम्नी मकारय द्भद्रमहोत्सवं सः।
श्रीदेवनाथस्यच तत्प्रियायाः प्रियङ्करो लोकगुरु र्यतीन्द्रः॥

பெற்று, நாடுமூருமறிய நாளைவதுவை மணமென்று நாளிட்டு பாளைகமுகு பரிசுடைப் பந்தல்களும் புரமெங்கும் தோரணமும் (நாட்டி) அலங்கரித்து, துமிலமெழப் பறை கொட்டி, பெருப் பெருத்த கண்ணுலங் கோடித்து ஜீயரும் நாய்ச்சியாரை யலங்கரிப்பவராய் பட்டுச் சேலைகளு முதறி யுடுத்து பருத்த செங்கழுநீர் மாலையும் திருநுதல் கஸ்தூரித் திருநாமமும் சாத்தியருளி மையிட்டு குங்குமம் அப்பி குளிர் சாந்தம் மட்டித்து சிலம்பார்க்க சீரார்வளையொலிப்ப அலங் கரித்து அன்னமென்னடையாய் எழுந்தருளப் பண்ணுவித் துக்கொண்டு, முத்துடைத் தாமநிரை தாழ்ந்த பந்தர்க்கீழ், எழுந்தருளியிருக்கும் தெய்வநாயகன் முன்பே சென்று மந்திரக் கோடியுடுத்து மணமாலை சூட்டி, மைத்துனன் நம்பி மதுசூதன்வந்து கைத்தலம்பற்றி மத்தளங்கொட்டி வரிசங்கம் நின்றூத பெருப்பெருத்த கண்ணுலஞ் செய்த ருளி முந்நூற்றறுபதுகலம் அமுதுபடியும் அறுபதுகலம் பருப்பமுதும் அதற்குத் தக்க உபஹார (உபகரண) த்ரவ்யங் களும் நிரவதிகமான பட்டுவஸ்த்ராபரணங்களும் கோ கஜ அச்வ தாஸ தாஸீவர்க்கங்களும் சீர் ஸமர்ப்பித்து வாரணமா யிரஞ் சூழ, மங்கல வீதி வலஞ்செய்து, மணநீரிட்டு கதி ரொளி தீபம் கலசமுடனேந்தி சதிரிளமங்கையர் தாம் வலம் வந்துநிற்க, இந்திரனுள்ளிட்ட தேவர் குழாந்தொழ, வாய்நல் லார் நல்லமறையோதி மந்திரத்தால் காப்பிட, உள்ளேயெழுந் தருளப் பண்ணுவிக்க, இப்படித் தெய்வநாயகனுக்கும் ஸ்ரீவர மங்கை நாய்ச்சியாருக்கும் பெருப்பெருத்த கண்ணுலஞ் செய் தருள அநந்தரம் [1] "ஸ்ரீதேவநாதோ வரமங்ககாக்யாம் ஸம்ப்ராப்ய நித்யம் வவ்ருதேஹி பத்நீம்| வாநாத்ரியோகீ தநயாபிமாநாத் தான்யைர் ஜநைர் சிஷ்யகணை: ச யுக்த:|

---

1 श्रीदेवनाथो वरमङ्गकाख्यां संप्राप्य नित्यं ववृधेहि पत्नीम्।
वानाद्रियोगी तनयाभिमाना द्धान्यै र्जनै श्शिष्यगणैश्च युक्तः॥

வாநம் ஸமாரப்ய மஹாவிமானம் தேவ்யா மஹாமண்டப மர்த்தமத்யம்| மஹாவகாசோந்நத மண்டபம் ச ஸமார சய்யா யமசோபதார்ய:॥'' என்கிறபடியே தெய்வநாயகப் பெருமாளும் ஸ்ரீவரமங்கை நாய்ச்சியாரைப் பத்னியாக அடைந்து நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம் வத்ஸரோத்ஸவங்களாலே அபிவ்ருத்தராய் தேதீப்யமான ராய் எழுந்தருளியிருந்தார்.

வானமாமலை ராமானுஜ ஜீயரும் இப்படி வரமங்கை விவாஹ மஹோத்ஸவம் செய்தருளி ஸ்ரீவரமங்கை நாய்ச்சியார் பிதாவாக அபிமானித்தபடியாலே [1]''யஸ்யாபத்ய மஹோ! நித்யம் பத்மா ஸத்மநி மோததே| வாநாசலமுநே: துல்யோ கோ நாம ஜகதீதலே॥'' என்கிறபடியே ஸ்வதுல்ய புரு ஷாந்தர ரஹிதராய் க்ஷீரார்ணவராஜனைப் போலேயும் ஸ்ரீ ஜநகராஜனைப்போலேயும் பெரியாழ்வாரைப் போலேயும் பெருமாள் தமக்கு ச்வசுரரென்று அபிமானிக்கப்பெற்று பஹுவாக தான்யங்களும் தனங்களும் சிஷ்ய ஸம்பத்து களும் அபிவ்ருத்தமாகப் பெற்றும் இவையித்தனையாலும் தத்கைங்கர்யைக நிரதராய் மங்களாசாஸநம் பண்ணிப் போந் திருந்து ஸ்ரீவரமங்கை நாய்ச்சியாருக்கு தனிக் கோவில் விமானம் அர்த்தமண்டபம் மஹாமண்டபங்களையும் பஹு விசாலமாகக் கட்டியருளி ப்ரதிஷ்டிப்பித்தருளினர். அநந் தரம் [2]''ஸ்ரீமாந்வாநாத்ரியோகீந்த்ர: குருங்காநகரே மஹாந்| கோபுரம் சோந்நதம் ஸாலம் கைசிகோத்ஸவ

---

वानं समारभ्य महाविमानं देव्या महामण्डप मर्धमध्यम् ।
महावकाशोन्नतमण्डपंच समारचय्या य मशोभतार्यः ॥

[1] यस्यापत्य महो नित्यं पद्मा सद्मनि मोदते ।
वानाचलमुने स्तुल्यः कोनाम जगतीतले ॥

[2] श्रीमान् वानाद्रियोगीन्द्रः कुरुङ्गानगरे महान् ।

மண்டபம்| பூர்ணஸ்ய பூஷணாந் யாசு கிரீடாதீநிசா கரோத்||
அந்யாம்ச்ச பஹுசோ யோகீ மண்டபாதீந நுத்தமாந்||"
என்கிறபடியே (இப்படி) கைங்கர்ய ஸ்ரீயாலே விளங்கா நின்றுள்ள வானமாமலை ராமாநுஜ ஜீயரும் திருக்குறுங்குடியில் நம்பிக்கு கிரீடம் முதலான திருவாபரணங்களையும் பண்ணிச் சாத்தியருளி கோபுரங்களையும் மதிள்களையும் கட்டிவைத்து கைசிகோத்ஸவ மஹா மண்டபத்தையும் கட்டி ப்ரதிஷ்டிப்பித்தருளி பின்னும் நம்பிக்கு அநேக மண்டபங்களையும் கட்டிவைத்து கைங்கர்ய ஸ்ரீயோடே வாழ்ந்திருக்கும் காலையிலே, [2] "காசித் ஸாத்வீ ஸ்ரீநகர்யா: ப்ரயாதா ப்ராப்யௌ பாதௌசா பிவந்த்யா வதஸ்தே| தஸ்யா வாக்யவ்ராத சைலீம் நிசம்ய ஸந்துஷ்டோ தாத் விஷ்ணுலோகம் ஸ தஸ்யை||" என்கிறபடியே ஒரு நாள் வானமாமலை ஜீயரும் சேற்றுத் தாமரையிலே நீராடி யதோசிதமான அநுஷ்டானங்களையும் செய்தருளாநிற்க அப்போது திருவடியில் ஸம்பந்தமுள்ள சின்னியம்மாள் வந்து ஜீயரை தண்டம் ஸமர்ப்பிக்க, ஜீயரும் பெண்ணே உங்கள் தேசமேது, நித்யவாஸமேது, நாடேது என்ன, திருவழுதிவள நாடென்ன, வீடு ஏதென்ன, பண்டுடையான் வீடு என்ன, குலமேதென்ன, அச்யுதகுலம் என்ன, வேதமேதென்ன, த்ராவிட வேதமென்ன, ஸூத்ரமேதென்ன, ராமா

---

गोपुरं चोन्नतं सालं कैशिकोत्सवमण्डपम् ॥
पूर्णस्य भूषणान्याशु किरीटादीनि चाकरोत् ।
अन्यांश्च बहुशो योगी मण्डपादीननुत्तमान् ॥

1 काचित्साध्वी श्रीनगर्याः प्रयाता
प्राप्यौ पादौचा भिवन्द्य प्रतस्थे ।
तस्या वाक्यव्रातशैलीं निशम्य
सन्तुष्टोऽदाद्विष्णुलोकं स तस्यै ॥

னுஜஸூத்ரமென்ன, காரிகை ஏதென்ன, பரகாலகாரிகை யென்ன, குடி ஏதென்ன, அஞ்சுகுடியென்ன, பந்துக்கள் ஆர் என்ன, ஆத்மபந்துக்களென்ன, உறவு ஆர் என்ன, ஒட்ட உணர்ந்தவரென்ன, உற்ருர் ஆரென்ன, உற்றதுமுன்னடியா ரென்ன, தகப்பனுர் ஆரென்ன, தெய்வநாயகன் என்ன, தாயார் ஆரென்ன, ஸ்ரீவரமங்கையென்ன, புக்கவிடம்எவவி மென்ன, வானமாமலை என்ன, பர்த்தா ஆரென்ன வரமங்கை முனிவனென்ன, மாமனுர் ஆரென்ன, காந்தோபயந்தா வென்ன, உத்யோகம் ஏதென்ன, பாகவதகைங்கர்யமென்ன, அத்தால் ப்ரயோஜநமேதென்ன அதுவேப்ரயோஜன மென்ன, அதிகாரமேதென்ன, ஸர்வாதிகாரமென்ன, நிஷ் டையேதென்ன, பஞ்சமோபாய நிஷ்டையென்ன, உபாயமே தென்ன, சரமோபாயமென்ன, அபிமானமேதென்ன, பாக வதாபிமானமென்ன, ப்ரார்த்தனையேதென்ன, கைங்கர்ய ப்ராத்தனை என்ருள். வானமாமலை ஜீயரும் அந்த அம்மையா ருடைய அத்யவஸாயத்திற்குத் திருவுள்ள முகந்து பரமபதம் ப்ரஸாதித்தருளுர் என்று ப்ரஸித்தமிறே.

அநந்தரம் ஒரு காலவிசேஷத்திலே [1]"ராமாநுஜார்யோ யதிராஜப்ருத்ய: வஸந் விலோக்யா பிகதாம் ஸுபூஷாம்। அநாதராதாஹ வசஸ் ஸ்வபார்யாம் ஸீதாம் யதா தாசரதிர் வ்யதாக்ருத்। நபூஷணம் தேவரவர்ணிநீதம் சீலம் ஹி ஸர்வத்ர

---

1 रामानुजार्यो यतिराजभृत्यो
वसन् विलोक्या भिगतां सुभूषाम् ।
अनादरा दाह वच स्वभार्यां
सीतां यथा दाशरथि र्व्यथाकृत् ॥
न भूषणं ते वरवर्णिनी दं

பதிவ்ரதானாம்|| இத்யுக்த மாத்ரே த்வவமுச்ய ஸர்வம் ஸமார்பயத் காந்தஹிதை ஷிணீ ஸா | தத் ஸர்வமாதாய ரமாம் விதாய வானாசலாதீச புஜாந்தரார்ஹாம் | ஸமர்ப்பயாமாஸ வதூஸமேதோ குரோர்நியோகாத கரோத்ச பத்ரம் ||'' என்கிறபடியே வானமாமாலை ஜீயருடைய அந்தரங்க சிஷ்யரான ராமானுஜன் பிள்ளையும் தம்முடைய தேவிகள் திவ்யாபரண பூஷிதையாய் எதிரே வரக் கண்டு [1] "ப்ராப்தசாரித்ரஸந்தேஹா மமப்ரதிமுகே ஸ்திதா | தீபோ நேத்ராதுரஸ்யேவ ப்ரதிகூலாஸி மே த்ருடம்||'' என் முன்னே நிற்கிற உன்னைப் பார்க்க சரிதத்தில் ஸந்தேஹமுண்டாகாநின்றது. நேத்ரரோகிக்கு தீபதர்சனம் வ்யதாகரமாமாப்போலே இருக்கிறது கண்களுக்கு'' என்று பஹுவாக பிராட்டியை அநாதரித்துச் சொன்ன பெருமாளைப் போலே இவரும் இது பதிவ்ரதைகளான ஸ்த்ரீகளுக்கு பூஷணமன்று, சாரித்ர ஸந்தேஹமுண்டாகிறது; சீலமன்றோ பதிவ்ரதைகளுக்கு பூஷணம்'' என்று பலவாக அநாதரித்து வார்த்தைகளைச் சொல்ல, மஹாஸாத்வியான அவருடைய தேவிகளும், பாவமறிந்து ஆபரணங்களைக் கழற்றி, பர்த்ருஹிதத்தையே

---

शीलं हि सर्वत्र पतिव्रतानाम् ।
इत्युक्तमात्रे त्ववमुच्य सर्वं
समार्पयत्कान्तहितैषिणी सा ॥
तत्सर्वमादाय रमां विधाय
वानाचलाधीश भुजान्तरार्हाम् ।
समर्पयामास वधूसमेतो
गुरोर्नियोगादकरोच्च भद्रम् ॥

[1] प्राप्तचारित्रसंदेहा मम प्रतिमुखे स्थिता ।
दीपो नेत्रातुरस्येव प्रतिकूलासि मे दृढम्॥

இச்சித்தவளாகையாலே அவர் கையிலே ஸமர்ப்பித்து அதி ஸந்துஷ்டையாயிருந்தாள். ராமானுஜம்பிள்ளையும் அதை எல்லாம் வாங்கி வானமாமலைப் பெருமாளுக்கு திருமார்பில் சாத்திக்கொள்ளும்படி மஹாலக்ஷ்மீ பதக்கமாகப் பண்ணி ஸ்வாமி ஸந்நிதியிலே ஸமர்ப்பித்து ஸ்வாமி நியமனத்தாலே ப்ரதிஷ்டை பண்ணுவித்து, பெருமாள் திருமேனியிலே சாத்தியருளி பத்நீஸமேதராய்ப் பெருமாளை மங்களாசாஸநம் பண்ணினார். வானமாமலை ஜீயரும் இவர் அத்யவஸாயத்துக்கு உகந்து இவருக்குத் திருவாராதனமாக உபய நாய்ச்சிமாருடன் தேவப்பெருமாளை ப்ரஸாதித்து ஆசார்யசிங்ஹாத்தையும் க்ருபைசெய்தருளினார்.

அநந்தரம் ராமானுஜம் பிள்ளையும் ஆசார்யாநுமதி கொண்டு திருநகரி ஏற எழுந்தருளி ஆழ்வார் க்ருபைக்கு ப்ரதம பாத்ரபூதராய்க் கொண்டு அநேகம் ஆச்ரிதர்களுக்கு பகவத் விஷயத்தை ப்ரஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கையில் ஒரு நாள் இவருடைய தேவிகளும் புத்ரார்த்தினியாய் ஆழ்வாரை ஸேவிக்கப்புக ஆழ்வாரும் அப்படியே க்ருபை செய்தருள ஆழ்வார் க்ருபையாலே மஹாஸாத்விகரான புத்ரனை அடைந்தாள். ராமானுசம் பிள்ளையும் ஸ்வாசார்யரின் திருநாமத்தைச் சாத்தி அலங்கரித்தருளினார்.

அநந்தரம் [1]"ஏவம் வாநாத்ரியோகீ சுபகுணஜலதி: சுத்த சாரித்ரசாலீ ஸ்ரீமல்லோகார்யஸூக்தீ: வரவரமுநிராட்வ்யாக்யயா ஸம்விவ்ருண்வந்| நித்யம் த்ரய்யந்தநிஷ்டைரகணிதவிபவை: சாத்ரஸங்கைஸ் ஸமேத: ஸ்ரீமத்ராமாநுஜீயம் மதம நிபுண: ஸ்தாபயாந: ஸமிந்தே||"

---

1 एवं वानाद्रियोगी शुभगुणजलधि श्शुद्धचारित्रशाली
श्रीमल्लोकार्यसूक्ती र्वरवरमुनिराड्व्याख्यया संविवृण्वन् ।
नित्यं त्रय्यन्तनिष्ठै रगणितविभवै श्छात्रसङ्घै स्समेत
श्श्रीमद्रामानुजीय म्मतमतिनिपुण स्स्थापयान स्समिन्धे ॥

என்கிறபடியே வானமாமலை ராமாநுஜ ஜீயரும் ஸ்வாசார்ய கடாக்ஷத்தாலே ஞானங் கனிந்து நலங்கொண்டு ஆஜாநுசுத்தராய் மஹாவைராக்யசாலியாய் [1] "த்ருணீக்ருதவிரிஞ்சாதி நிரங்குசவிபூதய:| ராமானுஜ பதாம்போஜ ஸமாச்ரயணசாலிந:||" என்கிறபடியே த்ருணீக்ருத விரிஞ்சாதிகளையுடையராய் விலக்ஷண ப்ரமாண-ப்ரமேய-ப்ரமாதாக்களிடத்திலே விசேஷ ப்ரதிபத்தியையுடையராய் "அடியாரடியார் தமக்கு, அடியாரடியார் தம்மடியாரடியோங்கள்" என்று பூர்ணத்யவஸாயத்தை உடையராய் "ஸ்ரீவசன பூஷணத்தின் செம்பொருளைச் சிந்தைதன்னால் தேறிலுமாம் வாய்கொண்டு செப்பிலுமாம் ஆரியர்காள் எந்தமக்கு நாளுமினிதாக நின்றது" என்கிற ஸ்வாசார்யருடைய அத்யவஸாயங்களெல்லாம் அவருடைய க்ருபாதிசயத்தாலே, பித்ருதனமெல்லாம் பூர்ணமாக அபிமதபுத்ரன் கைபுகுருமாபோலே கைபுகுந்து, ததத்யவஸாய பூர்த்தியுடையராய் பூர்வாசார்யர்களுடைய வசநாநுஷ்டானங்களையெல்லாம் தம்முடைய உக்த்ய நுஷ்டானங்களாலே ப்ரகாசிப்பித்துக்கொண்டு ஸ்ரீரங்கஸ்ரீக்கு மங்களதீபம்போலே எழுந்தருளியிருந்த மணவாளமாமுனிகளுடைய உக்த்யநுஷ்டானங்களையே தம்முடைய உக்த்ய நுஷ்டாநங்களாலே ப்ரகாசிப்பிக்குமவராய் [2] "பரேத்யு: பச்சிமே யாமே யாமிந்யா: ஸமுபஸ்திதே| ப்ரபுத்ய சரணம் கத்வா பராம் குருபரம்பராம்|| த்யாத்வா ரஹஸ்ய த்ரிதயம் தத்வயாதாத்ம்யதர்ப்

---

1 तृणीकृतविरिञ्चादि निरङ्कुशविभूतयः ।
रामानुज पदांभोज समाश्रयणशालिनः ॥

परेद्युः पश्चिमे यामे यामिन्या स्समुपस्थिते ।
प्रबुद्ध्य शरणं गत्वा परां गुरुपरंपराम् ॥
ध्यात्वा रहस्यत्रितयं तत्वयाथात्म्यदर्पणम् ।

பணம் | பரவ்யூஹாதிகாந் பத்யு: ப்ரகாராந் ப்ரணிதாயச||'' என்கிறபடியே ''அஸ்மத்குருப்யோநம:'' என்று தொடங்கி வாக்கிய குருபரம்பரா நுஸந்தானம் பண்ணி சரணம் புகுந்து ஆத்மஸ்வரூப யாதாத்ம்ய ப்ரகாசகமான ரஹஸ்ய த்ரயார்த்தங்களையும், பின்பு ''ஸத்ஸங்காத்'' தொடங்கி அர்ச்சிராதியையும் த்யானித்து, பரஸ்வரூபத்தையும் த்யானித்து வ்யூஹ சிந்தநம் பண்ணுமவராய் அநுஸந்தான பூர்வமாகச் சிந்தித்து வாஸுதேவஸங்கர்-ஷண-ப்ரத்யும்ந-அநிருத்த - சிந்தநம் பண்ணி சரணம் புக்கு அநந்தரம் விபவாந்தர்யாம் யர்ச்சா ரூபங்களையும் சிந்தித்து ஆசார்யஸ்வரூபம் சிந்திப்பாராய் ''ஸ்ரீஸ்தநாபரணம்தேஜ:'' தொடங்கி ஸ்வாசார்ய பர்யந்த மநுஸந்தித்து [1]''தத: ப்ரத்யுஷஸி ஸ்நாத்வா க்ருத்வா பௌர்வாஹ்ணிகீ: க்ரியா:| யதீந்த்ரசரணத்வந்த்வ ப்ரவணேநைவ சேதஸா || அத ரங்கநிதிம் ஸம்யக பிகம்ய நிஜம் ப்ரபும்| ஸ்ரீநிதாநம் சநை: தஸ்ய சோதயித்வா பதத்வயம் ||'' இத்யாதிப்படியே உஷ: காலத்திலே நீராடி கால்யங்களையும் யதோக்தமாய் அநுஷ்டித்துக்கொண்டு ஸ்வாசார்யரான பெரிய ஜீயர் திருவடிகளை அநந்ய சித்தராய் த்யானித்துக்கொண்டு அரங்கநகரப்பன் ஸந்நிதி ஏற எழுந்தருளி தண்டன் ஸமர்ப்பித்து காலோசிதமாகத் திருவடி விளக்கித் திருவாராதநம் கண்டருளப் பண்ணி ஸ்ரீபாததீர்த்தம் ஸ்வீகரித்து திருமுன்பே எழுந்தருளியிருந்து திருவடிகளிலே அத்யந்தம் ப்ரவணர்களான சிஷ்யர்களாலே ஸேவிக்கப்பட்டவராய்க்கொண்டு அர்த்தித்தவர்களுக்கு பஞ்சஸம்ஸ்காரங்களை

---

परव्यूहादिकान् पत्युः प्रकारान् प्रणिधायच ॥

[1] ततः प्रत्युषसि स्नात्वा कृत्वा पौर्वाह्णिकीः क्रियाः ।
यतीन्द्रचरणद्वन्द्व-प्रवणेनैव चेतसा ॥
अथ रङ्गनिधिं सम्यगभिगम्य निजं प्रभुम् ।
श्रीनिधानं शनैस्तस्य शोधयित्वा पदद्वयम् ॥

யும் தம்முடைய பரம க்ருபையாலே பூர்ண கடாக்ஷம்செய்து ஸாதித்தருளி [1]"தத: ஸார்த்தம் விநிர்கத்ய ப்ருத்யைர் நித்யாநபாயிபி:| ஸ்ரீரங்கமங்களம் த்ரஷ்டும் புருஷம் புஜகே சயம்||" இத்யாதி பெரிய ஜீயரநுஷ்டானப்படியே இவரும் அநேக சிஷ்யர்களாலே ஸேவிக்கப் பட்டவராய்க் கொண்டு மடத்தில் நின்றும் புறப்பட்டருளி தெய்வநாயகன் ஸந்நிதி ஏற எழுந்தருளி "தேவீகோதா" இத்யாதி ஸ்வாசார்யாநுஷ்டானம்போலே மணவாளமாமுனிகள் எம்பெருமானார் மற்றுமுள்ள ஆழ்வார்களையும் அடைவிலே மங்களாசாஸநம் செய்தருளி உள்ளே புக்கு ஸ்ரீவரமங்கையையும் தெய்வநாயகனையும் [2]"சந்த்ரஸூர்யாவுபௌ பார்ச்வே சாமரக்ராஹிணீத்வயீ| மார்க்கண்டேயோ ப்ருகு: தார்க்ஷ்ய: லக்ஷ்மீ: ஸேநாபதிர் மஹீ| ஸம்யுக்த: தை: ச ஸித்தார்த்தை: ஏகபீடாஸநே ஸ்தித:||" என்கிறபடியே ஏகாதச மூர்த்திகளில் ப்ரதானராய் எழுந்தருளியிருக்கிற வானமாமலைப் பெருமானையும் மங்களாசாஸநம் செய்தருளி [3]"மங்களாசாஸநம் க்ருத்வா தத்ர தத்ர யதோசிதம்| தாம்ந ஸ்தஸ்மாத் விநிஷ்க்ரம்ய ப்ரவிச்ய ஸ்வம் நிகேதநம்||" என்கிறபடியே வெளியே புறப்பட்டு மடமேற எழுந்தருளி ஸ்வாசார்யன் ஸ்தானத்

---

[1] तत स्साधं विनिर्गत्य भृत्यै र्नित्यानपायिभिः ।
श्रीरङ्गमङ्गलं द्रष्टुं पुरुषं भुजगेशयम् ॥

[2] चन्द्रसूर्याबुभौ पार्श्वे चामरग्राहिणीद्वयी ।
मार्कण्डेयो भृगुस्तार्क्ष्यो लक्ष्मी स्सेनापति र्मही ॥
संयुक्त स्तैश्च सिद्धार्थै रेकपीठासने स्थितः ।

[3] मङ्गलाशासनं कृत्वा तत्र तत्र यथोचितम् ।
धाम्न स्तस्मा द्विनिष्क्रम्य प्रविश्य स्वं निकेतनम् ॥

திலே திருவடிவாரத்தில் எழுந்தருளியிருந்து [1]"தத்வம் திவ்ய ப்ரபந்தாநாம் ஸாரம் ஸம்ஸாரவைரிணம்| ஸரஸம் ஸரஹஸ்யாநாம் வ்யாசக்ஷாணம் நமாமி தம்‖ தத: ஸ்வ சரணம்போஜ ஸ்பர்சஸம்பந்நஸௌரபை:| பாவநைரர்த்திந: தீர்த்தை: பாவயந்தம் பஜாமி தம்‖ ஆராத்ய ஸ்ரீநிதிம் பச்சாத நுயாகம் விதாயச|" என்கிற ஸ்வாசார்யனுடைய அநுஷ்டானத்தின்படியே இவரும் [2]"வ்யாக்யா யஸ்ய விதக்தஸூரிபரிஷச் சித்தாபஹார க்ஷமா" என்று ஸர்வஜ்ஞர்கள் இவரைக் கொண்டாடினபடியே மஹாவித்வானும் ஆச்சர்யப்படும்படி காலக்ஷேப கோஷ்டியிலே பகவத் விஷயார்த்தங்களை சப்த ரஸம், அர்த்த ரஸம், பாவ ரஸங்களுடன் பெண்ணும் பேதையும் அறியும்படியும் [3]"யத்கோஷ்டீஸவிதஸ்திதா: ச சகுநா: தத்வம் பரம் சாச்வதம் ஜ்யோதிர் வேதரஹஸ்யஸாரபடிதம் நாராயண: ஸ்ரீபதி:| கிஞ்சாந்யே சதுராநநாதிவிபுதா : தச்சேஷபூதா இதி வ்யாகுர்வந்தி பரஸ்பரம் யதிவரம் ராமாநுஜம் தம் பஜே‖" என்று ஜீயருடைய

---

[1] तत्वं दिव्यप्रबन्धानां सारं संसारवैरिणाम् ।
सरसं सरहस्यानां व्याचक्षाणं नमामि तम् ॥
तत स्स्वचरणाम्भोज स्पर्शसंपन्न सौरभैः ।
पावनै रर्थिन स्तीर्थैः पावयन्तं भजामि तम् ॥
आराध्य श्रीनिधिं पश्चादनुयागं विधायच ।

[2] व्याख्या यस्य विदग्धसूरि परिषच्चित्तापहारक्षमा ।

[3] यद्गोष्ठीसविधस्थिताश्च शकुना स्तत्वं परं शाश्वतं
ज्योति र्वेदरहस्यसारपठितं नारायण श्श्रीपतिः ।
किञ्चान्ये चतुराननादिविबुधा स्तच्छेषभूता इति
व्याकुर्बन्ति परस्परं यतिवरं रामानुजं तं भजे ॥

காலக்ஷேப கோஷ்டியிலே பக்கங்களில் வஸிக்கும் பக்ஷிகளும் "ஸமஸ்த - வேதசாஸ்த்ர - ப்ரதிபாதிதமான பரதத்வம் ஸ்ரீமந்நாராயணனே, ப்ருஹ்மாதிகளான தேவகணங்களெல் லாம் நாராயணனுக்குச் சேஷபூதர்கள்" என்று பரஸ்பரம் சொல்லிக்கொள்ளும்படியாயும் ஸாதித்துக்கொண்டு எழுந் தருளியிருந்து, மத்யே அர்த்தித்தவர்களுக்கும் ஸ்ரீபாததீர்த் தம் க்ருபைசெய்து ஸாதித்தருளி திருவாராதந காலமான வாறே அரங்கநகரப்பன் திருவாராதநம் செய்தருளி பழங் களும் பக்ஷ்யங்களும் பாயஸங்களும் ப்ரஸாதத்துடன் பூர்ண மாகக் கண்டருளப் பண்ணி அந்தத்திலே ஸ்வாசார்யாநுஷ் டானத்தின்படியே சாற்றுமுறை முதலானவைகளைச் செய் தருளி, தீர்த்த விநியோகாநந்தரம் தொண்டர்களமுதுசெய் தது உகக்குமவராய் பாகவதாராதநங்களையும் செய்தருளி தாமும் ப்ரஸாதப்பட்டு [1]"தத: சேத: ஸமாதாய புருஷே புஷ்கரேக்ஷணே | உத்தம்ஸித கரத்வந்த்வ முபவிஷ்ட முபஹ்வரே ||" என்கிறபடியே எம்பெருமான் திருமுன்பே எழுந்தருளியிருந்து அஞ்ஜலி ஹஸ்தராய் ஈஷந் மீலிதாக்ஷ ராய் மந்த்ரரத்நாநுஸந்தானம் பண்ணி [2]"குரோ: பாதாம் புஜம் த்யாயேத் குரோர் நாம ஸதா ஜபேத்" என்கிறபடியே ஆசார்ய விக்ரஹமே ஸதா த்யேயமென்றும், தந்நாம ஸதா ஜப்யமென்றும், அத்யவஸித்து ஸ்வாசார்யர் திருவடிகளையே ஸதா த்யானித்துக்கொண்டு அவர் திருநாமமே மந்த்ரமாய் "ஜீயர் திருவடிகளே சரணம்" என்று அநுஸந்தித்துக் கொண்டு பஹுகாலம் எழுந்தருளியிருந்து, அநந்தரம் சிறிது காலம் ஸ்ரீராமாயண காலக்ஷேபம் செய்தருளி ஸந்நிதி ஸ்ரீகார்யங்களை எல்லாம் குறைவற நடந்துவருகிற விஷயங்

---

[1] तत श्चेत स्समाधाय पुरुषे पुष्करेक्षणे ।
उत्तंसितकरद्वन्द्व मुपविष्ट मुपह्वरे ॥

[2] गुरोः पादाम्बुजं ध्याये त्गुरो र्नाम सदा जपेत ।

களையும் விமர்சித்து அநந்தரம் [1]"அத கோஷ்டீம் கரிஷ்டா நாம திஷ்டாய ஸுமேதஸாம்| வாக்யாலங்க்ருதி - வாக்யாநி வ்யாக்யாதாரம் நமாமி தம் ||" என்கிற ஸ்வாசார்யாநுஷ்டாநப்படியே இவரும் காலக்ஷேபபரர்களான பெரியோர்களெல்லாரும் வந்திருக்க அந்த கோஷ்டியிலே எழுந்தருளியிருந்து விசேஷார்த்தங்களையும் பூர்வாசார்யர்களுடைய வசநாநுஷ்டானங்களையும் ஸாதித்துக்கொண்டு எழுந்தருளியிருக்கையில் ஒரு நாள் கோஷ்டியிலே பாகவத ப்ராவண்யம் ப்ரஸ்துதமாய் அதடியாக எம்பெருமானாரநுஷ்டானம் ப்ரஸ்துதமாக அப்போது ஜீயர் அருளிச்செய்தபடி :

என் எனென்னில், திருக்கோளூருக்கு எம்பெருமானார் எழுந்தருளும்போது திருக்கோளூரில் நின்றும் ஒரு பெண் பிள்ளை எதிரே வந்து தண்டனிட்டு நிற்க, உடையவரும் பெண்ணே ! நீ எங்கு நின்றும் புறப்பட்டாய் என்று கேட்டருள, திருக்கோளூரில் நின்றும் விடைகொண்டேன், என்று விண்ணப்பம் செய்ய, ஸ்வாமியும் அத்தைத் திருச்செவி சாற்றியருளி, ஒருவர் கூறை எழுவருடுத்து காய் கிழங்குகளைப் புஜித்தாவது "திண்ண மென்னிளமான் புகுமூர்" என்கிறபடியே திருக்கோளூர் எல்லாருக்கும் புகுமூராயிருக்க உனக்குப் புறப்படு மூராயிற்றே! என்றருளிச்செய்தார். அத்தைக் கேட்டு அந்தப் பெண்பிள்ளை விண்ணப்பம் செய்தபடி : அடியேன் நாயிந்தே நாயிந்தே !

அழைத்துவருகிறேன் என்றேனோ அக்ரூரரைப்போலே
அகமொழித்து விட்டேனோ விதுரரைப்போலே
தேஹத்தை விட்டேனோ ருஷிபத்னியைப்போலே
தசமுகனைச் செற்றேனோ பிராட்டியைப்போலே

---

[1] अथ गोष्ठीं गरिष्ठाना मधिष्ठाय सुमेधसाम् ।
वाक्यालङ्कृति वाक्यानि व्याख्यातारं नमामि तम् ॥

பிண மெழுப்பிவிட்டேனோ தொண்டமானைப் போலே
பிணவிருந்திட்டேனோ கண்டாகர்ணனைப்போலே
தாய்க்கோலம் செய்தேனோ அநஸூயையைப்போலே
தந்தை யெங்கே? என்றேனோ த்ருவனைப்போலே
மூன்றெழுத்துச் சொன்னேனோ க்ஷத்ரபந்துவைப்போலே
முதலடியைப் பெற்றேனோ அஹல்யையைப்போலே
பிஞ்சாய்ப் பழுத்தேனோ ஆண்டாளைப்போலே
எம்பெருமான் என்றேனோ பட்டர்பிரான்போலே
ஆராய்ந்து விட்டேனோ திருமழிசையார்போலே
அவன் சிறியனென்றேனோ ஆழ்வாரைப்போலே
ஏதேனு மென்றேனோ குலசேகரன்போலே
யான் ஸத்யமென்றேனோ க்ருஷ்ணனைப்போலே
அடையாளம் சொன்னேனோ கபந்தனைப்போலே
அந்தரங்கம் சொன்னேனோ த்ரிஜடையைப்போலே
அவன் தெய்வமென்றேனோ மந்தோதரியைப்போலே
அஹம்வேத்மி என்றேனோ விச்வாமித்திரரைப்போலே
தேவு மற்றறியேனோ மதுர கவியைப்போலே
தெய்வத்தைப் பெற்றேனோ தேவகியாரைப்போலே
ஆழி மறை என்றேனோ வஸுதேவரைப்போலே
ஆயனை வளர்த்தேனோ யசோதையாரைப்போலே
அநுயாத்ரை செய்தேனோ அணில்களைப்போலே
அவல் பொரியை ஈந்தேனோ குசேலரைப்போலே
ஆயுதங்கள் ஈன்றேனோ அகஸ்த்யரைப்போலே
அந்தரங்கம் சொன்னேனோ ஸஞ்ஜயனைப்போலே
கர்மத்தால் பெற்றேனோ ஜனகனைப்போலே
கடித்து அவனைக் கண்டேனோ திருமங்கையார்போலே
குடை முதலானதானேனோ திருவநந்தாழ்வான்போலே
கொண்டு திரிந்தேனோ திருவடியைப்போலே
இளைப்பு விடாய்தீர்ந்தேனோ நம்பாடுவாரைப்போலே
இடைகழியில் கண்டேனோ முதலாழ்வார்களைப்போலே

இரு மன்னர் பெற்றேனோ வால்மீகர்போலே
இரு மாலை ஈந்தேனோ தொண்டரடிப்பொடியார்போலே
அவனுரைக்கப் பெற்றேனோ திருமழிசையார்போலே
அவன்மேனி யென்றேனோ திருப்பாணரைப்போலே
அனுப்புவியும் என்றேனோ வஸிஷ்டரைப்போலே
அடிவாங்கினேனோ கொங்கில் பிராட்டியைப்போலே
மண் பூவையிட்டேனோ குருவ நம்பியைப்போலே
மூல மென்றழைத்தேனோ கஜராஜனைப்போலே
பூசக் கொடுத்தேனோ கூனியைப்போலே
பூவைக் கொடுத்தேனோ மாலாகாரரைப்போலே
வைத்தவிடத்திருந்தேனோ பரதாழ்வானைப்போலே
அக்கரைக்கே விட்டேனோ குகப்பெருமாளைப்போலே
வழியடிமை செய்தேனோ லக்ஷ்மணனைப்போலே
அரக்கருடன் பொருதேனோ பெரியஉடையாரைப்போலே
இக்கரைக்கே சென்றேனோ விபீஷணரைப்போலே
இனியதென்று வைத்தேனோ சபரியைப்போலே
இங்கு முண்டென்றேனோ ப்ரஹலாதனைப்போலே
இங்கில்லையென்றேனோ ததிபாண்டனைப்போலே
காட்டுக்குப் போனேனோ பெருமாளைப்போலே
கண்டுவந்தேன் என்றேனோ திருவடியைப்போலே
இருகையும் விட்டேனோ த்ரௌபதியைப்போலே
இங்குபால் பொங்கு மென்றேனோ வடுகநம்பியைப்போலே
இரு மிடறுபிடித்தேனோ செல்வப்பிள்ளையைப்போலே
நில்லென்னப் பெற்றேனோ இடையாத்தூர் நம்பியைப்போலே
நெடுந்தூரம் போனேனோ நாதமுனியைப்போலே
அவன்போனான் என்றேனோ மாருதியாண்டான்போலே
அவன் வேண்டாமென்றேனோ ஆழ்வானைப்போலே
அத்வைதம் வென்றேனோ எம்பெருமானரைப்போலே
அருளாழி கண்டேனோ நல்லானைப்போலே
அனந்தபுரம் புக்கேனோ ஆளவந்தாரைப்போலே

ஆரியனைப் பரிந்தேனோ தெய்வவாரியாண்டானைப்போலே
அந்தாதிசொன்னேனோ அமுதனாரைப்போலே
அநுகூலம் சொன்னேனோ மால்யவானைப்போலே
கள்ளன் இவன் என்றேனோ லோககுருவைப்போலே
கடலோசையென்றேனோ பெரியநம்பியைப்போலே
சுற்றிக்கிடந்தேனோ மாலையாண்டானைப்போலே
சூழரவு கொண்டேனோ கோட்டியூரர்போலே
உயிராய்ப் பெற்றேனோ ஊமையைப்போலே
உடம்பை வெறுத்தேனோ நறையூர ரயரைப்போலே
என்னைப்போலென்றேனோ உபரிசரனைப்போலே
யான் சிறியன் என்றேனோ மலைநம்பியைப்போலே
நீரில் குதித்தேனோ கணபுரத்தானைப்போலே
நீருகங்கொண்டேனோ காசிசிங்கனைப்போலே
வாக்கினால் வென்றேனோ பட்டரைப்போலே
வாயில் கையிட்டேனோ எம்பாரைப்போலே
தோள்காட்டி வென்றேனோ பட்டரைப்போலே
துறை வேறுசெய்தேனோ பகவரைப்போலே
"மைந்நின்றவரைபோலும் திருவுருவவாட்டாற்றார்க்கு
எந்நன்றிசெய்தேனா என்னெஞ்சில்திகழ்வதுவே"

என்கிறபடியே இப்படிப்பட்ட ஞானங்களுடையார் ஜ்ஞாநத்திலே ஒருத்தருடைய ஞானம் அடியேனுக்குண்டானால் திருக்கோளூரில் விடைகொண்டிருக்கலாம். அந்த ஞானமடியேனுக்கில்லை, முசல் புழுக்கை வயலிலே கிடந்தென்? வரப்பிலே கிடந்தென்? என்று விண்ணப்பம் செய்து, "தேவரீர் எழுந்தருளி மங்களாசாஸநம் செய்திருளினால் வைத்தமாநிதிக்கும் மதுரகவிக்கும் நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவாதிகளுண்டாகும்" என்று விண்ணப்பம் செய்ய அதைத் திருச்செவி சாற்றியருளி அந்தப் பெண்பிள்ளை திருமாளிகையிலே எழுந்தருளி தளிகைப்பண்ணச் சொல்லி தாம் அமுதுசெய்தருளி தளிகை

ப்ரஸாதமும் ஸ்ரீபாத தீர்த்தமும் ஸாதித்தருளினர்'' என்று எம் பரமாசார்யரான திருவாய்மொழிப்பிள்ளை பாகவத ப்ராவண்ய ப்ரதிபாதந ஸ்தலத்திலே பதே பதே அருளிச் செய்வர்'' என்று தாமும் அருளிச்செய்துகொண்டு காலங் கழித்து [1]''ஸாயந்தநம் தத: க்ருத்வா ஸம்யகா ராதநம் ஹரே: | ஸ்வை ராலாபை: சுபை: ச்ரோத்ரூந் நந்தயந்தம் நமாமி தம் ||'' என்கிறபடியே ஸாயங்கால மானவாறே ஸாயம் அநுஷ்டானங்களை முடித்துக்கொண்டு, தெய்வநாயகன் ஸந்நிதி ஏறவெழுந்தருளி நித்யாநு ஸந்தானங்களையும் நடத்தியருளி தீர்த்தம் ப்ரஸாதங்களும் பெற்று மங்களா சாஸநம் செய்தருளி மடமேற வெழுந்தருளி அரங்கநகரப் பனையும் மங்களாசாஸநம் செய்தருளி திருமுன்பே ஆஸநத்திலே எழுந்தருளியிருந்து [2]''தவம் மே பந்து: த்வ மஸி ஜநக: த்வம் ஸகா தேசிக: த்வம் வித்யா வ்ருத்தம் ஸுக்ருத மதுலம் வித்தமப் யுத்தம! த்வம்'' என்கிற இவையெல்லாம் ஸ்வாமி திருவடிகளே என்று அத்யவஸித்திருக்கும் மஹா ஸாத்விக ச்ரோதாக்களான சிஷ்யர்களுக்கு விசேஷமான அர்த்தங்களையெல்லாம் மதுரமாகவும் ஸ்வைரமாகவும் அருளிச்செய்துகொண்டு எழுந்தருளியிருந்து நெடும்போது சென்றவாறே [3]''அத ப்ருத்யா நநுஜ்ஞாப்ய க்ருத்வா சேத: சுபாச்ரயே | சயநீயம் பரிஷ்க்ருத்ய சயாநம் ஸம்ஸ்மராம்யஹம்||'' என்கிறபடியே சுற்றிலும் சூழ்ந்து ஸேவித்து

---

1 सायन्तनं ततः कृत्वा सम्यगाराधनं हरेः ।
स्वै रालापै श्शुभै श्श्रोतॄन् नन्दयन्तं नमामि तम् ॥

2 त्वं मे बन्धुस्त्वमसि जनकस्त्वं सखा देशिक स्त्वं
विद्या वृत्तं सुकृत मतुलं वित्तमप्युत्तम! त्वम् ।

3 अथ भृत्यान नुज्ञाप्य कृत्वा चेत श्शुभाश्रये ।
शयनीयं परिष्कृत्य शयानं संस्मराम्यहम् ॥

நிற்கும் அந்தரங்கர்களுக்கு அநுமதி பண்ணிய னுப்பி சுபாவஹமான ஸ்வாசார்யன் திருவடிகளிலே ந்யஸ்த மனஸ்கராய் சயனித்து [1]"யத்தைநம் திந ஸத்க்ரியா யதிவராத்யாசாரஸந்மாத்ருகா" என்று, இவரை ஸர்வஜ்ஞர்களெல்லாம் கொண்டாடினபடியே எம்பெருமானுர் முதலானுர்களுடைய தினசர்யையே இவருக்கும் தினசர்யையாய் அநுஷ்டானங்களாலே ப்ரகாசிப்பித்துக் கொண்டு எழுந்தருளியிருக்கும் காலத்திலே ஸ்வாசார்யரான பெரிய ஜீயர் திருவடிகளிலே ப்ராவண்யம் விஞ்சித் தலையெடுத்துப் பெருமையால் தரிக்கமாட்டாதவராய் ஸ்வாமி விஷயமாய் "வேதப்பொருளுரைக்கும் வித்தகனே! மாந்தர்களின் பேதை மதி துறக்கும் பெரியோனே! பாதமலர் தந்தருளி ஓயாச் சனனங்கழித்தருளாய், எந்தை வரமுனியே! இன்று" என்றும், "வித்தகனே! வேந்தே! மணவாளமாமுனியே! சுத்தனே! சோதிச் சுடர்முடியே! முத்தே! கரும்பின்சுவையே! கடலிலமுதமே! அரும்பினதாள் நீயே அருள்," என்றும் இப்படி "குணவகுப்பு" என்று பதினேழு பாட்டுக்களாய் ஒரு ப்ரபந்த மருளிச்செய்து தரித்து வருகையில் ஐப்பசியில் திருமூலம் நேரிட அற்றைக்குத் திருநாள் கொண்டாடி "செந்தமிழ் வேதியர் சிந்தைதெளிந்து சிறந்து மகிழ்ந்திடுநாள்" என்று தொடங்கி "அழகு திகழ்ந்திடும் ஐப்பசியில் திருமூலமதெனு நாளே" என்று நாள்பாட்டும் ப்ரஸாதித் தருளிக் கொண்டாடியருளினுர். இப்படி ஸ்வாமி கொண்டாடிய நன்னுள் பாட்டை திவ்யதேசங்களிலெல்லாம் அந்தணர்கள் கொண்டாடி வருகிருர்கள். இன்னமும் இவர் செய்தருளின ப்ரபந்தங்கள் திருப்பாவை ஸ்வாபதேச வ்யாக்யானம், "கோலச்சுரிகங்கை மாயன்" தனியனும். மற்றுங் கண்டுகொள்வது.

வானமாமலை ராமானுஜ ஜீயரும் பால்யாத் ப்ரப்ருதி ஸ்வாசார்யரான பெரிய ஜீயர் திருவடிகளில் ஸம்ச்லிஷ்ட

---

1 यद्दनैन्दिन सत्क्रिया यतिवराद्याचारसन्मातृका ।

ராய் ஸர்வகாலத்திலும் தொடர்ந்து அடிமைசெய்துகொண்டு ஈச்வரனிடத்தில் புருஷகார பூதையான பெரியபிராட்டியாரைப்போலே அண்ணன் முதலானோர்கள் ஆச்ரயிக்குமிடத்திலே அவர்கள் ஜீயர் திருவடிகளையே ப்ராப்ய ப்ராபகமாக வந்தடைந்த எங்கள் விஷயத்திலே இரங்கியருளவேணும்'' என்று வானமாமலை ஜீயரை ப்ரார்த்திக்க, வானமாமலை ஜீயரும் ஸ்வாமி ஸந்நிதிக்கு எழுந்தருளி அவர்களை அங்கீகரிக்கவேண்டி பலவாக விண்ணப்பம் செய்தருளி ஆய்ச்சியாருடையவும் அடியேனுடையவும் மனோரதம் நிறைவேறும்படி திருவுள்ளம் பற்றவேணுமென்று மேல்விழுந்து ப்ரார்த்தித்தும், அண்ணன் வானமாமலைஜீயருடன் ஸமாச்ரயணத்துக்கு த்வரித்தருள என்கிறபடியேயும் ''ஜீயரும் வானமாமலை ஜீயரை அதுக்கெல்லாம் ஸங்கத்தராய் நியமித்தருளி'' என்கிறபடியேயும் புருஷகாரபூதராய்க் கடிப்பித்தருளுவர்.

இன்னமும் அப்பிள்ளை அப்பிள்ளார்கள் ஸ்வாமி திருவடிகளிலாச்ரயிக்க வந்து காவேரிக் கரையிலிருக்கையில் எறும்பி அப்பா அவர்களுக்கு ஸ்வாமி திருவடிகளில் ஆதராதிசயம் விஞ்சிவரப் பண்ணவேண்டி முந்துற அவர்களிடம் எழுந்தருளியிருக்கையில் வானமாமலை ஜீயரும் ஸ்வாமி ஸந்நிதியிலே எழுந்தருளி அப்பிள்ளை அப்பிள்ளார்கள் ப்ரஸித்தர்கள் என்று தொடங்கி அவர்கள் விஷயத்திலே இரங்கியருளவேணுமென்றும் அப்பாவுடையவும் அடியேனுடையவும் மனோரதம் நிறைவேறும்படி [1]''சுபேந மநஸா த்யாதம்'' என்கிறபடியே திருவுள்ளம் பற்றவேணு மென்று ப்ரார்த்தித்து தாமும் திருக்காவேரிக் கரைக்கு எழுந்தருள நியமனம் பெற்று எழுந்தருளி கடிப்பிக்குமவராயிருப்பர். நித்யமாக ஸ்வாமி விஷயத்தில் அதிசயாவஹமான மங்களாசாஸநம் செய்யுமவராய் ஸ்வாமி பெரிய ஜீயரால் '' தம்பொன்னடி '' என்று அபிமானிக்கப் பெற்றவராய் எழுந்தருளியிருப்பர்.

---

1 शुभेन मनसा ध्यातम्

ஸ்வாமி பெரிய ஜீயரும் தமக்கந்தரங்க சிஷ்யரான வானமாமலை ஜீயரை தமக்கு ப்ராணஸுஹ்ருத்தென்றும், தமக்குண்டான அதிசயமெல்லாம் இவர்க்குண்டாகவேணு மென்றும் இவரைத் தாமாகவே அபிமானித்து தம்முடைய ஆஸநத்திலே இவரை இருத்திவைத்துத் தம் திருக்கையிலாழ் வார்களையும் இவர் திருக்கைகளிலே ஸாதித்து தம்மைப் போலே ஸமாச்ரயணம் ஸாதிக்கும்படி நியமித்தும் பின்னும் தம்மைப்போலே இவருக்கும் அஷ்ட திக்கஜங்களை நியமித் தும் பின்னும் 1"அஸ்மத் ப்ரதிநிதிர் யோகிந் கத்வா கிந்கர ராட்திசம்'' என்கிறபடியே தமக்கு ப்ரதிநிதியாய் உத்தர தேசயாத்திரை பண்ணிவரும்படி நியமித்தும் பின்னும் இவரைத் தாமாகவே அபிமானித்தமை தோற்ற தம் அந்திம தசையில் தம் திருக்கைகளிலுபதண்டம் திருவாழிமோதி ரம் முதலானவைகளை வானமாமலை ராமானுஜ ஜீயருக்குச் சேர்ப்பிக்கும்படி நியமித்தும் இப்படிக்குப் பெரிய ஜீயர் வானமாமலை ஜீயரைத் தாமாகவே அபிமானித்து குளிரக் கடாக்ஷித்துப் போந்தருளுவர்.

அப்படியே பெரியபெருமாள் வானமாமலைப் பெருமாள் திருவேங்கடமுடையான் முதலிய எம்பெருமான்களும் அபி மானித்தருளுவர்கள். அதெங்ஙனே என்னில் — பெரிய ஜீயரும் வானமாமலை ஜீயரை வானமாமலைக்கு அனுப்ப வேண்டி பெருமாள் மங்களாசாஸநத்துக்கு எழுந்தருள அப் போது பெரிய ஜீயர் நாலாயிரம் நித்யாநுஸந்தான க்ரமத் திலே "அணியார் பொழில்சூழ் அரங்கநகரப்பா'' என்று அநுஸந்தானம் நேரிட அப்போது பெரிய பெருமாளும் பெரிய ஜீயருடைய அபிமானமே தமக்கபிமதமாகக்கொண்டு பூபாலராயனிலே எழுந்தருளியிருக்கிற லக்ஷ்மீ நாராயண் விக்ரஹத்தை பகவத் ப்ரவசரான அர்ச்சகமுகேந எழுந் தருளப் பண்ணிக்கொண்டு வானமாமலை ஜீயரைக் கடா

---

1 अस्मत्प्रतिनिधिर्भूत्वा गत्वा किन्नरराड्दिशम् ।

க்ஷித்து "நாம் அரங்கநகரப்பன், உமக்குத் திருவாராதனமாக வருகிறோம்," என்று நியமித்து அவர் திருக்கைகளிலே ஸாதித்தருளி தாம் கோயிலிலே ஸர்வைச்வர்யத்திற்கும் அபிவ்ருத்திகராய் எழுந்தருளியிருக்கிறப்போலே வானமாமலையிலும் அபிவிருத்தியாம்படி எழுந்தருளக் கடாக்ஷித்தருளினர்,

வானமாமலைப் பெருமாளும் இவர் நம் நாயனருடைய பூர்ணகடாக்ஷம் பெற்றவரென்று [1]"தத: ஸ்ரீ வாநசைலேச: ச்ரியாஸார்த்தம்" என்று தொடங்கி "ஸ்வதாம்நி ஸர்வநிர்வாஹம் குருஷ்வேத்ய ந்வசாத்" என்கிறபடியே இவரை தர்சந நிர்வாஹ ஸாம்ராஜ்யத்திலே அபிஷிக்தராக்கிக் கடாக்ஷித்தருளினர்.

திருவேங்கடமுடையானும் பெரிய ஜீயர் வானமாமலை ஜீயருடைய ஐக்யத்தைப் பிரகாசிப்பிக்கைக்காக பெரிய கேள்வி ஜீயருடைய ஸ்வப்நத்திலே [2]"ஸ்வப்நே ப்ருஹத்ய தீந்த்ரஸ்ய" என்கிறவிடத்திலே "ததர்ச பச்சாத் தஸ்யைவ" என்று தொடங்கி "ஸ்வர்ணாதி பதஸம்ஜ்ஞகம்" என்கிறபடியே சேஷாவதாரம் பெரிய ஜீயரென்றும் அவரோடே பின்னராய் அவர் பொன்னடியாய் வாழ்ந்தருளுமவர் வானமாமலை ஜீயர் என்றும் காட்டியருளினர்.

இன்னமும் வானமாமலை ராமானுஜ ஜீயர் ப்ரம்ஹசாரியாய் பால்யத்திலேயே ஆசார்ய ஸம்பந்தம் பெற்று அவ்வாசார்ய ப்ராவண்யந் தலையெடுத்து ஸர்வகாலத்திலும் தொடர்ந்தடிமை செய்கைக்கு ஸங்கல்பித்துப் போந்திருப்பர்.

---

[1] तत श्श्रीवानशैलेश श्श्रियासार्धं . . . . ।
स्वधाम्नि सर्वनिर्वाहं कुरुष्वे त्यन्वशात् ॥

[2] स्वप्ने बृहद्यतीन्द्रस्य . . . ददर्श पश्चात् ।
तस्यैव . . . . . स्वर्णादि पदसंज्ञकम् ॥

இன்னமும் தேவுமற்றறியாத மதுரகவிகளைப்போலே [1]"குருரேவ பரம் ப்ரம்ஹ குருரேவ பரம் தனம்| குருரேவ பர: காம: குருரேவ பாராயணம்|| குருரேவ பரா வித்யா குருரேவ பராகதி: | யஸ்மாத் ஸதுபதேஷ்டாஸௌ தஸ்மாத் குருதரோ குரு: ||" என்று சொல்லுகிறபடியே "தீமனங்கெடுத்தாய்", "மருவித்தொழும் மனமே தந்தாய்" என்றும் "அறியாதன அறிவித்த" ஆசார்யனே உபாயோபேயமென்று த்ருடாத்யவஸாயியாய் "பீதகவாடைப்பிரானார் பிரமகுருவாகிவந்து" என்கிறபடியே பஞ்சமோபாய நிஷ்டையான சரமார்த்த விசேஷத்தையே ஸதா அநுஷ்டேயமாய்க்கொண்டு போந்தருளினார்.

இன்னமும் இவர் "தெருள்கொள் நான்மறை வல்லவர்" என்றும், "தேறுஞானத்தர்" என்றும், "செந்தொழிலவர்" என்றும், "தெள்ளியார் திருநான்மறைகள் வல்லார்" என்றும், "செய்த வேள்வியர் வையத்தேவர்" என்றும் ஆழ்வார் உகந்து மங்களாசாஸநம் பண்ணும்படியான சிறப்புடைய வித்வத் வம்சத்திலே அவதரித்தவராய் [2]"இந்திராயா: ப்ரஸாதேந ஸம்பத: ஸர்வதாச்ரய:" என்று ஸகலஸம்பத்பரிபூர்ணராயும், [3]"ஸக்ருத்ச்ரவணத: ஸொபூத் ஸர்வ சாஸ்த்ரேஷு பண்டித:|" என்று ஸகல கலா வல்லபராய் இருந்தும் [4]"வித்யாமதோ தநமத: த்ரிதீயோ பிஜநோமத:|"

---

1 गुरुरेव परं ब्रह्म गुरुरेव परं धनम् ।
गुरुरेव परः कामो गुरुरेव परायणम् ॥
गुरुरेव परा विद्या गुरुरेव परागतिः ।
यस्मा त्सदुपदेष्टासौ तस्मा द्गुरुतरो गुरुः ॥

2 इन्दिरायाः प्रसादेन संपद स्सर्वदाश्रयः ।

3 सकृ च्छ्रवणत स्सोभू त्सर्वशास्त्रेषु पण्डितः ।

4 विद्यामदो धनमद स्तृतीयो भिजनो मदः ।

என்கிற இம்மூன்று குறும்புகளுடையவும் காலடிப் படாதே, அவதாரம்முதல் பரிசுத்தஹ்ருதயராய் பரமக்ருபாளுவாய், [1]"பாலமூக ஜடாந்தா: ச பங்கவோ பதிராஸ்ததா| ஸதாசார் யேண ஸந்த்ருஷ்டா : ப்ராப்நுவந்தி பராம் கதிம்||" [2]"பசுர் மநுஷ்ய: பக்ஷீவா யேச வைஷ்ணவஸம்ச்ரிதா : | தேநைவ தே ப்ரயாஸ்யந்தி தத்விஷ்ணோ: பரமம் பதம் || ஸ்தாவ ராண்யபி முச்யந்தே" என்றும் சொல்லுகிறபடியே பால மூகஜடபதிராதிகளும் பசுபக்ஷ்யாதிகளும் ஸ்தாவரங்களும் [3]"யத்கோஷ்டீ ஸவிதஸ்திதா; ச சகுநா; தத்வம் பரம் சாச் வதம்" என்கிறபடியே தத்வஜ்ஞாநம் பிறந்து எல்லாரும் ஸம்ஸாராத் உத்தீர்ணராம்படி விசேஷ கடாக்ஷம் செய்து கொண்டும், தோஷமுள்ளவிடத்திலும் குணப்ரதிபத்தி யுடைய பாகவதப்ராவண்யத்தையுடையராய், வ்ருத்தாசார மறிந்தருளுமவராகையாலே வேதகப் பொன்னுன விலக்ஷண விஷயங்களையும் ஆதரித்துக்கொண்டு அவர்கள் விஷயத் திலே பூர்வர்கள் அநுஷ்டித்துப் போரும் சேஷ வ்ருத்திகளை அநுஷ்டாந பர்யவஸாயியாம்படி அநுஷ்டித்து இப்படி ஆசார்யனும் ஈச்வரனும் உகந்தருளும்படி வ்ருத்தாசார மறிந்துஅநுஷ்டிக்குமவராய் பூர்வாசார்யர்களுடைய உக்த் யநுஷ்டாநங்களை யெல்லாம் தம்முடைய உக்த்யநுஷ்டாநங் களால் ப்ரகாசிப்பித்துக்கொண்டு எழுந்தருளியிருந்தார். இப்படி சிலநாட்கள் கழிந்தவாறே ஜீயருக்கு ப்ராப்ய பூமி யிலே ப்ராவண்யமும் த்யாஜ்ய பூமியிலே ஜிஹாஸையும்

---

[1] बालमूक जडान्धाश्च पङ्गवो बधिरास्तथा ।
सदाचार्येण सन्दृष्टाः प्राप्नुवन्ति पराङ्गतिम् ॥

[2] पशु र्मनुष्यः पक्षी वा ये च वैष्णवसंश्रिताः ।
तेनैव ते प्रयास्यन्ति तद्विष्णोः परमं पदम् ॥
स्थावराण्यपि मुच्यन्ते ।

[3] यद्गोष्ठी सविधस्थिताश्च शकुना स्तत्वं परं शाश्वतम् ।

அநுபவாலாபத்திலே ஆத்மதாரணயோக்தையும் அத்யந்தம் அதிசயித்துத் தம் பேற்றுக்கு ப்ரதிபந்தகம் திருமேனி யோட்டை ஸம்பந்த மென்று அறுதியிட்டு, தத்விமோச னத்தை தம்மாசாரியரிடத்திலே அபேக்ஷித்துக் கொண்டி ருந்து, திருமேனியிலே நோவுசாத்தி எழுந்தருளியிருக்க, இவ ரடியார்களெல்லாரும் ஜீயர்நோவுசாத்தித் திருமேனித்தளர்ந் தலைக் கண்டு விச்லேஷ பீருக்களாய் சந்திரனில்லாத் தார கைகள்போலே, இந்திரனில்லா ஓலக்கம்போலே, தாமரை யில்லா ஓடைகள்போலே, தடமுலையில்லா மலர்மகள் போலே, வெந்தழலில்லா ஆஹூதிபோலே, வேதியரில்லா ஓதுகைபோலே, எங்களிராமானுச முனிபோனால் இப்படி யாமே இப்புவியில்தானே என்று பலவாக முறையிட்டு ஆர்த் தர்களாய் பலிதமான வ்ருக்ஷத்தை பக்ஷிஜாதங்கள் சூழ்ந் திருக்குமாபோலே இவர் விச்லேஷத்திலே தரிக்கமாட்டாத வர்களாய் சூழ்ந்துகொண்டு படுகாடாய்க்கிடக்கிற இவர்களை ஜீயரும் ஆச்வஸிப்பித்துத் தமக்குப் பிறகு தர்சனத்திற்கு ஆவார் ஆரென்று பார்த்து சிந்தித்திருந்து அப்போது [1]"ஸ்தா நேஸ்வஸ்ய குரோ: ப்ரீத்யை ஸ்தாபயித்வா யதீச்வரம்| ஸ்வ ஸ்யைவாலங்க்ருதம் நாம்நா முத மாப குரூத்தம:||" என்கிற படியே திருவடி ஸம்பந்திகளில் மஹாஸாத்விகராய் ஸகல சாஸ்திரங்களும் கைபுகுந்தவராயிருக்கிற களஷூர் வரத முனியை ஸ்(ஸ்வ)ஸ்தானத்தில் ப்ராப்தராகச் சிந்தித்து, ஆசார்யன் திருவுள்ள முகக்கும்படி ஸ்தாநாபி வ்ருத்யர்த் தர்த்தமாய் தனது திருநாமத்தால் அலங்கரிக்கப்பெற்ற அவ் வரதமுனியை தமக்கு ஆத்மபூதராய்த் திருவுள்ளம்பற்றி, தமக்கு ஆசார்ய க்ருபா ப்ராப்தமான ஸ்தான ரத்னத்தில் அபிஷிக்தராக்கி, வானமாமலை ராமானுஜ ஜீயரென்று தம் முடைய திருப்பவளச் செவ்வாயாலே அழைத்தருளி, வரத

---

[1] स्थाने स्वस्य गुरोः प्रीत्यै स्थापयित्वा यतीश्वरम् ।
स्वस्यैवालङ्कृतं नाम्ना मुदमाप गुरूत्तमः ॥

ராமானுஜ ஜீயரை தெய்வநாயகன் ஸ்ரீவரமங்கை நித்யகைங் கர்யத்திலே விநியோகிக்கைக்காக அவர்கள் திருவடிகளிலே காட்டிக்கொடுத்து, தம்மடியார்களை யெல்லாம் வரதராமா னுஜ ஜீயர் திருவடிகளிலே காட்டிக்கொடுத்தருள, அப்போது திருக்குறுங்குடியி லடியார்கள் வந்து நம்பி ஸ்ரீகார்யத்திற்கு ஜீயரில்லாதிருப்பதை விண்ணப்பம் பண்ணி ப்ரார்த்திக்க, [1]"குருங்காநகரே ப்யேவம் ஸ்தாபயித்வா யதீச்வரம்| வாநா சலமடே ஸ்வேந த்வபிஷிக்தம் யதீச்வரம் ‖ அநுஸ்ருத்ய குருங்காயாம் பூர்ணஸ்ய ஜகதீபதே:| நாநாவிதம்ச கைங்கர் யம் குரு ஸம்யமிநாம் பதே‖ இத்யா திஷ்டோ யதீசாநோவா நாத்ரிமுநிநா ததா| தந்யோஸ்மீதி வதந் வாசம் குருங்காம் ப்ர யயௌ முதா ‖" என்கிறபடியே அடியார்களிலொருவரை நம்பி ஸ்ரீகார்யத்திற்கு ஜீயராக நியமித்தருளி வானமாமலை ஸம்ஸ்தானத்தில் அபிஷிக்தர்களாயிருக்கிற ஜீயர்களை அநு ஸரித்து அவர்கள் நியமனத்துக்கு உள்ளிருந்து நம்பி ஸ்ரீகார் யங்களையெல்லாம் ஒன்றுமொன்றும் குறையாதே நடத்தி வாருமென்று நியமித்தனுப்பியருள, நம்பி ஜீயரும் "தந்யோஸ்மி மஹாப்ரஸாதம்" என்று நியமனத்தை சிரஸா வஹித்து பஹுஸந்துஷ்டராய் நம்பி ஸந்நிதி ஏற எழுந் தருளினார்.

அநந்தரம் [2]"ராமானுஜார்யச்ச வரப்ரதோமுநி: யாந் தம் யதீந்த்ரம் பரமம்பதம் குரும்| ஸம்ப்ராப்ய சாரோப்ய

---

1 कुरुङ्गानगरे प्येवं स्थापयित्वा यतीश्वरम् ।
वानाचलमठे स्वेन त्वभिषिक्तं यतीश्वरम् ॥
अनुसृत्य कुरुङ्गायां पूर्णस्य जगतीपतेः ।
नानाविधंच कैङ्कर्यं कुरु संयमिनां पते ! ॥
इत्यादिष्टो यतीशानो वानाद्रि मुनिना तदा ।
धन्योसीति वदन्वाचं कुरुङ्गां प्रययौ मुदा ॥

2 रामानुजार्यश्च वरप्रदोमुनि
यान्तं यतीन्द्रं परमंपदं गुरुम् ।

ஸம்ருபவிக்ரஹத்வயம் முநேர் நிந்யது ரந்திகம் ததா ||
வாநாத்ரியோகீ வரவிக்ரஹத்வயம் விலோக்ய ஸம்ஸ்ருப்ச்ய
ததௌ தயோ: தத: || [1]வபு ஸ்ததாதாய குரோ: கராப்தம்
வரப்ரதாஹ்வோ முநி ராரராத ஸ: || தோதாத்ரிநாதோ ப்ய
முமேவ லப்த்வா தத்யாஜ கேதம் ப்ரியவிப்ரயோகாத்||'' என்
கிறபடியே வானமாமலை வரத ராமானுஜ ஜீயரும் ராமானு
சம் பிள்ளையும் ஜீயர் ஸந்நிதியிலே ப்ரார்த்தித்துக்கொண்டு
ஆசார்ய ப்ரதிநிதியாய் இரண்டு திவ்யமங்கள விக்ரஹங்
களை ஏறியருளப் பண்ணிக்கொண்டு தங்களாசார்யரான
ஜீயர் திருமுன்பே கொண்டுவந்து ஸமர்ப்பித்து தேவரீர்
இப்படி நித்யமாக மடத்திலே எழுந்தருளியிருக்க எல்லாரும்
ஸேவித்து உஜ்ஜீவிக்கும்படி க்ருபை செய்தருள வேணு
மென்று ப்ரார்த்திக்க, ஜீயரும் அந்த விக்ரஹ த்வயத்தையும்
தமக்கு அர்ச்சா சரீரமாக அபிமானித்து குளிரக் கடாக்ஷித்து
திருக்கைகளாலே ஸ்பர்சித்து ஒரு விக்ரஹத்தை தம்முடைய
மடத்திலே நித்யமாக ஆராதித்து ஸேவித்துப் போரும்படி
வரதமுனி திருக்கைகளிலே ஸாதித்தருளினார். இப்படி
தாம் அர்ச்சாரூபேண மடத்திலே நித்யமாக எழுந்தருளி
யிருக்கத் திருவுள்ளம்பற்றவே, இவர் விப்ரயோகம் வரு
வதே! என்றிருந்த சிரீவரமங்கை தெய்வநாயகன் திருவுள்ளம்
எல்லாம் ப்ரஸந்நமாயிற்று. அநந்தரம் மற்றொரு விக்ர
ஹத்தை ராமானுஜம் பிள்ளை திருக்கைகளிலே ஸாதித்து
க்ருபை செய்தருளினார்.

---

संप्राप्य चारोप्य सुरूपविग्रह-
द्वयं मुने र्निन्यतु रन्तिकं तदा ॥
वानाद्रियोगी वरविग्रहद्वयं
विलोक्य संस्पृश्य ददौ तयो स्ततः ।
[1] वपु स्तदादाय गुरोः कराप्तं वरप्रदाह्वो मुनि रारराध सः ।
तोदाद्रिनाथो प्यमुमेव लब्ध्वा तत्याज खेदं प्रियवियोगप्रात् ॥

அநந்தரம் ஸந்நிதியில் அனைத்துப் பரிகரங்களையும் அழைத்து அபராத க்ஷாபணம் பண்ணியருள, அவர்களும் வானமாமலைப் பெருமாள் அபராதி ஆனாலன்றோ தேவரீர் அபராதியாவது என்று சொல்ல, ஜீயரும் அவர்களைக்குறித்து வானமாமலைப் பெருமாள் ஸ்ரீகார்யங்கள் குறைவற நடக்கும் படி ஜீயரை நியமித்திருக்கிறோம். அவரை நாமாகவே நினைத்து அநுஸரித்து ஸந்நிதியில் ஸ்ரீகார்யங்களைச் செய்யுங்கள் என்று நியமித்துப் போகவிட்டு ததீயாராதநம் நடத்தியருளி ஸ்ரீவைஷ்ணவர்களைத் தீர்த்தங்கொண்டு ஸ்வீகரித்து க்ஷாபணம் பண்ணி யிருக்கையில் [1]"ஸ்ரீமாந் தோதாத்ரியோகீ வரதமுநிவரம் ஸ்வாத்மபூதம் ஸ்வநாம்நா ஸ்தானே ஸ்மிந் ஸ்தாபயித்வா பஹுஸமயத்ருதம் ஜீர்ணகாயம் விஹாய | ஸ்ரீமத் ரம்யோபயந்து: சரணநளிநயோர் நித்யதாஸ்யாபிலாஷீ தேஜோரூபம் விவேசா ப்ரதிம மநுகுணம் விக்ரஹம் நித்யவந்த்யம் ||" என்கிறபடியே திருமேனியிலே ஆர்த்தி விஞ்சி தரிக்கமாட்டாமையாலே பெரிய ஜீயர் திருவடிகளையே த்யானித்துக்கொண்டு எம்பெருமானார் திருவடிகளே சரணம், ஜீயர் திருவடிகளே சரணம் என்று அநுஸந்தித்து அவசராய் சாய்ந்திருக்க ஸ்ரீபாதத்து முதலிகளெல்லாரும் கைகூப்பி வணங்கிக்கொண்டு ப்ரும்ஹவல்லி, ப்ருகுவல்லி, சூழ்விசும்பணிமுகில் முதலானவற்றை ஸேவித்தருளி திருச்சின்னம் பணிமாற ஸகலவாத்யங்களும் முழங்க ஜீயரும் ஸ்வாசார்யன் திருவடிகளையே த்யானித்துக்கொண்டு ஸுஷும்நா நாடி மார்க்கத்தாலே ப்ரும்ஹ ரந்த்ரம் பேதித்து திருநாட்டுக் கெழுந்தருளினார்.

---

[1] श्रीमान् तोदाद्रियोगी वरदमुनिवरं स्वात्मभूतं स्वनाम्ना
स्थाने ऽस्मिन् स्थापयित्वा बहुसमयधृतं जीर्णकायं विहाय ।
श्रीमद्रम्योपयन्तु श्चरणनलिनयो र्नित्यदास्याभिलाषी
तेजोरूपं विवेशा प्रतिम मनुगुणं विग्रहं नित्यवन्द्यम् ॥

அநந்தரம் வரத ராமானுஜ ஜீயர், ராமானுஜம்பிள்ளை முதலானோர்களும் ஸ்வாமியினுடைய விச்லேஷாஸஹிஷ்ணுக்களாய்க்கொண்டு வேரற்ற மரம்போலே விழுந்து புரண்டு போர நொந்து ஆர்த்தராய் ப்ரலாபிக்க ஸ்ரீபாதத்தில் முதலிகள் தேற்றுவிக்கத் தேறி நின்று [1]"ராமானுஜ முநீந்த்ரேண நியுக்தோ வரதோ முநி: | ஔர்த்வதேஹிக கார்யாணி க்ருதவாந் பஹுவிஸ்தராத்||" என்கிறபடியே ஜீயராலே சரம கைங்கர்யத்தில் நியுக்தரான வரத முனியும் ஸ்ரீபாதத்து முதலிகள் எல்லாரையும் கூட்டிக்கொண்டு சேற்றுத் தாமரை ஏற எழுந்தருளி நீராடி அலங்காரத் திருமஞ்சனம் கொண்டு அடியார்களுடன் எழுந்தருளி ஸ்வாசார்யரான ஜீயருக்கு திருமஞ்சநம் கொண்டருளப் பண்ணுவதாக ஒரு திருமஞ்சன வேதியிலே விமல சரம விக்ரஹத்தை ஏறியருளப் பண்ணி, புருஷ ஸூக்தத்தாலும் த்வயானுஸந்தானத்தாலும் மற்றுமுண்டான அநுஸந்தானங்களாலும் திருமஞ்சனம் பண்ணிவைத்து திருவொற்றுவாடை சாத்தி திருப்பரிவட்டம் திருமண் காப்பு சாத்தி அலங்கரித்து திருமேனி அழகை எல்லாம் எல்லோரும் ஸேவித்துக் கண்ணிலும் நெஞ்சிலும் தேக்கிக் கொண்டு நிற்க, அதற்குள்ளே தெய்வ நாயகனும் உடுத்துக் களைந்த பீதகவாடையும் மார்வணிந்த வனமாலையும் பொன் தட்டிலே வைத்து வரவிட, தெய்வநாயகனடியார்களும் அதை சிரஸா வஹித்துக்கொண்டு ஸகல வாத்யங்களும் கோஷிக்க சத்ர சாமராதிகள் பணிமாற அணைத்துப் பரிகரங்களுடன் மடத்து வாசலிலே செல்ல, அதைக் கண்டு வரதராமானுஜ ஜீயரும் ஸாஷ்டாங்கமாக தண்டன் ஸமர்ப்பித்துப் பெற்றுக்கொண்டு ஸ்வாசார்யருடைய விமல சரமவிக்ரஹத்தை யதாக்ரமமாக அலங்கரித்தருளி ஸந்நிதி அணைத்துப் பரி

---

1 रामानुजमुनीन्द्रेण नियुक्तो वरदो मुनिः ।
और्ध्वदेहिककार्याणि कृतवान् बहुविस्तरात् ॥

கரங்களும் ஸ்ரீபாதத்து முதலிகளும் சாத்தாத முதலிகளும் ஜீயருடைய சரம விக்ரஹத்தை ஸேவித்து இனி ஸேவை இழந்துபோவதை ஸஹிக்கமாட்டாதவர்களாய் "ஐயோ கண்ணபிரான் அறையோ முறையோ சிரீவரமங்கை வீற்றிருந்த வானநாடனே என் கார்முகில் வண்ணனே!" என்று பெருமிடறு செய்து [1]"அநந்த: ப்ரதமம் ரூபம் லக்ஷ்மணஸ்து தத: பரம்| பலபத்ர: த்ருதீயஸ்து கலௌ கச்சித் பவிஷ்யதி||" என்கிறபடியே கலியிலே அவதரித்தருளின எம்பிராமானுசமுனியோ? புனரவதாரமான வரவரமுனியோ? அவர்க்கு இவராய் நின்ற வரமங்கை மாமுனியோ? என்று முறையிட்டுப்பின்னும் "மாத்தார் மன்னர் தொழும் தொட்டையங்காரப்பை, வளர்சமரபுங்கவகுரு சுத்த சத்துவமண்ணு,ஏத்தாதவரேத்து மப்பாச்சியாரண்ணு ஏராரும்கல்விநிதி விராமானுசம் பிள்ளை, காத்துலகை யாதரிக்கும் திருக்கோட்டியூரய்யர் கலைமுழுதும் கைவந்து கலங்காத ஞானக் கண்ணுத்தானும் பள்ளக்கால்சித்தானு மெண்மரு மட்டகசமாகியே, அடிமைசெய்தருளுகையால் வானமாமலை முனிவன் போலே தேசிகர் மாநிலத்தில் வேறுண்டோ" என்றும், எத்தனைபேர் தந்தை எத்தனைபேர் மைந்தனுய், எத்தனை பேர்க் கேவல் தொழில் செய்தேன், அத்தனையும், மாற்றுவித்தான் மங்கையிலி ராமானுசமுனிவ னேற்றமுள்ள வெட்டெழுத்தினல்" என்றும், "மன்னிய செஞ்சொல் மணவாளமாமுனிவன் கழ லுன்னியகொண்ட லிராமானுசனெண்பதங்கள், தண்ணிய நெஞ்சில் தரிக்கவல்லார் அவர் தம் பதத்தைச் சென்னியில் சூடவல்லார் விண்ணுளாரிலும் சீரியரே" என்றும் பின்னும் அவர் தோன்றிய நாள் முதல் தன்னுலகம் புக்கதிருக உள்ளவை எல்லாம் பேசி அனுபவிக்கையில் இப்படி திருநாட்டுக்கு எழுந்தருளிய இவருடைய

---

[1] अनन्तः प्रथमं रूपं लक्ष्मणस्तु ततः परम् ।
बलभद्र स्तृतीयस्तु कलौ कश्चि द्भविष्यति ॥

அந்திமதசையை எல்லாருமறிந்து உஜ்ஜீவிக்கும்படி 1"ஆரூடே கடகம் ப்ரபாபரிப்ருடே ஸ்ரீசோபக்ருத்வத்ஸரே மூலே சுக்ரதினே த்ரயோதசி திதௌ பக்ஷவளர்க்ஷே சுபே| வைராக்யாதி ஸமஸ்த ஸத் குணநிதீ ராமாநுஜாக்யோஜ்வல: ஸ்ரீவாநாசல யோகிராட் நிஜகுரோ: பாதாரவிந்தம் யயௌ ||" என்று அங்குத்தைக்கு அந்தரங்கரானவர்கள் அருளிச்செய்ய எல்லாரும் கேட்டு தம்மிலே தேறிநிற்க, ஜீயரும் ஸ்ரீவைஷ்ணவர்கள் எல்லாரையும் கூட்டிக்கொண்டு ஸ்ரீ சூர்ணபரிபாலனம் செய்தருளி தத்சேஷமான ஸ்ரீ சூர்ண ப்ரஸாதங்களைத் தாமும் தரித்துக்கொண்டு ஸ்ரீவைஷ்ணவர் களுக்கெல்லாம் விநியோகித்தருளி எண்ணெய் சுண்ணம் எல்லாங்கொண்டாடி திவ்யாலங்காரா லங்க்ருதமான புஷ்பக விமாநத்திலே ஜீயருடைய விமலசரம விக்ரஹத்தை ஏறி யருளப்பண்ணி எல்லாரும் ஸ்ரீபாதம் தாங்கிக்கொண்டு சத்ர சாமர தாளவ்ருந்தாதிகள் பணிமாற பேரீ ம்ருதங்க சங்க காஹளாதி ஸகல வாத்யங்களும் முழங்க தெய்வநாயகன் திருவீதியெல்லாம் திருக்காவணம் பரிமாறி பல கதலிச்சோலை களாலும் நாட்டிய மகர தோரணங்களாலும் த்வஜங்களா லும் கொடிகளாலும் அலங்கரிக்கப்பட்டு ஸர்வாலங்கார ஸம்பந்நமான திருவீதியெல்லாம் கரும் பேந்தி நூற்றந்தாதி முதலாக அநுஸந்திக்க திருநீர் பரிமாற பொரியும் புஷ்ப புஞ்சமும் சிதற, "தர்சனத்தில் வரமங்கை மாமுனிவன் திருநாட்டுக் கெழுந்தருளினர்" என்று ஒற்றைத் திருச் சின்னம் பணிமாற ஸுமங்கலிகள் தீபமெடுக்க திருவீதி யிலுள்ளவர்களெல்லாம் ஸேவிக்க எழுந்தருளப் பண்ணுவித்

---

1 आरूढे कटकं प्रभापरिबृढे श्रीशोभकृद्वत्सरे
मूले शुक्रदिने त्रयोदशितिथौ पक्षे॰वळक्षे शुभे ।
वैराग्यादि-समस्त-सद्गुणनिधी रामानुजाख्योज्वल
श्श्रीवानाचलयोगिरा ण्णिजगुरोः पादारविन्दं ययौ ॥

துக்கொண்டுபோய்சேற்றுத் தாமரையின் மேலக் கரையிலே வானமாமலை திவ்ய விமானத்தை நித்யமாய் ஸேவித்திருக்கும் படி, ஆளவந்தார், எம்பெருமானார், பெரிய ஜீயர்களுக்குப் போலே யதி ஸம்ஸ்கார விதி அடங்கச்செய்து கரித்துப் பள்ளிபடுத்தார்கள். அநந்தரம் ஜீயர் முதலாக எல்லா ஸ்ரீ வைஷ்ணவர்களும் ஸ்வசேஷத்வாநுகுணமாக அநுஷ்டித்துப் பெருமாள் அவப்ருதங் கொண்டாடுமாப்போலே அவப்ருதங்கொண்டாடி மீண்டும் மடத்திலே எழுந்தருளி பெருமாளில்லாத அயோத்யைபோலே வெறி (த்தான) யோடின மடத்தைக் கண்டு இல்லம் வெறியோடிற்றாலோ! என்று ஆசார்ய விச்லேஷா ஸஹிஷ்ணுக்களாய்ப் போர நொந்து, அவர் எழுந்தருளியிருந்து வாழ்வித்தவையெல்லாம் விண்ணப்பம்செய்து மிடறு தழுதழுப்பத் திருமுத்துதிர்த்து, தங்களிலே தேறிநின்று வித்யுக்தப்ரகாரேண பன்னிரண்டு நாள் செய்யவேண்டும் க்ருத்யங்களெல்லாம் செய்தருளி ஜீயர் வைபவத்திற்கு அநுகுணமாக பெருக்கத் திருவத்யயனம் நடத்தியருளி தீர்த்தம் ப்ரஸாதங்களும் ஸ்வீகரித்துப் போந்தார்கள்.

அநந்தரம் வானமாமலை வரத ராமானுஜ ஜீயரும் [1]"வரவர முநிவர்ய ஸ்தான பர்யாய பீடே களமவரதயோகீ ஸ்தாபிதஸ் ஸ்வார்யவர்யை:| திநமணிரதபீடே ராசி ஸஞ்சார பேதை: திவஸபதிவிபேதோ ராஜதே யத்வதேவ||" என்கிற படியே காலாத்மகமான ராசிஸஞ்சார பேதத்தாலே ரத பீடத்திலே ஸூர்யமூர்த்தி பேதம் ஸ்தாபிக்கப்படுமா போலே வரவரமுநி பர்யாய பீடமாயிருந்துள்ள வானமா

---

1 वरवरमुनिवर्य-स्थानपर्यायपीठे
कळमवरदयोगी स्थापित स्स्वार्यवर्यैः।
दिनमणिरथपीठे राशिसञ्चारभेदै
र्दिवसपतिविभेदो राजते यद्वदेव॥

மலை ராமானுஜ ஜீயர் பீடத்திலே காலபேதேந மூர்த்திபேத மாய் நின்று வானமாமலை ஜீயரும் தம்முடைய ஆசார்யன் நியமித்தருளினபடியே வானமாமலைப் பெருமாள் ஸந்நிதி அனைத்து ஸ்ரீகார்யங்களையும் ஆராய்ந்து நடத்தியருளி சேதநோஜ்ஜீவனம் முதலிய ஆசார்ய கைங்கர்யங்களையும் செய்தருளி ஆச்ரிதர்களுக்குத் திருவாய்மொழியின் விசேஷார்த்தங்களையும் ஸகல ரஹஸ்யார்த்தங்களையும் ப்ரஸாதித்துக் கொண்டு வாழ்வித்தருளினார்.

அநந்தரம் "ஸ்ரீமந்மஹார்ய ரணபுங்கவ சுத்த ஸத்வ ஸ்ரீ ஸ்ரீநிவாஸ பரதாநுஜ ஸித்தபாதா:| கோஷ்டீபுரேச வரதாக்ய குரு ஜயந்தி வாநாத்ரியோகிந இமே ஷ்டதிசாம் கஜாஸ்தே" என்கிறபடியே யுள்ள பெரிய வானமாமலை ராமானுஜ ஜீயருடைய அஷ்டதிக்கஜங்களும் அவரவர்களுக்கு நியமித்த கைங்கர்யங்களைச் செய்துகொண்டு வாழ்ந்தருளினார்கள்,

பின்பு [1]"ராமாநுஜார்யோ ககநாத்ரியோகிநம் லப்த்வார்ச்ய மாகாத் குருகாபுரீம் தத:| தத்ரா கரோத் வேதசிரோத்வயே ஸதா விசாரமாசாரரதைஸ் ஸஹாநுகை:॥" என்கிறபடியே ராமானுஜம் பிள்ளையும் தமக்காசார்யரான வானமாமலை ராமானுஜ ஜீயர் அந்திம தசையில் ப்ரஸாதித்தருளின அர்ச்சா விக்ரஹத்தை எழுந்தருளப்பண்ணிக் கொண்டு திருநகரி ஏற எழுந்தருளி அத்யந்தம் சிஷ்டர்களான தம்முடைய சிஷ்யர்களுடன் உபய வேதாந்த காலக்ஷேபங்களையே போதுபோக்காகக் கொண்டு வாழ்ந்து கொண்டெழுந்தருளியிருந்தார்.

---

[1] रामानुजार्यो गगनाद्रियोगिनं
लब्ध्वा चर्य मागा त्कुरुकापुरी न्ततः ।
तत्रा करो द्वेदशिरोद्वये सदा
विचार माचाररतै स्सहानुगैः ॥

இந்த ஒன்றான (முதலாவது) வானமாமலை ராமானுஜ ஜீயருடைய திருநக்ஷத்திரம் கன்னியில் புனர்வஸு. இவர் திருநக்ஷத்திரத்தனியன் "ரம்யோபயந்த்ரு முநிவர்யகடாக்ஷ பாத்ரம் வைராக்யபக்திமதி முக்யகுணம்புராசிம் | கந்யா புநர்வஸுபஜாத மநர்க்கசீலம் ராமானுஜம் ககநசைலமுநிம் பஜாமி ||"

வைபவத் தனியன் "ஸ்ரீசைலேச...முநிம்| ரம்யஜாமாத்ரு யோகீந்தர பாதரேகாமயம் ஸதா | ததாயத்தாத்ம ஸத்தாதிம் ராமானுஜ முநிம் பஜே ||"

இவர் வாழித் திருநாமம் :

திருவிருந்த மலர்த்தாள்கள் வாழியே
சிறந்த செந்துவராடையும் வாழியே
தருவிருந்தகை முக்கோலும் வாழியே
தடம்புயத்தினில் சங்காழி வாழியே
மருவுகொண்டல் மணவாள யோகியை
வாழ்த்தி வாழ்ந்தருள் வாய்மலர் வாழியே
கருணைமேவு மிராமானுசமுனி
கநகமௌலி கலந்தாழி வாழியே.

அடியவர்தம் துயரனைத்து மறுத்தருள்வோன் வாழியே
அணிபொழில் சீவரமங்கை யவதரித்தோன் வாழியே
கடிபொழில்சூழ் பூதூர்மன் கழல்பணிந்தோன் வாழியே
கருத்தையடர் புலனைந்தும் கடிந்துவிட்டோன் வாழியே
வடமொழிதென் மொழிமறைகள் வகுத்துரைப்போன்
மணவாள மாமுனியை வாழ்த்துமவன் வாழியே [வாழியே
இடருததி முழுகுமெனை எடுத்தளிப்போன் வாழியே
என்னப்பனி ராமாநுஜ முனிவன் வாழியே.

பணவா ளரவில் துயிலரங் கேசர் பதம்பணியும்
மணவாள மாமுனி மாமலர்த் தாள்களை வாழ்த்தும் நல்ல

குணவாளன் எந்தை இராமாநுசமுனிக் கோதில்பதம்
தணவாநிதிநமக் கென்றென்று நாடோறும் சாற்றுநெஞ்சே.

வாழி இராமாநுச முனிவன் மாமலர்த்தாள்
வாழியவன் கருணை மானுேக்கும்—வாழியே.
எந்தை மணவாள முனியின் னருளால் மாறனிசைச்
செந்தமிழைத் தேர்ந்துரைக் குஞ் சீர்.

இந்தப் பெரிய வானமாமலை ஜீயர் திருவடிகளிலாச்ரயித்தவர்கள் ஸ்வாமி பெரிய ஜீயருக்கு க்ருபாபாத்ரர்களான அப்பாச்சியாரண்ணு, ஸமரபுங்கவாசாரியர், சுத்தஸத்வம் அண்ணு, ராமாநுஜம்பிள்ளை, மஹார்யர், திருக்கோட்டியூரய்யர், பள்ளக்கால்சித்தர், ஞானக்கண்ணுத்தான். இவ்வெண்மர்களும் அட்டகஜங்களாம். இன்னும் தாசரதி அப்பையும் திருமலை யாத்ரையில் எறும்பியிலே வந்தாச்ரயித்தவர்கள் சதுர்தசாசார்ய பருஷர்கள், இன்னமும் ஸ்வாசார்ய நியோகத்தாலே செய்தருளின உத்தர தேச யாத்திரையிலும் வானமாமலையிலும் வந்து ஆச்ரயிரத்தவர்கள் அஸங்க்யேயர்கள். இப்படி ஆசார்ய க்ருபையாலே அநேக சிஷ்யர்களுடன் "சதாயு: புருஷ:" என்கிற ச்ருதிப்படியே நூறு திருநக்ஷத்திரம் எழுந்தருளியிருந்து இவர் ஜகத்தை வாழ்வித்தருளினர்.

ஜீயர் திருவடிகளே சரணம்.

ஸ்ரீ வரமங்கைமுனி வைபவம்
முற்றிற்று.

---

VALLUVAR ACHAGAM, MADRAS-7

## ॥ अशुद्ध शोधनम् ॥

| पुटे | पङ्क्तौ | अशुद्धम् | शुद्धम् |
|---|---|---|---|
| 6 | 4 | श्शारङ्गा | श्श्रीरङ्गा |
| 9 | 3 | तीर्थं | तीर्थे |
| 13 | 2 | शिण्यै श्ष्टि | शिष्यै शिशष्टै |
| 18 | 1 | युवतुयः | युवतयः |
| 28 | 4 | इत्यव्याज्य | इत्यव्याज |
| 31 | 5 | मेठ | मठे |
| 38 | 4 | योगिनः | योगिने |
| 59 | 7 | श्राशुद्ध | श्रीशुद्ध |
| 66 | 2 | त्वाकृष्ट | तावाकृष्ट |
| 100 | 1 | मेथिमे | मेधिने |
| 105 | 4 | स्समेत्यूचु | स्समेत्योचु |
| 109 | 8 | दास्यान् | दास्यन् |
| 133 | 4 | तद्विण्णाः | तद्विष्णोः |
| 138 | 2 | अेर्द्धु | और्द्धु |

# பிழைத் திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
| --- | --- | --- | --- |
| 8 | 13 | குரோர்ர்: | குரோர் |
| 22 | 3 | ஸங்கிதாதா | ஸங்கிதா |
| 27 | 21 | தத்வப்ரபாவ | தத்ப்ரபாவ |
| 41 | 17 | நாராயணுக்யோ | ராமானுஜாக்யோ |
| 49 | 9 | பரிசராக | பரிசாரக |
| 80 | 18 | ஸ்வாசர்ய | ஸ்வாசார்ய |
| 92 | 4 | சூழ்ர்ங்க | சூழரங்க |
| 96 | 6 | த்வங்வசாத் | த்யங்வசாத் |
| 97 | 14 | தை ‖ | தை: ‖ |
| 104 | 11 | யதீந்த் | யதீந்த்ர |
| 124 | 28 | ஈன்றேனே | ஈந்தேனே |
| 134 | 4 | சயித்துது | சயித்து |